

தியாகராஜக் கவிராயர் இயற்றிய

# மயூராசல புராணம்

மயிலம் பொம்மபுர ஆதீன வெளியீடு – 2013

மயிலம் – பொம்மபுரம்.

வெளியீடு எண்: 87

# நூல் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | மயூராசல புராணம் |
| ஆசிரியர் | : | தியாகராஜக் கவிராயர் |
| முதற்பதிப்பு | : | 2014 |
| உரிமை & வெளியீடு | : | மயிலம் பொம்மபுர ஆதீனம்<br>மயிலம் – 60304<br>பொம்மையபாளையம் – 605104 |
| பொருள் | : | தலபுராணம் |
| அளவு | : | 1/8 டெமி |
| புள்ளி | : | 12 புள்ளி |
| பக்கங்கள் | : | 157 |
| விலை | : | ரூ. 100/- |
| வடிவமைப்பு | : | கபிலன் ஒளியகம், புதுச்சேரி-8 |
| அச்சிட்டோர் | : | சூர்யா பிரிண்ட் & சொலூசன்ஸ்<br>சிவகாசி. |

ISBN - 978-81-926955-3-2

இந்நூல் திருவள்ளுவர் ஆண்டு 2046, ஜய வருடம், வைகாசித் திங்கள் 18ஆம் நாள் 01.06.2014 ஞாயிற்றுக்கிழமை அன்று பொம்மையபாளையம் ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் திருமடத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீவிநாயகர், நிஷ்டையினால் தந்திருமேனியை தஞ்சடராக்கினியால் திருநீறாக நீற்றிக் கொண்டஆதிசிவஞான பாலய சுவாமிகள் சிவயோக ஜீவசமாதி, ஸ்ரீபாலசுப்பிரமணிய சுவாமி, ஆதீன 3, 14, 15, 16, 17 ஆம்பட்டம் குருமகா சந்நிதானங்களின் சிவயோக சமாதிகளைப் புதுப்பித்தும், 18, 19ஆம் பட்டம் குருமகாசந்நிதானங்களின் சிவயோக சமாதிகளைப் புதியதாக எழுப்பித்தும் நிகழ்ந்த திருக்குட நன்னீராட்டுப் பெருவிழாவின் நினைவு மலராக வெளியிடப் பெறுகிறது.

உ

முருகன் துணை

முகவுரை

வெண்பா

இரங்குந் திருவுள்ளத் தேற்றமுற்ற செவ்வேள்
வரங்களெல்லா நல்கு மலைகேள் - குரங்குஅனைய
பாழ்மனமே பல்கோடி பத்தர் பரிசுபெற்று
வாழ்மயிலத் துள்ள மலை

வசனம்

"மயூராசல புராணம்" என்பது ஆறனுருபடியாகப் பிறந்த அன்மொழித் தொகையாய் இந்நூற்குக் காரணக் குறியாயிற்று. மயிலாகிய மலையினது பழமையான கதையைச் சொல்லும் நூலென்னும் பொருளைத் தந்து நிற்பதாம். மயூரம் அசலம் புராணம் என்னும் மூன்று பதங்களைக் கொண்ட தொடர்மொழி முடிபுஎன்க.

இதனை இயற்றிய ஆசிரியராவார் பழமலை என்னும் விருத்தாசலத்தில் வேளாளமரபில் உற்பவித்து விளங்கிய தியாகராஜக் கவிராயர் என்னும் விவரம் இதனது முதற்பதிப்பின் பாயிரத்தில்,

"நிலமகண் முகத்துத் திலகமெனவாங், கங்கையின் வீசம் பங்குபுகழ்மிகூஉந், துதிமணிமுத்த நதிவிளிம்புடுத்த, விருத்தகிரியில் திருத்தமாவாழுந், தியாகராசச் செம்மனன்குரைத்த, சூர்முதல்தடிந்த சுடர்மிகும்வேலோன், மலரயன்தன்னைத் தலைமிசை புடைத்தோன், அரிஅருமகன் எனும் திருமுருகன், வள்ளிதெய்வப் பிடிஉள்ள நனிமகிழ்வரன், வதிமயூராசலப் பதிபுராணத்தை, வம்மின் என்றனமிடும் பொம்மயநகரினு, முன்மொழிமயிலத் தென்மலையதினும், வீற்றிருந்தருளும் போற்றரும்வீர சைவசமய சற்குருராயன், பல்லுயிர்த் தொகுதியும் பயன்கொண்டுய்வான், அல்லருள் சுரக்கு நாட்டவானவன், மானிடஉருவை மறைத்தடியவர்க்காய் மானிடஉருக் கொளும் ஞானக்கிழவன், மெய்யைப் பொய்யா விளங்கப் பகரும் செய்யவா-யினன் தெய்வசிகாமணி, தவமுடையவர்க்குறும் பவமதைப் போக்கும், சிவஞான பாலைய தேசிகன் பரிவொடு, மெச்சிட உலகெலாம் அச்சிட்டு ஈக என, வரிதெனப் பகரும் பிரதி பலகொடுவந்து, வாய்ந்தவன்போல் ஆய்ந்து விரைவினில் எழுதா எழுத்திற் பழுதறப் பதித்தனன்" எனப் பகர்ந்தமை கொண்டு பெறக் கிடக்கின்றது.



இதனை இவர், பாயிரம் நைமிசாரண்யச் சிறப்பு, நாட்டுச்சிறப்பு, நகரச் சிறப்பு ஆகிய பூர்வாங்கப் பகுதியும், திருக்கைலாயச் சருக்க முதலாகத் தீர்த்தமகிமைச் சருக்கம் ஈறாகவுள்ள பத்துப் பிரிவுமாகச் சூதமுனிவர் கூற்றில் வைத்து மொத்தம், கூஉகூ திருவிருத்தங்களால் இயற்றியுள்ளார்.

இவரது கவிகள் செம்பாகமான நடையில் சொல்நயம், பொருள்நயம் செறிய யாத்துள்ளதும் அன்றி ஒவ்வொரு சருக்கத்து முகப்பிலும் ஸ்ரீமுருகக் கடவுளைத் துதித்திருப்பதால் இவரது பக்தித் திறமை வெளிப்படுகின்றது. தேவராதியர் வருசருக்கத்தில் பத்தாவது கவியில் "மாயவன்துணைத் தேவியாம் திருவொடும் வளர்சிறைக் கழல்உன்மேற் தூயவின்பு பாகவதர்கள் சூழ்ந்து நற்றுதி நவின்று இருபாலும், ஏயிடக் கதிராழியே முதல் அடல்வீறும் ஐம்படை மல்க..... சேர்ந்தனன்", என விதந்துள்ளமையால் வயிணவத் துவேஷமில்லாதவர் என்பதும் இதுபோன்றே அம்பிகை, விநாயகர், பரமசிவன் முதலிய மூர்த்திகளை ஆங்காங்கு சிறப்பித்து ஓதுவதால் வைதிக சமயங்கள் ஆறும், முருகனது ஆறு திருமுகங்களெனக் கொள்ளும் மேல்நிலைக் கௌமார நிச்சயத்தில் ஒருவாறு பொருந்தியவராகவும் தெரிகின்றது. தீர்த்தமகிமைச் சருக்கம், உச-வது கவிமுதல் மூன்று கவிகளில் பாலசித்தர் ஆதீனபீடத்தில் பதினைந்தாவதாக அமைந்த சிவசுப்பிரமணிய பாலைய சுவாமிகள் கோபுரத் திருப்பணி செய்தது முதலிய பிரதாபங்களைச் சிறப்பித்துக் கூறுவதாலும், அவரது காலம் எழுபத்தைந்து வருடங்களுக்கு முந்தியிருப்பதாலும், அதேகாலம் இந்நூலாசிரியரான தியாகராஜக் கவிராயருடைய காலம் என்பது நன்கு விளங்குகிறது.

இப்புராணம் அதே காலத்தில் மேற்படி சுவாமிகளது அநுமதியில் முதற்பதிப்பு அச்சிட்டு வழங்கப்பட்டது. இப்போது அந்த ஆதீனத்தில் பதினெட்டாவது பட்டத்திற்கு அமைந்து பொம்மயபாளையம் பெரிய மடாலயத்திலும், மயூராசல மடாலயத்திலும், அதைச் சார்ந்த பல கிளைமடங்கள் தேவஸ்தானங்களிலும், தலைமைவகித்து, உலகியல், அருளியல் இரண்டும் ஒருங்கு தழுவி நடாத்தும் தகுதி வாய்ந்து, ஸ்ரீவல்லி தேவசேனாம்பா சமேத சுப்பிரமண்ய மூர்த்தியின் ஆலய நித்திய நைமித்திக தருமபரிபாலனம் புரிந்து வருபவரும், வடமொழி தென்மொழிப் புலமை ஒருங்கு வாய்ந்து ஒழுக்கம், ஆசாரம், சத்தியம், உதாரம் முதலிய உத்தம லக்ஷணங்கள் அமைந்துள்ளவரும் சிதம்பரத் தலத்தில் கந்தசாமி ஐயரவர்கள் என்னும் வீரசைவ சிரேட்டரது குமாரருமாகிய ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலைய தேசிக சுவாமிகளால் இரண்டாம் பதிப்புப் பதித்து வெளியிடப்பட்டுள்ளது.

மயூராசல அதிபதியாய்த் திருக்கோயில் கொண்டு அடியவர் விருப்பம் முடிவுற அளிக்கும் வள்ளலாகிய, ஸ்ரீவல்லிதேவசேனா சமேத சுப்பிரமண்ய மூர்த்தியின் திருவுருவப் படமும், ஸ்ரீசிவஞான பாலசித்தரது, ஆதீன பீடத்தின் பதினைந்தாவதான சுவாமிகளது திருவுருவப்படமும் சேர்த்துப் பதிந்துள்ளது அன்பர்கள் உள்ளத்தை ஆனந்தப்படுத்தும் என்பது உண்மை.

இஃது அன்றியும், முதல் பாலசித்தரது திருவருளுக்குப் பாத்திரமாய் அவதரித்து முருகன் திருவருளைக் கரதலாமலகம்போல் பெற்று அனந்தம் சித்திகள் இயற்றி ஐந்நூறு வருடம் இருந்து அடைந்த இரண்டாவது பட்டத்துச் சிவஞான தேசிக சுவாமிகளது திவ்ய சரித்திரத்தை இப்போதுள்ள பதினெட்டாவது பட்டம் சுவாமிகள், திருவாமாத்தூர்க் கௌமார மடாலயம், மஹான் வண்ணச்சரபம், திருப்புகழ்ச் சுவாமிகள் முருகதாச சுவாமிகள் என்கின்ற ஸ்ரீலஸ்ரீ தண்டபாணி சுவாமிகளது குமாரரும் மாணாக்கரும் ஆன, செந்திநாயகம்பிள்ளை என்பவரைக் கொண்டு செய்யுள் நடையாக இயற்றுவித்து, சிவஞான தேசிகப் பிரதாபம் என்னும் பெயரில் அமைந்த நூற்றுப் பத்து விருத்தங்களையும், மயூராசலபுராணத்தின் அநுபந்தமாக ஒன்றின முடித்ததென்னும் உத்தி பற்றி அச்சிட்டுத் துலக்கியது மிகவும் அருமையாகும். சுபம்.

**வெண்பா**

பாலசித்தனோடு அவன்தாள் பற்றுசிவ ஞானியும்அச்
சீலன் மரபில்வரும் தேசிகரும் வேல்அணிகைச்
செவ்வேளும் மன்னவன்தன் தேவியரும் தொண்டர்களும்
எவ்வே ளையும்வாழ்க வே.

இங்ஙனம்
பிரமோதூத ஆண்டு — **கந்தசாமி ஐயர்,**
கும்பரவி — குமாரசாமி ஐயர் குமாரர்
விருத்தாசலம்

**வேலும் மயிலும் துணை**



உ

**முருகக் கடவுள் துணை**

**பதிப்புப் பாயிரம்**

திருவாமாத்தூர் கௌமார மடாலயம்
ஸ்ரீதண்டபாணி சுவாமிகளது குமாரர் தி.மு.செந்திநாயகம்பிள்ளை அவர்கள் இயற்றியது

**அறுசீர் விருத்தங்கள்**

*பண்பாடும் வண்டுமலி பசும்துளவத் திருநெடுமால் பரவுசீர்நற்*
*பெண்பாவும் இடப்பாகம் பிறைமவுலிகொளும் பெருமான்பேசும் சொல்லால்*
*திண்பார்இலர் உள்உருக்கொள் சிவஞானபாலையப் பேர்ச்சித்தன் தன்னால்*
*வண்பான்மை பொலிந்துகுகன் தலங்களின் மேலாய்உளது மயிலக்குன்றம் (1)*

**விளக்கம்:** பண்இசைக்கும் வண்டுகள் நிறைந்த பசுமையான துளவம் விரும்பும் திருமால் பரவவும், நற்பெண்ணை இடப்பாகத்துக் கொண்டு பிறைசூடியிருக்கும் சிவனுக்கு உகந்த இனிய தமிழால் திண்பார்இலாதவர் உள்ளத்து வீற்றிருந்து அருள்புரியும் சிவஞான பாலையர் எனும் பேர்கொண்ட சித்தன் தன் வள்ளல்தன்மை மிகுந்து விளங்கும் குமரன் உறையும் தலங்களில் எல்லாம் மேலாய் அமைந்துள்ளது மயிலக்குன்றம்.

*அக்கிரிதான் பூருவத்தில் அமைந்ததுவும் கயிலையின்முன் அருட்கௌமாரி*
*மிக்கியல்சொற்படி காவல்செயத் தவறும் கணத்தலைவன் வியன்பாருடு*
*முக்கியமாம் தவவடிவாத் தோன்றிஅங்குசேர்ந்ததுவும் முருகப்புத்தேள்*
*சக்கினெதிர் திகழ்ந்தருள விழைந்துதவம் புரிந்ததுவும் தகைசால்வள்ளி (2)*

**விளக்கம்:** அத்தகு சிறப்புடைய மலை முற்காலத்தில் கயிலையில் உமாதேவியின் சொற்படி காவல் தொழில் புரிந்து வந்த கணங்களின் தலைவன் தன்தொழிலில் தவறிய காரணத்தால் இப்பாருலகில் தவவடிவாகத் தோன்றி, முருகப் பெருமானின் திருவருள் பெறுதற்குத் தவமியற்றிய பொழுது வள்ளியம்மை,

*குஞ்சரிவந்து எழில்கிரியில் அமர்ந்ததுவும் சித்தன்எதிர் குகன்போர்ஆற்றி*
*மிஞ்சநலித்த தற்பினிசம் விளக்கியருள்அளித்ததும்அம் மின்னார்தம்மைக்*
*கஞ்சமலர்க் கரங்கொடவன் மணம்புணர்ந்து சித்தனொடு கவின்றவாறும்*
*வஞ்சகப்புன் சமயவகை அறுத்துமறை நெறிச்சமயம் வளர்த்துப் பன்னாள்(3)*

**விளக்கம்:** தெய்வானை இருவரும் வந்து இம்மலையில் சித்தருக்குக் காட்சி தந்து எழுந்தருளினர். இவ்விருவரையும் காணும்பொருட்டு வந்த குகனோடு போர்செய்து தன்பாபங்களெல்லாம் தீர்ந்தார் சித்தர். மேலும் வள்ளியையும், தெய்வானையையும் மணம் புரிந்து சித்தரை ஆட்கொண்டு மற்ற புன்சமயங்களையெல்லாம் தவிர்த்து மறைகூறும் நெறியால் அமைந்த வீரசைவ சமயத்தை வளர்க்கும் பொருட்டுப் பலநாட்கள்

*சித்தர்பிரான் திருஅருள் ஆடல்கள்புரிந்து குகன்தளியின் தென்பான்மேவி*
*நித்தம் இமையோர் முனிவர் மனிதர்தொழ இலிங்கஉரு நிகழக்காட்டி*
*உத்தமப்பேறு அளிப்பதுவும் அவன்வழிச்சீடர்கள்அறஞ்செய்து ஒளிரும்வீறும்*
*புத்துஅமுதம் அனையசுவைப் புண்ணியதீர்த்தங்கள் அவண்பொலிந்தசீரும்(4)*

**விளக்கம்:** சித்தர் திருஅருள் ஆடல்கள் புரிந்து குகன் கோயிலின் தென்பால் இருந்து நித்தமும், வானுலகோரும், முனிவரும், மனிதரும் தொழும்படி இலிங்க உருக்கொண்டு, தன்னை வணங்கியோர்க்கு உத்தமப் பேறு அளித்தும், அவர்மரபில் சீடர்கள் அறத்தொண்டு ஆற்றவும், ஒளியும், வீரமும் வழங்கும் புதுஅமுதம் போன்ற சுவையுடைய புண்ணிய தீர்த்தங்கள் பலவும் அங்கு பொலிந்து விளங்கும்.

*திரட்டிஒரு புராணம்எனச் சிறந்தபழ மலைப்பதிவாழ் தியாகராசன்*
*வரப்பொலிவார் தரஅனைந்தான் உத்தமர்அச்சிட்டு உலகில் வயங்கவைத்தார்*
*பரப்பும்அது பலநாள்சென்று அதனால் புத்தகம்கிடையாப் பண்பைநாடி*
*நரப்படிவம் காட்டிஉள்ளில் அருட்கடலாக்கு உலவும்ஒரு நல்ல தூயன்(5)*

**விளக்கம்:** இத்தகைய பெருமைகளையெல்லாம் நவிலும் இதை ஒரு புராணமாக இப்பழமலையில் வாழும் தியாகராசன் தர விரும்பினார். அச்சுவடிவில் அப்புராணத்தை உலகில் நிலைபெறும்படி பரப்பினார். நாட்பல கழிந்தபோது அப்புத்தகம் மறைந்துபோனபோது, மனித உருவில் வந்து உள்ளத்தில் அருட்கடலை உருவாக்கும் ஒரு தூயவன்

*பதினெட்டுத் திருவிழிகொள் பன்னிருகைச் சண்முகன்தாள் பரவிஞான*
*விதிதொட்டுச் சரியைகிரி யாயோகசா தனங்கள் விளக்குமேலோன்*
*கதிநட்டுத் தவம்புரிவோர் கல்விவிருப்பு உறுபுலவோர் களித்துக் காண*
*மதிஎட்டும் தெளிவுஉடையோன் பதினெட்டாம் பாலையனா வந்தசீலன்(6)*

**விளக்கம்:** பதினெட்டுத் திருவிழிகளும், பன்னிரு கரங்களும் உடைய சண்முகன் தாள் அடைந்து ஞானவிதிகளாகிய சரியை, கிரியை, யோக சாதனங்கள் கொண்ட மேலானவன், கதிவிலகுதற் பொருட்டுத் தவம்புரிவோரும், கல்வி-யின்மீது விருப்பம் கொண்ட புலவரும் மகிழ்ந்து காணும்படி, ஞானம்நிறைந்த தெளிவுடையன் பதினெட்டாம் பாலையனாக வந்த சீலன்

*இரண்டாவதாம்பதிப்புச் செய்துஉலகோர்க்குஉதவுநலம் எண்ணித் தாழா*
*முரண்டாங்குபுறச்சமயர் களும்பயம்கொண்டுஅடங்கு திறன் முருகோன்தண்டைச்*
*சரண்தாழ்ந்து தருமவழிப் பொருள்மகிழ்வினொடு கொடுத்துத் தகவே செய்திட்டு*
*அரண்டுஆழா மயிலமலைத் தலைபலர்க்கும் அமுதம்என அளித்தான் மாதோ (7)*

**விளக்கம்:** இந்நூலை இரண்டாம் பதிப்புச் செய்து உலகோர்நலம் பெறவும், பணியாது தம்மோடு முரண்படும் புறச்சமயர்கள் பயம்கொளவும், திறமுடைய முருகன் தாள்களைச் சரணடைவதற்கும் மகிழ்ந்து பொருளுதவி செய்து, பிறவிப் பயத்தில் ஆழ்ந்து விடாதவண்ணம் மயிலைமலை வாழும் பலருக்கும் அமுதம் என அளித்தனன்.



*உமாபதிகள் கருணையினால் அமுதுகடைந்துஅன்று அமரர்க்கு உள்ளத்தாரும்
செமாதாரத்தால் ஊட்டுபரந் தாமனதுசெயன்மேலோ திறல்சேர்சைவக்
குமாரசாமிப் பெயர்ப்பாலைய முனிவன் மயிலமலைக் குமரன்காதை
சமானம் இலாஅச்சு இயற்றிப் புத்தகம் தந்ததுமேலோ தவத்தினோரே(8)*

**விளக்கம்:** அமரரும், தன்னை உள்ளத்தில் வணங்கும் பக்தர்களும் மகிழும்படி தனது செம்மாா்ந்த வீரத்தாலும் உமாபதி கருணையாலும் பரந்தாமன் அமுது கடைந்து தந்தது மேலாகுமா? அல்லது திறன்மிகுந்த சைவக்குமாரசாமி என்னும் பெயருடைய பாலைய முனிவன் மயிலமலைக் குமரன் காதையாம் இம்மயூராசலபுராணத்தை ஒப்பிலாத அச்சுவடிவில் புத்தகமாகத் தந்தது மேலாகுமா என்று தவத்தினோர் கருதுவர்.

*தன்ஒருநற் பெருமையினையே துலக்கி முன்இருந்த சான்றோர்தம்சீர்
பின்ஒருவர்க்கு இனிதுஎடுத்து உரையாதோர் பலர்உலகிற் பிறங்கல்உண்டு
முன்ஒளிர்ந்த பாலசித்தன் அவன்அருள் சேர்சிவஞானி முதலோர்சீர்த்தி
பொன்ஒளிர் மேருவில் விளக்கேபோல் விளங்க இப்பெரியன் புரிந்தான் மாதோ (9)*

**விளக்கம்:** தனது ஒருநற்பெருமையையே பெரிதாகக் காட்டி, தனக்கு முன்னிருந்த சான்றோர்கள் பெருமைகளைத் தன்பின் ஒருவருக்கும் இனிதுற எடுத்துக் கூறாத பலர் நிறைந்த இந்த உலகில், முற்காலத்துத் தோன்றி ஒளிபொருந்தி விளங்கிய பாலசித்தன், அவன்அருள் சேர்சிவஞானி ஆகியோர் பெருமைகளை, பொன்போல் ஒளிரும் மேருமலையின்மீது வைத்த விளக்கைப் போல விளங்கச் செய்தான் இப்பெரியோன் ஆவான்.







## பதிப்புப் பாயிரம்

*திருவாமாத்தூர்க் கௌமார மடால்யம் ஸ்ரீதண்டபாணி சுவாமிகள் பௌத்திரர் தி.செ.முருகதாசபிள்ளை இயற்றியது*

### அறுசீர் விருத்தங்கள்

*செம்மைய பொழில் சீர்தாங்கித் திரைகடல் கரையில் ஓங்கும்*
*பொம்மைய புரத்தின் முன்பு புனித ஆச்சிரமம் சேர்ந்து*
*வெம்மையல் அறும்தவத்தின் மேவித் தன்பால்அடைந்தோர்*
*தம்ஐயம் தவிர்த்து வீர சைவ தேசிகனா வாழ்ந்து* 1

**விளக்கம்:** செம்மைமிகுந்த வயல்வெளிகளுடைய அலைகடல் கரையில் அமைந்திருக்கும் பொம்மையபுரத்தில் முற்காலத்திலிருந்து ஆசிரமம் அமைத்து வெம்மையாம் மையல் அறும்படி தவம்மேற்கொண்டு தன்னை அடைந்தோர் தமக்கும் ஐயங்களைத் தீர்த்து வீரசைவ தேசிகனாய் வாழ்ந்து,

*சகத்திர வருடம் கள்ளி தனதுபால் அருந்திப் பொல்லார்*
*அகத்தினால் கடலில் ஆழ்த்த அரும்கரை சேர்ந்து மஞ்ஞை*
*நகத்தில்வந்து அருங்கல் கண்டாய் நன்மணல் குளமாச் செய்து*
*சகத்தினில் யாரும் போற்றத் தக்கபல் விளையாட்டு ஆற்றி* 2

**விளக்கம்:** ஆயிரமாம் வருடத்தில் கள்ளிப்பாலை அருந்தி, பொல்லார் சூழ்ச்சி–யினால் கடலில் மூழ்கடிக்க, முன்கரை சேர்ந்து, மயூராசலம் அடைந்து அரிய பேறு பெற்றாய். நன்மணலைச் சருக்கரையாகச் செய்து இவ்வுலகில் யாரும் போற்றத் தகுந்த பல விளையாட்டுகளையும் காட்டி,

*பாலையன் எனப்பேர் பூண்டு பகர்சிவப் பிரகா சன்பால்*
*வேலையன் சென்று பாடல் விளம்புஎனப் பெற்றுச் சைவ*
*நூல்ஐயம் இன்றிக் கூறு நுணுக்கமும் அமையக் கொண்ட*
*மேலையன் இணங்கி வாழும் வியன் உடைத்து ஆதலாலே* 3

**விளக்கம்:** பாலையன் எனும் பெயர் கொண்டு மொழிவல்ல சிவப்பிரகாசனிடம் சென்று, பாடுக என்று பெற்று, ஐயம் இல்லாததும் நுணுக்கம் நிறைந்ததுமான சைவநூல் அமைந்ததாலே, மேலுலகாளும் ஐயன் விரும்பி வாழும் பெயர் பெற்றதும் ஆகிய,

*சீர்கொண்ட முகம் ஓர்ஆறும் செவிகொண்ட குழைஈர் ஆறும்*
*தார்கொண்ட புயம் ஈர்ஆறும் தயைகொண்ட விழிமூ ஆறும்*
*ஏர்கொண்ட கனி வாய்ஆறும் எழில்கொண்ட பொறிஓர் ஆறும்*
*கூர்கொண்ட வேலும் தாங்கும் குகன்கொண்ட தலம் ஆறேனும்* 4

**விளக்கம்:** அழகுடைய ஆறுமுகங்களும் ஒன்றானதுபோல, செவிகொண்ட பன்னிரு குழைகளும் ஒன்றானதைப் போல, மாலைகள் அணிந்த தோள்கள் ஈர்ஆறும் ஒன்றானதைப் போல, கருணை நிறைந்த பதினெட்டு விழிகளும்



ஒன்றானதைப் போல, அழகு பொருந்திய கனிபோன்ற வாய்கள் ஆறும் ஒன்றானதைப் போல, எழில் நிறைந்த ஆறு பொறிகளும் ஒன்றானதைப் போல, கூர்மையான வேலாயுதத்தைக் கையில் உடைய குகன் குடியிருக்கும் தலங்கள் ஆறும் ஒன்றானது மயூராசலம் ஆகும்.

*கயிலை மலையும் தென்றல்சீர் கவின்தரு பொதியை என்னும்*
*சயில மலையின் சீர்ச்செந்தூர்ச் சந்தனக் கிரியும் வேலன்*
*பயில மலைகள் எல்லாமும் பார்த்துஉள நாணும் சீர்தோய்*
*மயிலமலை எனும் ஒன்றே மாண்புடைத்து ஆகும் அன்றே* 5

**விளக்கம்:** கயிலை மலையும், தென்றல் விளையாடும் பொதியை என்னும் சயில மலையும், செந்தூர் சந்தன மலையும், வேலன் விளங்கும் இன்னும் பல மலைகள் யாவும் கண்டு உளம் நாணும் வண்ணம் அழகும் மாண்பும் பெற்றது மயிலமலை என்னும் மயூராசலம் ஒன்றே ஆகும்.

*அத்தனி மலையின் காதை அதில்வளர் குமரன் சீர்த்தி*
*வித்தகப் பால சித்தன் வியன்பொலி சிறப்புத் தீர்த்தத்(து)*
*உத்தம மகிமை யாவும் உரைத்தனன் விருத்தக் குன்றின்*
*அத்தவே வருதியாக ராசநா வலன்முன் னாளில்* 6

**விளக்கம்:** அத்தகு தனிப்பெருமை உடைய மலையின் கதையும், அதில் விளங்கும் குமரன் பெருமையும், அங்கு உறையும் வித்தகனாம் பாலசித்தனின் வியத்தகு பொலிவுச் சிறப்பும், அம்மலையுள்ள தீர்த்தத்துக் குணமகிமைகளும் முற்காலத்தில் புராணமாகப் பாடினான் விருத்தக்குன்றத்தில் வாழ்ந்த தியாகராச நாவலன் என்பான்.

*உத்தமர் அச்சிட்டு அந்நாள் உதவினர் இந்நாள் அந்தப்*
*புத்தகம் தீர்ந்ததாலே புதுப் பதிப்பு இயற்ற எண்ணி*
*மெய்த்தவப் பொலிவுஆசார மிகுதமிழ்ப் புலமை அன்பு*
*மெத்த மன்னுயிர்கண்மீது விளங்கு காருணியம் வாய்மை* 7

**விளக்கம்:** அப்புராணத்தை நல்லோர் அச்சிட்டு அந்நாளில் உதவினர். அப்புத்தகம் இந்நாளில் தீர்ந்ததாலே புதுப்பதிப்பு இயற்ற விரும்பி மெய்த்தவப் பொலிவும், ஒழுக்கம் மிகுந்த தமிழ்ப் புலமையும், அன்பும், மன்னுயிர்கள் மீது நிறைந்த கருணையும், வாய்மையும் கொண்ட,

*குமரசாமிப் பேர்வாய்ந்து குகன்விழி போறப்ன் னெட்டாம்*
*அமர்அருள் பாலையன்தான் அந்தஅந்தச் சருக்கம்தோறும்*
*எமரவர் தாமும்தேர்வான் இயல்கதைச் சுருக்கமும்சேர்த்(து)*
*அமரரும் வியக்க அச்சிட்டு அன்பினர்க்கு அளித்தான்அம்மா* 8

**விளக்கம்:** குமாரசாமி என்னும் பெயர்கொண்டு குகனது விழிகளாம் பதினெட்டுப் போல, பதினெட்டாம் பட்டமாக வீற்றுஅருளும் பாலையன் அந்தக்

கதைகள் யாவினையும் தமக்கு முன்பிருந்த பெரியோனின் இயல்கஸ்தயைச் சேர்த்து வானோரும் வியக்கும்படி அச்சிட்டு அன்பர்களுக்கெல்லாம் அளித்தான்.

**வேறு**

*பாலசித்தன் அருள்செயலால் உலகில்தோன்றிப்*
*பதிந்தசிவ ஞானதே சிகன்தன்சீர்த்தி*
*ஞாலம்உளோர் நன்குஅறியத் தமிழில்பாவாய்*
*நவிலஎழில் செந்திநாயகப் பேர்எந்தை*
*பால்அருளால் உரைத்துமயூ ராசலத்தின்*
*பழயபுரா ணத்தின்அநு பந்தமாகக்*
*கோலமுறப் பதித்துஅறிஞர்க்(கு) அளித்தஎங்கள்*
*குமாரசாமிப் பெயர்ப் பாலையன் சீர்வாழி* 9

**விளக்கம்:** பாலசித்தனாம் முருகப்பெருமானின் அருளால் உலகில் தோன்றி, நிலைபெற்ற சிவஞான தேசிகன்தன் பெருமையை உலகில் உள்ளோர் நன்கு அறியும்படி தமிழில் பண்ணமைந்த பாடல்களாய் கூறும் செந்திநாயகம் என்னும் பெயருடைய என்தந்தையின்பால் அருட்கொண்டு உரைக்கச் செய்து மயிலமலையின் பழைய புராணத்தின் அநுபந்தமாக அழகுறப் பதித்து அறிஞர்களெல்லாம் சுவைக்கும்படி அளித்த குமாரசாமி என்னும் பெயர்கொண்ட பாலையன் புகழ் வாழ்கவே.

**வேறு**

*தானதத்தனத் தானன தனனா*

*மாதவத்தி னில்சீரியர் உடனே*
*வாழ்வுஉறற்குஉனைப் பேணினன் வியனார்*
*சீதளத்துணைத் தாள்முடி மிசையே*
*சேரவைத்து அருள்பேறுஉற அருள்வாய்*
*மேதகைத்தவச் சீர்மிக உடையாய்*
*வீரநற்சைவத் தோர்அரசு எனவே*
*பாதபச்சிறப் பார்சிகி மலைவாழ்*
*பாலையப்பெயர்த் தேசிக மணியே* 10

**விளக்கம்:** அரிய தவத்தினில் வென்றோரும் உடனே வீடுபேறு எய்துவதற்கு உன்னைப் பேணுவர். பெருமைமிகு குளிர்ச்சிபொருந்திய குமரனது தாள்களைத் தலைமேல் கொண்டு அவர்களும் சேருமாறு அருள்வாய். மேதமைஉடைய தவத்திறம் நிறைந்தவனே, புகழ்மிகக் கொண்டவனே, நல்ல வீரசைவத்தவர்கள் கொண்டாடும் அரசு என விளங்குபவனே, குமரன் பாதம் பதிந்த மயிலை மலைவாழும் பாலையன் எனும் பெயர்கொண்ட தேசிக மணியே வாழியவே.

*முற்றிற்று*

**வேலும் மயிலும் துணை**



## ஸ்ரீஅருணகிரிநாத சுவாமிகள் இயற்றிய
## மயிலம் திருப்புகழ்

*தனதந்த தானன தானா தானா தனதானா*

*கொலைகொண்ட போர்விழி கோலோவாளோ*
*விடமிஞ்சு பாதக வேலோ சேலோ*
*குழைகொண்டு உலாவிய மீனோ மானோ சிறுமானார்*
*குயில்தங்கு மாமொழி யாலே நேரே*
*இழைதங்கு நூல்இடை யாலே மீதூர்*
*குளிர்கொங்கை மேருவி னாலே நானா விதமாகி*
*உலைகொண்ட மாமெழு காயே மோகா*
*வலையம்பு ராசியின் ஊடே மூழ்கா*
*உடல்பஞ்ச பாதக மாயா நோயால் அழிவேனோ*
*உறுதண்ட பாசமொடு ஆரா வாரா*
*எனைஅண்டி யேநம னார்தூது ஆனோர்*
*உயிர்கொண்டு போய்விடும் நாள்நீ மீதா அருள்வாயே*
*அலைகொண்ட வாரிதி கோகோ கோகோ*
*எனநின்று வாய்விட வேநீள் மாசூர்*
*அணியஞ்ச ராசனம்★ வேறாய் நீறா இடவேதான்*
*அவிர்கின்ற சோதிய வாரார் நீள்சீர்*
*அனல்அங்கை வேல்விடும் வீரா தீரா*
*அருமந்த ரூபக ஏகா வேறோர் வடிவாகி*
*மலைகொண்ட வேடுவர் கான்ஊடே போய்*
*குறமங்கை யாள்உட னேமா லாயே*
*மயல்கொண்டு உலாய்★அவள் தாள்மீ தேவீழ் குமரேசா*
*மதிமிஞ்சு போதக மேலா ஆளா*
*மகிழ்சம்பு வேதொழ பாதா நாதா*
*மயிலந்தண் மாமலை வாழ்வே வானோர் பெருமாளே*

**விளக்கம்**: கொலைத் தொழிலை உடைய அம்பு, வாள், விஷம், வேல் ஆகியவற்றை ஒத்த குண்டலத்தைத் தொடும் அளவு பாயக்கூடிய மீனோ அல்லது மானோ எனும்படி அமைந்திருக்கும் மாதர்களின் கண்களும், குயிலின் குரல் போல் அமைந்த இனிய பேச்சுக்களும், கண் எதிரே தோன்றும் நூலின் இழை போன்ற மெல்லிய இடையும், மேலே பொருந்தியுள்ள குளிர்ந்த மார்பகமும் மேரு மலையாலே, பல விதமாக மனம் கலங்கி, நெருப்பு உலையில் பட்ட நல்ல மெழுகு போல உருகி, காமமோகம் என்னும் அலை வீசும் கடலினுள் முழுகி, உடல் புலன்நோய்களுக்கு* ஈடாகி, பிணியால் அழிவேனோ?

கையில் உள்ள தண்டம், பாசக் கயிறு இவைகளுடன் ஆரவாரம் செய்து வந்து என்னை நெருங்கி, யமனுடைய தூதுவர்கள் என் உயிரைக் கொண்டு போய் விடும் அந்த நாளில் நீ உன்னுடைய மேன்மையான திருவடியைத் தந்து அருளுக.

அலை வீசும் கடல் கோகோ என்று வாய் விட்டு ஒலித்து ஓமிட, பெரிய மாமரமாய் நின்ற சூரன் வைத்திருந்த அழகிய வில்லும் அம்புகளும் வேறுபட்டுத் தூளாகவே, சுயம் பிரகாசமான ஜோதியைத் தன்னிடம் கொண்ட, நேர்மை நிறைந்த, பெரிய, பெருமை வாய்ந்த நெருப்பு உருவத்தில் திருக்கையில் உள்ள வேலைச் செலுத்திய வீரனே, தீரனே, அருமை வாய்ந்த அழகுள்ள உருவத்தவனே, ஒப்பற்ற ஒருவனே,

வேற்று வடிவமான (வேட) உருவத்துடன் வள்ளிமலையில் வாழும் வேடர்கள் வசிக்கும் காட்டுக்குள் சென்று, குறப் பெண்ணாகிய வள்ளியின் மேல் ஆசை கொண்டு, மோக மயக்கத்துடன் உலாவி, அவளுடைய பாதங்களில் மீது வீழ்ந்து வணங்கிய குமரேசா.

அறிவு நிறைந்த ஞான வேலனே, மாணவனாக உபதேசத்தைப் பெற்று மகிழ்ந்த சிவபிரான் வணங்கும் திருவடியை உடைய நாதனே, மயிலம் என்னும் குளிர்ந்த மலையில் வாழ்பவனே, தேவர்களின் பெருமானே.



உ

சிவமயம்

ஸ்ரீபாலசித்த குருவே நம



திருக்கயிலாய பரம்பரை மயிலம் பொம்மபுர ஆதீனம்

ஸ்ரீமத் சிவஞானபாலய சுவாமிகள் திருமடம்

மயிலம் – 604304. விழுப்புரம் மாவட்டம்

---

மயிலம் பொம்மபுர ஆதீனம் சீர்வளர்சீர் குருமகா சந்நிதானம்

20ஆம்பட்டம் சிவஞானபாலய சுவாமிகள் அருளிய

## ஆசியுரை

நிலங்களுள் முதன்மையானது மலை. தமிழ்க் கடவுள்களாகிய சிவபெருமானும் முருகப்பெருமானும் விரும்பி இருந்த புலமும் அதுவேயாகும். அவ்வகையில் அவர்களின் அம்சமாக விளங்கிய பாலசித்தரும் தம் தவம் முற்றி அமர்ந்த பெருமைக்குரியது மயிலமாமலையாகும்.

இம்மூவரும் நடத்திய திருவிளையாடலை மிக அற்புதமாகப் பதிவு செய்துள்ளது விருத்தாசலம் தியாகராஜக் கவிராயர் இயற்றியுள்ள மயூராசல புராணம். மயூரம், அசலம், புராணம் எனும்படியாக மூன்று பொருள்களில் அரிய காலக் கண்ணாடியாகத் திகழும் இப்புராணம் தமிழ் மொழியின் வளமைக்கு மேலும் ஒரு பெட்டகம் எனத் துணியலாம். பக்திச் சுவை ததும்பும் பாடல்கள் அனைத்தும் சொல் நயமும், பொருள் நயமும் நிறைந்து விளங்குவன.

இந்நூலின் முதற்பதிப்பு 15ஆம் பட்டம் ஸ்ரீசிவஞானபாலைய சுவாமிகளின் அருளாட்சிக் காலத்திலும் (1843 - 1887), இரண்டாம் பதிப்பு 18ஆம் பட்டம் ஸ்ரீசிவஞானபாலைய சுவாமிகளின் அருளாட்சிக் காலத்திலும் (1928 - 1965) வெளிவந்திருக்கிறது. அதன்பிறகு இத்தனை ஆண்டுகள் இந்த அரிய இலக்கியம் புதைந்தே இருந்திருக்கிறது.

இந்நூலை இயற்றியுள்ள விருத்தாசலம் தியாகராஜக் கவிராயரின் தமிழ்ப்புலமையைப் போற்றி, திருவாமாத்தூர்க் கௌமார மடாலயம் மஹான் வண்ணச்சரபம் திருப்புகழ்ச் சுவாமிகள் முருகதாச சுவாமிகள் என்னும் ஸ்ரீலஸ்ரீ தண்டபாணி சுவாமிகளின் குமாரரும் மாணாக்கரும் ஆகிய செந்தினாயகம்பிள்ளை முதற்பதிப்பு நூலிற்குப் பாயிரம் வழங்கியுள்ளார். இத்தகு பெருமையுடைய இந்நூலுக்கு இரண்டாம் பதிப்பில் விருத்தாசலம் குமாரசாமி ஐயர் குமாரர், கந்தசாமி ஐயர் முகவுரை வழங்கி அதனை மேலும் அழகுபடுத்தியுள்ளார்.

அதேபோல் இரண்டாம் பதிப்பின் பதிப்புப் பாயிரத்தை மகன் தந்தைக்கு ஆற்றும் தமிழ்ப் பெருமையாக வண்ணச் சரபம் ஸ்ரீதண்டபாணி சுவாமிகளின் பேரரும் செந்தினாயகம்பிள்ளை அவர்களின் புதல்வரு மாகிய முருகதாச பிள்ளை வழங்கிச் சிறப்பித்துள்ளார்.

*பேறுஎலாம் பெறஅடைந்தவர் தமக்குஅருள் பெம்மான்*
*ஆறுமாமுகப் பரன்உயர் சித்தனோடு அமர்ந்த*
*மாறுஇலா வளமயில் மலைநகரின் மாண்பு அனைத்தும்*
*கூறல்ஆவதோ ஒருவரோர் நாவினைக் கொண்டே*

என்று நூலாசிரியர் மயிலத்தின் பெருமையைக் கூற, 'ஒருவரின் ஒருநாவால் எவ்வாறு இயலும்' என வியப்பது இந்நூலுக்குப் பாயிரம் வழங்கியவர்களைப் போலப் பிறரையும் படிக்கத் தூண்டுவதாக அமைகிறது.

தலபுராண இலக்கியத்தின் நெறிப்படி அமைந்த இந்நூலில் கருவாக விளங்கும் மயிலையின் வளமும், மயிலையின் நாயகர்களாக விளங்கும் ஸ்ரீபாலசித்தர், அவர்தம் வழிவந்த ஸ்ரீசிவஞானபாலைய தேசிக சுவாமிகள் சீடமரபின் புகழும் மணந்து விளங்குகிறது. தெய்வங்கள் கூடித் திகழ்ந்த மலையாக, கயிலைக்கு இணையான மலையாக மயிலம் நிலைபெறுகிறது. ஆதலால் புராணத்திற்கான தலைப்பும் மயிலமே ஆகிறது.

நூலுள், ஆற்று வருணனையில், ஆற்றின் வளத்தைச் சித்தரின் பேரறிவுக்கு ஒப்பிட்டும், அவ்ஆற்று நீர் பல்வழி சென்று குளம், வயல் முதலியவற்றில் தேங்கிப் பயனளிப்பதைச் சித்தர் தம் அடியார்களுக்குப் பக்குவமுறையில் உபதேசம் செய்வதோடு ஒப்பிட்டும் அழகான காட்சியாக்கியுள்ளார்.

அதேபோல வயலில் பயிர்கள் உரம்பெற்று வளர்வது சித்தரிடம் அடியவர்கள் ஞானம் பெற்று விளங்கியதையும், பயிர்களின் நிமிர்வு,



சித்தரின் அடியவர்கள் வேறுதெய்வம் தொழாத தன்மையையும், ஒரே பக்கம் சாய்வது சித்தரை மட்டுமே தொழுவது என்பதாக உவமையால் காட்சிப்படுத்தியிருப்பது அழகின் அழகு.

திருக்கையிலையில் நைமிசவனத்து முனிவர்களிடம் சூதமுனிவர் கூறுவதாகப் புராணம் தொடங்குகிறது. உலகில் சைவநெறிகளும், சித்தக் கொள்கைகளும் நலிவடைந்து தீயபுறச் சமயங்கள் பரவும் வேளையில் உலகினைக் காக்கும் பொருட்டு கயிலையில் தென்திசைக் காவலராக இருந்த சங்குகன்னர் மயிலத்திற்குக் கிழக்குத் திசையில் உள்ள பொம்மபுரக் கடற்கரையில் அவதரித்தார். அங்கு ஓர் ஆச்சிரமம் வகுத்து, சித்திகள் நடத்தி, சிவயோகம் புரிந்து பக்தர்களுக்கு ஞானபோதம் புரிந்து வந்தார்.

பின்னர் தவம் மேலோங்கவேண்டி பெருமுக்கல் மலை முதலிய பல மலைகளுக்கும் வனங்களுக்கும் சென்று அங்குள்ள சித்தர்களுக்கும் முனிவர்களுக்கும் அநுக்கிரகம் புரிந்தும் தம் தவம் மேற்கொண்டும் வந்தார். அந்நாளில் நாரதமுனிவர் மயூராசலத்தின் பெருமைகளைக் கூறி அங்கு சென்று முருகப் பெருமானை நோக்கித் தவம் மேற்கொள்ள வேண்டினார்.

*தேங்கும் பலவும் சூதமும் உட்செறி மாதுளையும் நரந்தமும்தாள்*
*தேங்கும் கமுகும் கதலிகளும் ஒருங்கு நெருங்கும் பொழில்சூழ்ந்த*
*பாங்குதோறும் முனிவர்குழாம் பயிலும் தவச்சாலைகள் பலவா*
*ஆங்காங்கு அமுதத் தடநிறைந்த அணிமா மயிலை மலைகண்டான்*

எனப் பாலசித்தர் கண்ட காட்சியை மயிலமலையின் அழகுக் காட்சியை நூலாசிரியர் தம் பாடல்வழி நமக்கும் அழகுறக் காட்சிப்படுத்துகிறார். பாலசித்தர் மயிலமலையில் இருந்து மேற்கொண்ட தவத்தின் பெருமையை,

*காலை அடக்கிப் பொறிபணத்தைக் காணாது அடக்கி அதிகரிக்கும்*
*ஆலை அடக்கி அறிவுஒண்ணா மாந்தர்தம்மை வாய்அடக்கித்*
*தோலைஅடக்காது உதிர்த்துவளர் தூயதவம்செய் முனிவர்கடன்தம்*
*பாலையடக்கு மாகணங்கள் பயிலும் அழகு*

என்று அழகுபடக் காட்டுகிறார்.

சிவபெருமானைப் போலவே தன்னுடைய பக்தனைச் சோதிக்க முருகப்பெருமானும் விரும்ப, வரம்தரு காலம் தள்ளிப் போனது.

பல்லாண்டுகள் கடுந்தவம் இயற்றியும் முருகன் வரந்தராததை எண்ணி வள்ளி, தெய்வானையரை வேண்டினார் பாலசித்தர். இதனால் வள்ளி தெய்வானையர் முருகப் பெருமானோடு ஊடல் கொள்ள நேரிட்டது.

பரிபாடல் வள்ளிக்கும், தெய்வானைக்கும் முருகப்பெருமான் பொருட்டு நிகழ்ந்த ஊடலைக் குறிக்கிறது. ஆனால், இந்நூல் பாலசித்தரின்பொருட்டு வள்ளி தெய்வானையருக்கும் முருகப் பெருமானுக்கும் இடையேயான ஊடலை அழகுறக் காட்டுகிறது.

முருகப் பெருமானைப் பிரிந்த இருவரும் பாலசித்தரை அடைக்கலமாக அடைந்தனர். இதனைப் புராணம்,

*ஆனதனால் நமதருகினில் நில்லாதுஇங்கு அகல்தினை அண்ணைல்சிற்றம்*
*தான்அடைந்து நவிலஅதை மானறிந்துஅவ் விடை அகன்று தகுதெய்வானைத்*
*தேனையும் தன்னோடுவரும் பான்மைசெய இருவோரும் திகழ்வளம்சேர்*
*மானமயிலைக் கிரியில் தவம்புரியும் சித்தனிடம் வறநினைந்தார்*

எனும் அவர்தம் எண்ணத்தைச் சுட்டி அவர்கள் பாலசித்தரைத் தந்தையாய் ஏற்றதையும்,

*அன்னை தந்தையர்கள் போலவிரும்பி ஆதரித்திடுவை என்ன வியந்தே*
*மன்னுமெய்த் தவம் இயற்றிய நீரான் மங்கைமார் இருவரும் களிஎய்தி*
*இந்நிலைக்கண் எனைஆள்தருமாறே இன்று வந்ததென மன்றஉணர்ந்து*
*சொன்னவாசகம் மறுக்கிலென்றும்பாற் தொண்டுசெய்குவல்*

எனப் பாலசித்தரும் அவர்களைத் தம் மக்களாக ஏற்று அழகிய மாளிகை ஒன்று அமைத்து அவர்களை அதில் இருத்தித் தாம் காவல் புரிந்து வந்தார்.

இந்நிலையில் வள்ளி, தெய்வானையரைப் பிரிந்து வருந்திய முருகப் பெருமான் அவர்களைப் பல உலகங்களிலும் தேடிக் காணாது தமிழகத்தின் பல திருத்தலங்களிலும் தேடியதைக் காட்டும் வேளையில் கற்போரையும் அத்தலங்களுக்குத் திருத்தலப் பயணமாக இட்டுச் செல்லும் பெருமையையும் இப்புராணம் எய்துகிறது. பிரிவாற்றாது அவர் ஆற்றிய புலம்பல்கள் தலைவியைப் பிரிந்த தலைவனின் உளநிலையை வெளிப்படுத்துவதாக அமைவது சிறப்பு.

தேடலின் நிறைவில் முருகப் பெருமான் மயிலத்தில் உள்ள மாளிகையை அடைந்து உட்செல்ல முயன்றபோது, பாலசித்தரால்



தடுக்கப் பெற்றார். வள்ளி தெய்வானையர் உத்தரவின் பேரில் போர் மூண்டது. பீமன் அனுமனையும், அருச்சுனன் சிவபெருமானையும் பொருதிப் பலம்பெற்றதைப் போல பாலசித்தர் முருகப் பெருமானைத் தழுவியதால் பேறுபெற்றார். இக்குறிப்பு,

*பற்றினன் கரங்களால் பாரில் வீழ்தரக்*
*குற்றினன் சித்தனும் குப்புற்றே விழுந்து*
*எற்றினன் ஆவிஅன் னவனை இவ்வணம்*
*முற்றவும் மற்சமர் முயன்றிட்டார் அரோ*

*சிங்கமும் சிங்கமும் சீறிற்றோ எனப்*
*பொங்குஉறும் புலியுடன் புலிஉடன்று என*
*வெங்கயத்து உடன்ஒரு வேழம் ஏற்றுஎதிர்*
*தங்கிய நிலைஎனச் சமர்பு ரிந்தனர்*

எனக்கூறும் நூலாசிரியர் பாடலில் உணருமாறு உள்ளது. நிறைவில், தம்மொடு போர்புரிவது முருகப்பெருமானே எனத் தேர்ந்து கொண்ட பாலசித்தர்,

*அஞ்சலி செய்தனன் அடிபணிந் தனன்*
*செஞ்சொலால் துதித்தனன் செப்புவான் கடன்*
*அஞ்சணி மிடற்றினன் அல்கு சாபமது*
*எஞ்சிடத் தீர்த்த அருள்என்ன வேண்டினான்*

என முருகப் பெருமானைத் தொழுது அருள்தந்தருள வேண்டினார். முருகப் பெருமானும் பாலசித்தரை மெய்யுறத் தழுவி 'மயிலத்தில் என்னோடு இரும்' என வாழ்த்தி, வள்ளி, தெய்வானையரை ஊடல் தீர்க்கும் பொருட்டுத் திருமணம் செய்து தர வேண்டினார். பாலசித்தரும் அவ்வாறே செய்தார்.

இவ்வாறாக மணக்கோலம் கொள்ளும் மாமுருகனைத் தரிசிக்க மயிலத்தில் யாவரும் கூடியதை,

*ஈசன்மால்அயன் அமரரும்புகல் எண்டிசைக்கு உயர்அதிபரும்*
*மாசிலாமுனி வோர்களாதிய ஏனையோர்களும் மகிழ்வுடன்*
*ஆசிலாமயி லைப்பருப்பதம் அண்மிஉற்றது அறைந்தனம்*
*தேசுலாம்முரு கன்மணப் பரிசைத் தெரிந்திடு வாம்*

என வியந்து பாடுகிறார்.

தேவாதி தேவரும் போற்ற அமைந்த அம்மயிலைத் திருமணத்தை *கந்தவேள் இரு கன்னியர் தம்மையும் வந்து மாமயில் ஓங்கலின்*

*மாமணம் சிந்தை அன்பினில் செய்தமையாகத்* தம் இனிய தமிழ்ப் பாக்களால் வடித்துக் காட்டுகிறார் நூலாசிரியர்.

தொடர்ந்து மயிலத்தின் தீர்த்த மகிமைகளைப் பட்டியலிடுகிறார். இன்றைக்கும் இது அவ்வாறே நலம் பயப்பதைக் கண்ணுறும்போது மயிலத்தின் பெருமை தமிழ்ப் பெருமையோடு இணைந்து விளங்குகிறது. குழந்தைகளும், கன்னிப் பெண்களும், ஆண்களும், பக்தர்களும், பிணியர்களும், தானர்களும் யாவரும் வந்து குழுமித் தம் இடர் தீரும் தீர்த்தம் என விளக்கம் தருகிறார்.

இத்துடன் ஒருபகுதியாகிய மயூராசலப்புராணம் நிறைவடைய, தொடர்ந்து சிவஞானதேசிகப் பிரதாபம் 'ஒன்றினம் முடித்தல்' என்னும் உத்தியால் இடம் பெறுகிறது. ஸ்ரீபாலசித்தரால் கள்ளிப்பால் பிரசாதசேடத்தின்வழி அவதரித்த சிவஞானபாலையர் அவருக்குச் சீடராகியதை அழகுறக் காட்டுகிறார் ஆசிரியர்.

*அரியசந்நியா ஆச்சிரமம் கொடுத்து ஆசிரியத் தன்மைக்கு*
*உரியனாம் அபிடேகமும் புரிந்துதன் ஒருகலை அமைவித்துப்*
*பிரியமாகநீ பாலைஉண்டு அருள்நெறி பேணிஎண்ணறு தொண்டர்*
*பெரியதோர் சிவஞான தேசிகப்பெயர் பேசவாழ்கென*

வாழ்த்தியதைக் காட்டுகிறார்.

தொடர்ந்து அவர்தம் அருட்செயல்கள், அற்புதங்கள் என யாவற்றையும் காட்டும் அழகு இலக்கியச் சுவையோடு வரலாற்றுப் பெருமையும் உடையதாக அமைகிறது. அடுத்துத் தமிழுக்கே அமுதாக அமைந்த சிவப்பிரகாச சுவாமிகளின் வரலாறு நூலாசிரியரால் பாடப்பெறுகிறது.

'மனிதர்களைப் பாடேன்' என மறுத்த சுவாமிகள் கனவில் முருகன் வடிவில் சிவஞான பாலையரைக் கண்ட பின்,

*நனவு உதித்துச் சிவப்பிரகாசப் புனிதன் மனம்பதறி நான்என் செய்தேன்*
*சினஅவரத் தண்டை மயில் குமரகுருபரன் அருள்சேர் சிவஞானிக்குஎன்*
*தனதுகவிகூற இணங்காது உரைத்த பிழைஅகற்றத் தகுமாறு ஈதுஈன்ற*
*நகநறும் தமிழ்கொடு தாலாட்டு நெஞ்சுவிடு தூதும்*

எனப் பாடி மகிழ்ந்ததையும் அழகாக எடுத்துரைக்கிறார்.

தொடர்ந்து இந்நூலைப் பதிப்பித்த பதினைந்தாம் பட்டம் சுவாமிகளையும், பதினெட்டாம் பட்டம் சுவாமிகளையும் போற்றும்போது உலகம் மகிழ,



*நிலைபெற, அமுது கடைந்த செயலினும் பெரியது இந்நூலைப் பதிப்பித்தது* என வியந்து போற்றுவதோடு,

> *தன்னொருநற் பெருமையினையே துலக்கி முன்இருந்த சான்றோர்தம்சீர்*
> *பின்னொருவர்க்கு இனிதுஎடுத்து உரையாதோர் பலர்உலகிற் பிறங்கல்உண்டு*
> *முன்னொளிர்ந்த பாலசித்தன் அவன்அருள் சேர்சிவஞானி முதலோர்சீர்த்தி*
> *பொன்னொளிர் மேருவில் விளக்கே போல் விளங்க இப்பெரியன் புரிந்தான்*

என்றும் போற்றுகிறார்.

தமிழுக்கும் பக்திக்கும் பெருமை சேர்க்கும் இந்நூல் நம் மயிலத்துக்கும் திருமடத்துக்கும் மட்டும் உரியதன்று. ஆன்றோர், சான்றோர் யாவருக்கும் உரியதாக வேண்டும் எனக் கருதியே இத்தனை நாள் புதைந்திருந்த இப்பெட்டகத்தை உலகறிய மீண்டும் பதிப்பிக்க விரும்பினோம். இந்நூல் ஒவ்வொரு அன்பர் உள்ளத்திலும் இல்லத்திலும் நிறையவேண்டிய நூலாகும்.

இப்பதிப்புப் பணியில் தம்மை ஈடுபடுத்திக் கொண்ட காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரி மேனாள் முதல்வர் தமிழாகரர் தெ.முருகசாமி, மயிலம் ஸ்ரீமத்சிவஞானபாலைய சுவாமிகள் தமிழ், கலை, அறிவியல் கல்லூரி மேனாள் நூலகர் க.நக்கீரன், சித்தர் சிவஞானி கலை அறிவியல் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் சொ. அருணன் ஆகியோருக்கு எமது அன்பும் அருளும் ஆசியும் என்றும் உண்டு.

இந்நூலை உணர்ந்து கற்கும் அன்பர்கள் யாவரும் எல்லா வளங்களும் பெற்று உய்ய மயிலமாமலையில் மணக்கோலம் கொண்டருளும் ஸ்ரீசுப்பிரமணியர் திருவருளும், ஸ்ரீபாலசித்தர், ஸ்ரீசிவஞான பாலய சுவாமிகள் குருவருளும் முன்னிற்க என எண்ணி வாழ்த்துகிறோம்.

ஸ்ரீசிவஞானபாலைய சுவாமிகள்

உ சிவஞானபாலய

20ஆம்பட்டம்

# ஆதீன வரலாறு

மெய்யன்புடையீர், உண்மை, அறிவு, இன்பமே உருவாகி, உயிர்களின் மன, வாக்கு, காயங்களுக்கு எட்டாது நிற்கும் ஒருபெரும் பொருளாகிய பரம்பொருள், உயிர்கள் தன்னை மனத்தால் நினைத்தும், வாயார வாழ்த்தியும், மெய்யால் வணங்கியும் வரவேண்டும் என்று உயிர்கள்மீது கொண்ட எல்லையில்லாப் பெருங் கருணையினாலே அருள்திருமேனிகொண்டு குருவடிவில் எழுந்தருளியிருக்கும் திருநிலையங்களே திருமடங்கள் ஆகும். குருமார்கள் எழுந்தருளியிருக்கும் திருமடங்களைப் புனிதமாகப் போற்றுவதும், அவற்றின் சந்நிதிகளைப் புதுப்பித்து மூர்த்தங்களுக்கு எண்வகை மருந்து சாற்றித் திருக்குட நன்னீராட்டு விழாச் செய்விப்பதும் சிறந்த சிவபுண்ணியப் பணிகளாகும். பக்திநெறி தழைக்கவும், தமிழ்மொழியை வளர்க்கவும், மனித நிலையிலிருந்து இறைநிலையை அடைய உதவும் வாழ்வியல் ஒழுகலாறுகளைப் போதிக்கவும் தோன்றியவைகளே ஆதீனங்களும், திருமடங்களும் ஆகும்.

## ஆதீனத்தின் தோற்றம்

திருக்கயிலையில் (சிவபெருமானுக்கு) மேற்குத்திசைக் காவலராகவும், பூதகணங்களுள் ஒருவராகவும் விளங்கிய சங்குகன்னர் என்பார், சிவபெருமானின் அருளாணையின் வண்ணம் தென்னாட்டில் வீரசைவநெறி தழைத்தோங்கவும், சித்தர் கொள்கை வலுப்பெறவும் செய்யவேண்டி, கருவழித் தோன்றாமல் திருநீறு, உருத்திராக்கம், கல்லாடை, இட்டலிங்கம் அணிந்த திருமார்பு, செஞ்சடை, குண்டலமணிந்த திருச்செவிகள், சின்முத்திரையுடன் கூடிய வலக்கை, திருநீற்றுப்பை, மந்திரக்கோல் கொண்ட இடக்கையுடன் பால வடிவினராக ஏழாம் நூற்றாண்டில் பொம்மபுரம் என்னும் பொம்மையபாளையத்திற்கு நேரே கீழ்க்கடலின் கரையில் தோன்றினார். சங்குகன்னர் இளம்வயது பாலகனாகத் தோன்றியமையாலும், பலசித்துகளைச் செய்துமக்கள் உய்வெய்த நன்மைகள் செய்தமையாலும், கள்ளிப்பாலினை உணவாகக் கொண்டமையாலும் 'ஸ்ரீபாலசித்தர்' எனத் திருநாமம் பெற்றார்கள். பிரமநிலை உணர்ந்து தங்கியிருந்தமையால் சுவாமிகள் தோன்றிய ஊர் 'பிரம்மபுரம்' என அழைக்கப்பெற்று, பின்னர் 'பொம்மபுரம்' என மருவி தற்போது 'பொம்மையபாளையம்' என அழைக்கப்பெற்று வருகிறது.



ஸ்ரீநாரதப் பெருமானின் வாக்குப்படி ஸ்ரீபாலசித்தர் மயிலமலையை அடைந்து அங்குள்ள சுனைகளில் நீராடி, முருகனை நோக்கி, பதுமாசனத்திருந்து 32 ஆண்டுகள் கடுந்தவம் இயற்றினார். பின்னர் பஞ்சாக்கினி நடுவிலிருந்து கடுந்தவம் புரிந்தும், முருகப்பெருமானின் அருள்கிட்டாததால் முருகனின் தேவியராகிய வள்ளி, தெய்வயானையரை நோக்கித் தவம் செய்தார். ஸ்ரீபாலசித்தரின் தவவலிமையை உணர்ந்த தேவியர் ஸ்ரீபாலசித்தருக்கு அருள்புரியுமாறு முருகப்பெருமானிடம் வேண்டினர். முருகப்பெருமானோ, "அருள்புரியும் காலம் வருந்துணையும் யாம் அமைதியாக இருப்பதனை அறியாமல் அவருக்கு அருள்புரிய வேண்டுமென்று வற்புறுத்தும் நீவிர் இருவரும் எம்மைவிட்டு அகல்வீராக" என ஆணையிட்டார். முருகனிடம் ஊடல் கொண்ட தேவியர் இருவரும் சித்த கன்னியராக வடிவம் கொண்டு ஸ்ரீபாலசித்தர் முன் தோன்றினர். ஸ்ரீபாலசித்தரும் தமது ஞானவல்லமையால் வந்திருப்பவர்கள் முருகப்பெருமானின் தேவியரே என்பதை உணர்ந்து அவர்களைத் தம் புதல்வியர்களாகப் போற்றிக் காத்து வந்தார். காலம் கனிந்த நிலையில், முருகப்பெருமான் அரசர் வடிவத்தில் வந்தபோது அவரிடம் ஸ்ரீபாலசித்தர் போர்புரிந்து, பின்னர் மற்போரில் மெய்தீண்டல் ஏற்பட்டதும் தம்முடன் போர்புரிவது முருகப்பெருமானே என்பதை உணர்ந்து கொண்டார். "அடியேன் என் புதல்வியர்களாகப் பாவித்த இக்கன்னியர்களை, தேவரீர் மணமுடித்து மணக்கோலத்துடன் இத்தலத்தில் எந்நாளும் எழுந்தருளவேண்டும்" என வேண்ட முருகப்பெருமான் சித்த கன்னியராகிய வள்ளி தெய்வயானையரை மணந்தருளி ஸ்ரீபாலசித்தரின் வேண்டுகோளுக்கிணங்க மயிலம் திருத்தலத்தில் திருமணக் கோலத்தில் எழுந்தருளி அருள்பாலித்து வருகின்றார்.

### *சீடர்பரம்பரை*

இவ்வாறு அருள்பெற்ற ஸ்ரீபாலசித்தர், பொம்மபுரத்திற்கு மேற்கில் உள்ள மயிலம் மலையில் தங்கியிருந்து வீரசைவநெறி பரப்பி வந்த காலத்தில், சிதம்பரம் பச்சைக் கந்தமரபைச் சார்ந்த 'அம்மவை' என்பார் மகப்பேறு இன்றி வருந்தினார். இனிச் சிவத்தொண்டே மேற்கொள்வது என்னும் திண்ணிய எண்ணத்தோடு பாலசித்தரை அணுகி, அவருக்குத் தம்கணவரும் தாமும் தொண்டு புரியலாயினர். அம்மவை அம்மையார், சித்தருக்குத் தாமே சதுரக்கள்ளிப் பாலைக் கறந்து வந்து கொடுக்கும் திருத்தொண்டினைச் செய்துவந்தார். அங்ஙனம் கள்ளிப்பாலைத் தந்த அளவில் சித்தர் உண்டு எஞ்சிய கள்ளிப்பால் பிரசாதசேடத்தை அம்மவை

அம்மையார் அருந்தியதால் குருவருள் வழி ஓர் அழகிய ஆண்மகவை ஈன்றெடுத்தார். ஸ்ரீபாலசித்தருடைய அறிவுரைப்படி அவருடைய திருவருட்பார்வையால் அக்குழந்தை வளர்ந்து, அவருக்குத் தொண்டு செய்து வந்தது. அக்குழந்தையின் பக்குவநிலையுணர்ந்து அவரைத் தம் முதன்மைச் சீடராக ஸ்ரீபாலசித்தர் அமைத்துக் கொண்டார்.

## ஸ்ரீஆதிசிவஞானபாலய தேசிகர் 2ஆம் பட்டம்

ஸ்ரீபாலசித்தர் தம் அருட்பார்வையில் வளரும் சீடரை முருகன் திருவருளோடு 12-ஆம் நூற்றாண்டில் மயிலம் வீரசைவத் திருமடத்தில் திருநீறு, உருத்திராக்கம், இட்டலிங்கம் தரிக்கச் செய்து ஐந்தெழுத்து மந்திரத்தை உபதேசித்துக் காவியாடை உடுத்தச் செய்து உபதேசம் செய்தருளினார். மேலும், பாலை மட்டுமே உணவாகக் கொள்ளச் செய்து 'பாலையே உணவாகக் கொள்வதால், 'பாலையர்' என்றும், சிவஞான உபதேசம் பெற்றதால் 'சிவஞானி' என்றும் திருப்பெயர் வழங்குக' என்று அருளுரை பகர்ந்தருளினார்.

ஸ்ரீசிவஞானபாலய சுவாமிகள், பக்குவம் மிக்கவர் பலருக்கும், தாம் உபதேசம் செய்து வந்ததால், 'தேசிகர்' என்னும் திருப்பெயருடன் 'சிவஞான பாலய தேசிகர்' என்று யாவராலும் போற்றப் பெற்றார். திருமடமும் சிவஞான பாலய சுவாமிகள் திருமடம் என்று அழைக்கப் பெறலாயிற்று. ஸ்ரீபாலசித்தரின் சீடர்களாக வரும் ஞான மரபினர் (பரம்பரையினர்) மயிலம் மற்றும் பொம்மபுரத் திருமடங்களில் இருந்தும், நடமாடும் ஞானத் தெய்வங்களாக (சரமூர்த்திகள்) இயங்கியும், வீரசைவ நெறிகளைப் போற்றி, குருலிங்க சங்கமத் தொண்டுகளை வாழையடி வாழையாகச் செய்து வருகிறார்கள்.

ஸ்ரீபாலசித்தரின் முதன்மைச்சீடரும் ஸ்ரீமத் சிவஞானபாலயசுவாமிகள் திருமடத்தின் இரண்டாம் பட்டம் சுவாமிகளும் ஆகிய ஸ்ரீஆதி சிவஞானபாலய சுவாமிகள் தமது அருளாட்சிக் காலத்தில் விடந்தீண்டி-யிறந்த ஒருவனைத் தாம் அளித்த திருநீற்றின் தெய்வநலத்தால் விடம்நீக்கி அருளியதும், காஞ்சிபுரத்தை அரசாட்சி செய்த நவாபு மன்னனின் மனைவியுற்ற சூலை நோயைத் தம் தவ ஆற்றலால் நீக்கியதும், செய்யூர் என்று இக்காலத்தில் அழைக்கப்பெறுகின்ற சேயூரில் வேளாளர் சிலர், ஒரு புதுக்குடத்தில் மணல் நிறைத்து மறைத்துக் கொண்டுவந்து, தம் முன்பு வைத்ததை தம் யோக ஆற்றலால் வெண்மணலைச் சருக்கரையாக ஆக்கியதும், தையற்கலைஞன் மகப்பேறு அடையத் திருவருள் புரிந்தமையும் தமது திருநீற்றின் மேன்மையால் பலருக்கும்



கூன், குருடு, செவிடு, முடம் முதலிய உடற்குறைகளையும், குடல்நோய், வெப்புநோய், காசநோய் முதலியவற்றை நீக்கியமையும், செஞ்சியை ஆண்ட திரியம்பக மாமன்னனுடைய மகளின் நரையைப் போக்கியதும் மற்றும் தம்பால் அடைக்கலமாக வந்து சேர்ந்த சிதம்பரபூபதி என்னும் மன்னனுக்கு அவனுடைய பகைவர்களை வீழ்த்தும் வல்லமையை அருளியதும், சுவாமிகள் மீது காழ்ப்புக் கொண்ட மாந்திரிகனை மீன் வாயிலிருந்து மீட்டருளியமையும் சுவாமிகள் தமது தவ பலத்தால் செய்த அருட்செயல்களாகும். இத்தகைய பெருமைகளுக்குரிய இரண்டாம் பட்டம் சுவாமிகள், கருவிலே கவிபாடும் திருவுற்ற நல்லாற்றூர்–துறைமங்கலம் கற்பனைக் களஞ்சியம் ஸ்ரீசிவப்பிரகாச சுவாமிகளுக்குத் தீட்சா குருவாகவும், ஞான குருவாகவும் அமைந்தருளினார். சிவப்பிரகாசர் தம் ஞான குருவின்மீது நெஞ்சுவிடுதூது, தாலாட்டு, பிள்ளைத்தமிழ், கலம்பகம், திருப்பள்ளியெழுச்சி ஆகிய ஐந்து ஞானநூல்களைப் பாடிப் பரவியுள்ளார்.

இத்தகுசிறப்புகளைப் பெற்று அருளாட்சி செய்த இரண்டாம் பட்டம் ஸ்ரீஆதிசிவஞானபாலய சுவாமிகள் பொம்மபுரம் என்னும் பொம்மைய பாளையம் திருமடத்தில் உள்ள ஒடுக்கத்தில் வைகாசித் திங்கள் விசாகநட்சத்திரத்தில் நிஷ்டையினால் தந்திருமேனியை தஞ்சடராக்கினியால் திருநீறாக நீற்றிக் கொண்டு சிவயோக ஜீவசமாதி ஆனார்கள்.

பொம்மையபாளையத்தில் ஸ்ரீவிநாயகர் சந்நிதி, ஆதிசிவஞான பாலய சுவாமிகளின் ஒடுக்கம் என அழைக்கப்பெறும் நிஷ்டை–யினால் தந்திருமேனியை தஞ்சடராக்கினியால் திருநீறாக நீற்றிக் கொண்ட சிவயோக ஜீவசமாதியின் திருப்பணி, பொம்மபுரம் திருமடத்தில் ஸ்ரீபாலசித்தர், ஸ்ரீஆதி சிவஞானபாலய சுவாமிகளால் ஆத்மார்த்த வழிபாடு செய்யப் பெற்றதும், மரபுவழி வருகின்ற குருமகா சந்நிதானங்களால் ஆத்மார்த்த வழிபாடு செய்யப்பெற்று வருவதும் ஆகிய ஸ்ரீபாலசுப்பிரமணியர் சந்நிதியின் திருப்பணி, ஸ்ரீஆதி சிவஞானபாலய சுவாமிகளின் மரபில் வந்த குருமூர்த்தங்களுள் பொம்மையபாளையத்தில் சிவயோக சமாதிநிலையுற்ற 3, 14, 15, 16, 17, 18, 19 ஆம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் ஆகியோர்களின் சமாதித் திருப்பணிகள் ஆகியவை திருவருளாலும் குருவருளாலும் இனிதே நிறைவடைந்துள்ளன.

**ஸ்ரீசிவஞானபாலைய சுவாமிகள்**
**20ஆம்பட்டம்**

# சருக்க அட்டவணை



உ

முருகக் கடவுள் துணை

மயூராசலபுராணம்

பாயிரம்

**கணபதி**

*பூவி ன்நாதநன் பூவளந் தோனுமா*
*தேவி நாதநல் தேவர் முனிவரர்*
*மேவி னாதம் விரும்பும் கரிமுகத்*
*தேவின் நாதச் சிலம்படி யேத்துவாம்*

**விளக்கம்:** பூவில் திகழ்பவனும், பூலோகத்தை அளந்தவனும், தேவிக்குத் தம்பாகத்தைப் பாதியாகத் தந்தவனும் ஆகிய மூவரும், தேவர்களும், முனிவரர்களும் தம்முடைய மேன்மைக்காக அடிபணியும் கரிமுகத்தை உடைய தேவியின்பிள்ளை புகழுடைய தாள்களைப் பணிவோம்.

**பரசிவம்**

*அனைத்துலகும் அனைத்துஉயிரும் அவற்றினுள ஆதியாம் அலவுமாகி*
*நினைத்திடுதற்கு அரிதாகி நிருமலஞாநாந்த நிறையுமோனர்*
*மனத்தின்ஒளிர்பேரொளியாய் மலருமலர்மணம்எனவே மருவிநின்று*
*எனைத்துணையும் இனைத்தனைன்று உணரஒணாப் பரம்பொருளை ஏத்துவாமே*

**விளக்கம்:** அனைத்து உலகமும், உயிர் அனைத்திற்கும் அவற்றின் உள்ளுள் உறையும் ஆதியாகவும், அல்லாததுமாக நினைப்பதற்கு அரியதான நிர்மலமான ஆனந்தம் நிறையும், மௌனத்திருப்போர் மனத்துள் எழும் பேரொளியாயும், மலரும் மணம் போலவும் விளங்கும் எதனொடும் ஒப்புக் கூற இயலாத ஒன்றான பரம்பொருளை வாழ்த்துவோம்.

**பராசக்தி**

*பாலின்உறுநீர்போல ஆணவமாதிய அகன்று பகரும்சித்தம்*
*சாலும்அறிவுஉருவாகும் தனிப்பரனைக்கலந்துஅயாத் தரித்தல்இன்றி*
*ஞாலம்எலாம்இனிதுஈன்று காத்துஅழிக்கும்ஆடலனை நடாத்திஐந்து*
*கோலமதாம்உலகளிக்கும் பராபரையைஎமதுஉளத்தில் கொண்டு வாழ்வாம்*

**விளக்கம்:** பாலிலிருந்து நீங்கும் நீர்போல நமது ஆணவம் அகலச் செய்து, சித்தத்தின்படி அறிவை உருவாக்கும் தனிப்பரனைக் கலந்து இடைவிடாது எண்ணி உலகம் எலாம் இனிதுபெற்று, காத்து, அழிக்கும் ஆடலரசாக விளங்குபவனை பின்பற்றி பஞ்சபூதங்களால் ஆகிய உலகில் களிக்கும் பராசக்தியை எமது உள்ளத்தில் கருதி வாழ்வோம்.

### சபாநாயகர்

*வானந்தம் கடந்திலகு செஞ்சடிலமோடுஉமையும் மழுவும்ஆடத்*
*தேன்நந்து மலர்க்கரத்தால் எழும்புலியும் பதஞ்சலியும் தெரிசித்துஆட*
*மீன்அந்தமாம் கண்ணால் உமைநாடக் கனகமன்றில் விளங்கி என்றும்*
*ஆனந்த நடம்புரியும் ஒருபொருளின் இருசரணை அகத்துள் வைப்பாம்*

**விளக்கம்:** வான்முடிவையும் கடந்து விளங்கும் செஞ்சடையும் மானும் மழுவும் ஆடும்படித் தேன்ஒழுகும் மலர்களைப் போன்ற கரத்தில் தாவும்புலியும் பதஞ்சலியாம் பாம்பும் கண்டு ஆடவும், மீன்போன்ற கண்களை உடைய உமைவிரும்பப் பொன்னம்பலத்தில் ஆனந்த நடனம் புரியும் பெருமானின் திருவடிகளை மனத்துள் வைப்போம்.

### சிவகாமியம்மை

*மலைவல்லி அம்பலவன் வாமவல்லி அகிலாண்ட வல்லிஎன்றும்*
*தலைவல்லி வேணுபுர மகற்குஅளிப்பப் பால்பெருகும் சாந்தம்தோய்ந்த*
*முலைவல்லி அடியவரைக் கருக்குழி ஆழாதுஎடுத்து முத்திநல்கும்*
*கலைவல்லி சிவகாம வல்லிபதம் சொல்லிநிலை கண்டுவாழ்வாம்*

**விளக்கம்:** மலைப்பிறந்தவள், அம்பலத்தாடுவான் இடம் இருப்பவள், அனைத்துலகும் காப்பவள் ஆகிய தலைவியானவள், சீகாழியில் அழுகுழந்தையாம் திருஞான சம்பந்தர்க்கு அமைதிபெருகும் பால்பெருகும் முலைகொண்டவள், அடியவரைப் பிறவிப்பேற்றிலிருந்து மீட்டெடுத்து முத்தி நல்கும் கலைச்செல்வியாம் சிவகாமவல்லியின் பாதம் பணிந்து நிலைபெற்று வாழ்வோம்.

### தலைவிநாயகர்

*பத்திவினாணாசலமராப் படைத்தபரனருள்முன்னோன் பனைக்கைவன் கோட்(டு)*
*அத்திவிநாசம்பெறவே ஒருகோட்டாற் தடிந்துவளம் அமரர்க்குஈந்து*
*முத்திவினா வியமுனிவர்க்(கு) அருள்புரிந்துமயிலைமலை முகட்டில்வாழும்*
*சித்திவிநாயகன்அடியை நித்தியநாம்தொழுதுபவம் சிதைத்தல் செய்வாம்*

**விளக்கம்:** படைத்த பரன் அருள்பெற்ற முன்னவன் பனைபோன்ற கரங்களை உடையவன், வேழமுகன், பழவினைகள் தீரும்பொருட்டுத் தம் ஒரு கொம்பால் திருத்தி வளம்எல்லாம் அமரர்க்கு ஈந்து தன்னை விரும்பிப் போற்றும் முனிவர்களுக்கு அருளும் வண்ணம் மயிலை மலை உச்சியில் விளங்கும் சித்திவிநாயகன் அடியை நித்தமும் நாம் தொழுது நமது பாவங்களைச் சிதைக்கச் செய்வோம்.

### சுப்பிரமணியர்

*முந்தனைமார் அறுவர்முலை அருந்தியவாயினன் இமயம் முளைத்தவல்லி*
*தந்தனைய நறைகமழும் கடம்புஅணியும் தடம்புயனாம் சாமிநாதன்*
*வந்தனை செய்பவர்உளத்தில் இன்னமுதம் அணிமயிலைமலை வாழும்வைவேற்*
*கந்தனைநற் சிந்தையில்வைத்து எந்தமை வாதிக்கும் வினைகளைந்து வாழ்வாம்*



**விளக்கம்:** முந்தைய நாளில் கார்த்திகை மகளிர் அறுவர்முலைப் பால் அருந்திய திருவாயுடையவன், இமயத்து எழுந்த வல்லி பெற்ற, தேன்ஒழுகும் கடம்பமாலை அணியும் வீரத்தோள்களை உடையவனாம் சாமிநாதப் பெருமானை மனத்தில் எண்ணி வணக்கம் செய்பவர்களுக்கு இன்னமுதம் போன்றவன் அழகிய மயிலைமலை வாழும் வெற்றிவேல் கந்தனைச் சிந்தையில் வைத்து நம்மை வாட்டும் வினைகள் தீர்ந்து வாழ்வோம்.

*பவம்ஆதித் துயர்அகற்றி அடைந்தவர்க்கு இன்பஅருள் மயிலைப்பருப் பதத்தின்*
*நவமாநற் குறக்கொடியைத் தெய்வானைப் பிடியைமண நயந்து தூய*
*தவமாமெய்க் கொண்டுஇலகும் பாலசித்தற்கு உயர்அருளைத் தந்துஅன்னோற்குச்*
*சிவஞான தேவனெனப் பெயர்அருள் சண்முகத்தேவன் திருத்தாள் சேர்வாம்*

**விளக்கம்:** பாவங்களைத் தீர்த்து பிறவித் துயர் களைந்து, தன்னை அடைந்தவர்க்கு இன்பஅருள் தரும் மயிலைமலையில் அழகுடைய குறவள்ளியையும், தெய்வானையும் மணம்புரிய வேண்டியும், தூயதவத்தை உளத்தினால் கொண்டு விளங்கிய பாலசித்தர்க்கு உயர் அருளைத் தந்து, அவரைச் சிவஞானதேவன் எனத் திருப்பெயர் தருதற்கு உதித்த சண்முகத் தேவனின் திருத்தாள்களைப் பணிவோம்.

### தெய்வயானையம்மை

*கானம்உறும் கலைமகள் செங்கமலமகள் முதன்மகளிர் கருதிப் போற்று*
*ஞானமகட்கு ஒருபாகம் தருதேகன்எங்கள் ஐயன்ஆளும் வாழ்த்து*
*மானமருமகள் சித்தன் மகள்எனச்சொல்மாட்சி தருமகள்நாற் கோட்டின்*
*ஆனைமகள் இந்திரனுக்கு அரியமகள் மருமலர்த்தாட்கு அன்பு செய்வாம்*

**விளக்கம்:** பாடல்களில் விளங்கும் கலைமகளும், செந்தாமரையில் விளங்கும் அலைமகளும் உள்ளிட்ட முதன்மை மகளிர் யாவரும் கருதிப்போற்றும் ஞானமகளாம் மலைமகளுக்கு ஒருபாதம் தந்த தேகமுடையவன், எங்கள் தலைவன் ஆளும் வாழ்த்துமான மருமகளாகவும் சித்தன் மகள் எனப் பெயர்விளங்கத் தன்மகனுக்கு மணம் செய்வித்த ஆனைமகள் எனப் பெயர்பெறும் தெய்வயானையாம் இந்திரன் மகள் இருதாள்களுக்கு அன்பு செய்வோம்.

### வள்ளியம்மை

*புள்ளிமயில் வருபாகன் இமயவரைமயில் உதவும் புதல்வன் சூரை*
*அள்ளிஅயிலென அயிலுக்கு அருளினோன் ஆறுமுகத்து அம்மான் வேண்டத்*
*தெள்ளிஇயலென இடியைத் தந்தவனுக்கு(உ)வகைஅருள் சிறப்பினாளை*
*வள்ளிமயிலைப் பணிந்து கள்ளமயலைத் தணந்து வாழ்குவாமே*

**விளக்கம்:** புள்ளிமயில்மீது எழுந்தருளி இமயமலை உலவும் சிவகுமரன், சூரனை மன்னித்து அருளிய ஆறுமுகப் பெருமான் வேண்டியபடி, உவகை தந்த தெள்ளிய இயல்பினையுடைய அருளுடைச் சிறப்பினளாம் வள்ளியம்மையைப் பணிந்து கள்ளமயக்கம் தீர்ந்து வாழ்வோம்.





### சரசுவதி

*தெள்ஓதப் பயக்கடலின் அரவணையில் துயில்கூரும் திருமால்உந்தி*
*உள்ளோதுஒள்நாவு வகைமீக்கொளவந்தவன் வதனம்ஒரு நான்கிற்கும்*
*கள்ளோதிக் கயல்விழிச்செவ் வாயில்ஒரு முகம்காட்டிக் காதல்ஊட்டும்*
*வெள்ளோதி மத்தினைநம் உள்ளம்எனும் கமலம்அதில் மேவச் செய்வாம்*

**விளக்கம்:** தெளிந்த பாற்கடலில் பாம்பணையில் துயிலும் திருமாலின் உந்திவழித் தோன்றி உலகை மீட்க வந்தவனாகிய பிரமனின் நான்கு திருமுகங்களிலும் கள்ளொழுகும் தனது மான்விழியாலும், செவ்வாயாலும் தன் அழகுமுகங் காட்டிக் காதல் ஊட்டும் வெள்ளையன்னம் போன்ற கலைமகளை நம் உள்ளமாகிய கமலத்தில் நிலைகொள்ளச் செய்வோம்.

### திருநந்திதேவர்

*புந்தியான்நினைப் பரிதாந் திருக்கைலாயத்து இறைவன் புனல்ஆர் வேணி*
*அந்திவான் மதிஅணியும் அண்ணல் மலர்அடிபணிவால் அண்ணும் தேவர்*
*பந்திமணி மகுடநிரை விலகிட வேத்திரம்என்னும் படைகொண்டு ஓச்சு*
*நந்திதேவற் பணிந்து நம்தமது வினைதொலைத்து நந்தாது உய்வாம்*

**விளக்கம்:** நினைவால் நினைத்தற்கரிய திருக்கைலாயத்து இறைவனும் கங்கையையும், மதியையும் அணியும் அண்ணலுமாகிய சிவபெருமானின் மலரடிகளைப் பணியும் நந்திதேவரின் அருளால் நமது பாவங்கள் விலகிடும்படி வேத்திரம் என்னும் படைகொண்டு காக்கும் அவரைப் பணிந்து நம் வினை தொலைந்துபோக நிலைத்து வாழ்வோம்.

### திருஞானசம்பந்த சுவாமிகள்

*தழுதழுப்ப அழுமகவு பால்அருந்தும் எனுமொழிக்குச் சான்றேஆகத்*
*தொழுதகு தந்தையைக் காணாது அழுதுஅரிய பரசுகத்திற் தொடர்க்குஉண்டு அன்பால்*
*முழுமல மாயையை நீக்கு ஞானப்பால் உமைஅருள முன்னம் தேக்கும்*
*கழுமலப் பேரூரின்வரும் பிள்ளைஅடி உள்ளிவினைக் கரிசு தீர்ப்பாம்*

**விளக்கம்:** உணர்வுற்று அழுது, அழுதபிள்ளை பாலுண்ணும் என்னும் மொழிக்குச் சான்றாக வணக்கத்திற்குரிய தந்தையைக் காணாமல் அரற்றி பரசுகமாம் தொடர்பன்பால் முழுமல மாயையை நீக்கக் கூடிய ஞானப்பாலை உமை வழங்கியருள முன் உண்ட கழுமலப் பேரூரில் விளங்கும் பிள்ளையாகிய திருஞானசம்பந்தரின் திருவடிகளை எண்ணி நமது வினைகளைத் தீர்ப்போம்.

### திருநாவுக்கரசு சுவாமிகள்

*இப்பிறவிக் கடல்கடப்பான் எண்ணு(ம்) மனத்தினர் யாரும்இனி தாய்மாதர்*
*துப்புறு மாமயல்உவரி கார்ஆழி நீற்றறையும் துணுக்கென்று ஏறி*
*மைப்படு விடோதனமும் கடந்து மதமலை கடந்துவந்த எங்கள்*
*அப்பர்இரு பதம்கருதில் செப்புவதுஎன்னே அவர்கட்கு அண்ணுந்தானே*



**விளக்கம்:** பிறவியாகிய கடலைக் கடக்க எண்ணும் மனத்தினர் யாவரும் இனிதாய் ஏற்கும், மாதர் துய்ப்பாம் மாமயல் சேற்றையும், ஆழியையும், நீற்றறையையும் கணத்தினில் கடந்து மதமாகிய பெருமலையையும் கடந்த எங்கள் அப்பர்தம் இருபாதங்களையும் கருத்தினில் நிறுத்தினால் எண்ணிய யாவும் அவர்க்குக் கிட்டும்.

### சுந்தரமூர்த்தி சுவாமிகள்

*அத்தா என்னுயிரே அம்பொன்மலை வல்லிபங்கா அரனே என்னா*
*வித்தாரம் புகன்று(உ)ருகிப் பழிச்சுநருக்கு அருள்புரியும் விமலன் கேட்பப்*
*பித்தாஎன்று அரும்பதிகம் ஓதுதிரு நாவலூரர்ப் பெருமான் தாளை*
*இத்தேகத்தில் யாம்துதிக்க எத்துணை தேகம் கடவம் இயன்றவம்மா*

**விளக்கம்:** அப்பனே, எனது உயிரே என்றும், பொன்மலை உறையும் மங்கைபாகா, அரனே என்றும் புகழாரம் புரிபவர்க்கே அருள்புரியும் விமலன் தான் விரும்பித் தம்மைப் பாடுமாறு கேட்க, பித்தா என்று தொடங்கும் அரும்பதிகம் ஓதிய திருநாவலூர்ப் பெருமான் திருவடிகளை இப்பிறவியில் நாம் துதித்தால் எத்துணை பிறவிகளையும் நம்மால் கடக்க இயலும்.

### மாணிக்கவாசக சுவாமிகள்

*நாதவூர் விடைப்பாக, நஞ்சுஅணியும் கண்டவரை நங்கைக்கு ஓர்பால்*
*வீதவூர் மூன்றினையும் பொடித்ததிரு நகையாளா, விமலஞான*
*போதவூர் மதிச்சடில என்றிரு கணீர்வெள்ளம் பொழிய ஏத்தும்*
*வாதவூர் அடிகள்அடி முடிக்குஅணிந்து மிடிக்குவிடை வழங்குவாமே*

**விளக்கம்:** நாதவூரில் விடைப்பாகனாக, நஞ்சுண்ட கண்டனாக, பெண்ணுக்குச் சரிபாகத்தைத் தந்தவனாக, முப்புரங்களையும் எரித்த திருநகையாளனாக, மதியைத் தன் சடையில் சூடி யாவருக்கும் போதம் புரியும் விமலஞானனாக விளங்கும் இறைவனைப் போற்றும் திருவாதவூரடிகளாகிய மாணிக்கவாசக சுவாமிகளின் திருவடிகளை நம்தலைமீது அணிந்து நமது விதிக்கு விடை கொடுப்போம்.

### அறுபத்துமூவர்

*உறுபற்றுஏதே னும்இலாது ஐயன்அடி யார்இடத்தில் உண்மைப் பற்றே*
*பெறுபத்தர் மனம்முதல் மூன்றுஒருமைஉறு அப்பூதிநற் சாதனங்கள் பேணிச்*
*சிறுபற்றால் அவைஅகலத் திகைப்பற்றால் எல்லாம்சிவமாய்த் தெளிந்து நின்ற*
*அறுபத்து மூவர்மலர் அடிப்பற்றால் இனிமறுபற்று அடாது வாழ்வாம்*

**விளக்கம்:** சுயவிருப்பு ஏதும் இலாது பெருமான் அடியாருக்குச் செய்யும் மெய்த்தொண்டையே விரும்பி, மனம் முதலிய மூன்று கரணங்களையும் ஒருமித்து, ஒழுக்க விதிகளைப் பேணி சிற்றின்பம் விலக்கி யாவற்றையும் சிவமாகத் தெளிந்து தேர்ந்து கொண்ட அறுபத்து மூவராகிய நாயகர்களின் திருவடிகளின் வழிபாட்டால் நமது புறப் பற்றுகளையெல்லாம் துறந்து வாழ்வோம்..

### சிவஞானபாலைய சுவாமிகள்

*மால்அயன் ஆதியர் பரவும் சிவகணத்தின் அதிபன்உமை மகிழ்நன்ஏவால்*
*வேலைஉதித்தே மயிலை மலைமேவிக் குமரனுடன் விழை போர்ஆற்றிச்*
*சாலஅவன் அருள்தாங்கி அன்னவனோடு இனிதுஅமர்ந்த தவத்தர் போற்றும்*
*பாலசித்தனாம் எங்கள் சிவஞான தேசிகன்தாள் பணிந்து வாழ்வாம்*

**விளக்கம்:** திருமாலும், பிரமனும் உள்ளிட்ட ஆதியர் தொழவும், சிவகணங்களின் தலைவனாகவும், உமைக்கு இனியனாகவும் விளங்கும் சிவபெருமானின் ஏவலால் கடலில் உதித்து மயிலமலை அடைந்து குமரக் கடவுளுடன் போர்செய்து, அவன் அருள் பெற்று, அப்பெருமானோடு இனிது அமர்ந்து தவஞானிகள் போற்றும் பாலசித்தனாகிய எங்கள் சிவஞான தேசிகன் திருவடிகளைப் பணிந்து வாழ்வோம்.

### சிவப்பிரகாச சுவாமிகள்

*வெங்கைஎனும் திருத்தலத்தில் விழைவுஉறு சாமுண்டி யிலம்விலக வேதம்*
*பொங்குமுது குன்றுஇடை மாங்கனிக்கு முனிந்தோன் வருந்தப் புகன்றவாதின்*
*மங்கிடச் செந்தூரப்புலவன் அருட்கவிசொல் வீரசைவ மணியாய் வந்த*
*எங்கள்சிவப் பிரகாசன் இணைஅடித் தாமரைவாசம் எம்முள் வாசம்*

**விளக்கம்:** வெங்கைத் திருத்தலத்தில் விருப்போடு பாடி, வேதம் விளங்கும் பொங்கும் முதுகுன்றத்து அண்ணாமலை ரெட்டியாரை வருந்தும்படி திருச்செந்தூர்ப் புலவனைத் தம் அருட்கவிச் சொல் வாதில் வென்று வீரசைவ மணியாய்த் திரும்பிய எங்கள் சிவப்பிரகாசன் திருவடித் தாமரையின் வாசம் எம்முள் நிலைத்திருக்கட்டும்.

### வாழ்த்து

*வேதம் மல்குக வேள்வி வளர்குக*
*சீத மாமுகில் திங்களின் மும்மழை*
*ஓத நீர்உலகு எங்கும் ஒழுகுக*
*நீதி ஆக நிருபனும் வாழ்கவே*

**விளக்கம்:** வேதம் பரவட்டும். வேள்வி ஓங்கட்டும். கார்கொண்ட முகில் நிறைந்து மாதம் மும்மழை பெருக நீருலகு எங்கனும் தவறாது பெய்யட்டும். நீதியாக இறைவனும் நிறைந்து வாழட்டும்.

### நூல்வழி

*கண்நுதல்பிரான் களிகொளத் தோன்றிய கதிர்வேல்*
*அண்ணல்ஆடல்கள் அளப்பில அவற்றினுள் அறவோர்க்கு*
*எண்ணும்சூதன்முன் இசைத்திடு மயில்வரைப் புகழை*
*நண்ணும்ஆசையால் சிறியன்உந்து என்சொலால் நவில்வேன்*

**விளக்கம்:** நெற்றிக்கண் இறைவன் அருட்களியினில் தோன்றிய கதிர்வேல் அண்ணல்தம் ஆடல்கள் எண்ணிறந்தன. அவற்றுள் மயிலமலையின் புகழை



அறவோர்க்குச் சொல்லும் அடியேனின் சிறுவிருப்பால் உந்துற்று என் சொல்லால் சொல்லலானேன்.

### அவையடக்கம்

*நன்மைஅதே என்றாலும் அன்மைஅதே என்றாலும் நற்றாய்ஈன்ற*
*தன்மகவைச் சீராட்டிப் பாராட்டும் தன்மையைப்போல் தமிழ்வல்லோர்என்*
*புன்மொழியை நன்மொழிஎன்று எடுத்தாள்வர்என உளத்தில் பொங்கும் அன்பால்*
*தென்மயிலை மலையில்வரும் குமரகுரு திருக்காதை செப்புவேனால்*

**விளக்கம்:** நன்றாக இருந்தபோதும், அன்றாக இருந்தபோதும் நல்லதாய் தான் ஈன்ற தனது குழந்தையைச் சீராட்டிப் பாராட்டுவதைப் போலத் தமிழ் வல்லவர்களாகிய தாங்கள் எனது புன்மையான மொழியை நன்மொழி என்று எடுத்துக் கொள்வர் என்று எனது உள்ளத்தில் தோன்றும் அன்பினால் தென்மயிலை மலையில் விளங்கும் குமரகுரு திருவரலாற்றைக் கூறுலுற்றேன்.

**பாயிரமுற்றிற்று**







## நைமிசாரண்யச் சிறப்பு

சீதமேகுடி யில்பொலிந்துஉறை திண்மையானும் யாவையும்
ஈதலால்இலை வேறுபேறுஎன எய்தலானும் இருந்துஅவர்க்கு
ஏதம்முற்றும் அகற்றிஎன்றும் இருக்கையாலும் உமைக்குஇளம்
காதலன்பதம் ஓதலால்நிகர் காவின் நைமிச மாவனம் 1

வாதமேவயம் ஆகநாள்தொறும் அன்னிநிற்பவர் பல்கலை
வாதமார்கலி ஓதைநேர வழங்குவார் உயர் விண்ணினும்
போதுவார்குளிகைக் குணங்கொடு புக்கபேர்நிலை புக்கிட
ஓதுவார்எனு மாதவத்தினர் உய்யுமாறுகொள் நைமிசம் 2

### மரவகைகள் (வேறு)

ஆல்அரசுஒகுசினை நாகமலிபூகம்வழை அத்திஇலவங்கம் ஆரப்
பாலைஎழுபாசிலை உலாவுசரளம்கனி பலாமுகில் உலாவுதாழை
தாலமொடு சூதமகிழ் மாதவிபலாசுமிகு சம்பீரமாமலகமார்
வேலன்மகிழ்வால் அணியும் வெட்சிஉயர் கூவிளம் விராயவன நைமிசவனம்

### விலங்குவகைகள்

கடங்கொளிபமானரி மடங்கலாமாகடமை காருருவமேதிய திகத்
திடங்கொள் உழுவைகளுடல் ரோமநிரையார் கரடிசீறு தறுகட்சூகர
நடம்கொள்மயில் அன்றில் உரகம் சரபம் அங்கவரி நாவிபகு வாயாளமோடு
அடங்கலும் நிறைந்து வயிரம்கொள் பகைஇன்றி அவண்அபின்உறை நைமிசவனம்

### வேறு

பரவுபெரியோர் அவையை அடையின் வெய்யதுர்சனரும் பண்புவாய்ந்த
உரமுடையாராய் அடங்கிநிற்பர் அதற்குஅடுப்ப இங்ஙன் உரைக்கும்கானத்
தரவுகொடிதுஎனும் பெயரைஅடைந்தும் அதன்திறம் விளக்காது அந்தணாளர்
விரவுதிரு முடியின்மிசை எழில்பணத்தில் குடைநிழற்றும் வியப்பதோர்பால்

நிலைபிரியா மலைஅருவி சொரிவதனைக் கண்டுதிரண்டு நீண்டதுஅந்த
நிலைபிரியும் அலைமாறு கொண்டுஎழுந்து முனிவர்குழாம் நெரும்குஞ்சாரல்
தலைஎய்தா உயர்பனைபோல் கரநீட்டிவானதியில் சலமுகந்துஅவ்
அலைவில்புல மாதவர்தம் திருமுடிக் கணருவியென ஆட்டலோர்பால் 6

வான்நாட்டு மகவானுக்கு ஆயிரம் கண்தந்தமுனி மனைவிஆய
கான்ஆட்டுங் குழல்அகலி கைக்கல்உருவம் தவிர்க்கும் கண்ணன்உந்தி
மேல்நாட்டு மலர்ப்புத்தேள் தருப்பையினால் பரிதிசெய்து விடஅதுஏகித்
தான்நாட்டும் பெயர்அதுவே நைமிசம்என்பது இங்ஙன் சாற்றுங்காலே 7



**புராண வரலாறு**

இனையவளம் செறிநைமி சாரணியம் தனில்அறங்கள் இரண்டின் முன்னா
மனைஅற நல்இயல்பினொடு மாற்றிஉயர் துறவறத்தின் வாய்மை கொண்டே
துனைவின் மகம்பலவாற்றிப் பேறுஎய்திச் சிவாஅநுபவத் தூயோர்ஆகப்
புனையும் அருந்தவம் பூண்ட சவுனகாதியர் மகிழ்ந்து பொற்பினோடே 8

இருக்கும்அமைதியிற் பரமன் திருவுருவம் நினைந்து அழலின் இழுதுநேர
உருக்கம்உறு உளத்தினன் வெண்நீறு உத்திராக்கத்தால் ஒளிரும் மெய்யன்
தருக்கமிடும் சமயகலை யாவையும் பொய்யெனக் கடிந்து சைவமெய்ம்மை
தெரிக்கும் உரவோன்அறுமூன்று ஆயபுராணங்கள் எலாம்தெரிந்த மேலோன்

வாதநாராயணற்குஉரிய மாணாக்கன் சூதனெனும் மாதவத்தோன்
ஆதரத்தோடு எய்துதலும் ஆங்கமர்ந்த முனிவர்எதிர்ந்து அன்பிற்போற்றித்
தீதுஅறு நற்பகலாயது இன்றுஎமக்கு நினைக்காண்டல் செயலால் என்னா
மேதகுநன் முகமன்இசைத்து அவற்சூழ்ந்து தம்சாலை வியப்பில் சேர்ந்தார்

தூயமணி ஆதனம்ஒன்று அமைத்துஅதன் மேல்இருத்தி நன்னூல் சொல்லுமாறே
நேயமொடும் அருக்கியம்ஆதிய உதவிஉபசாரம் நிரலே ஆற்றி
ஆயிடைச்சூழ் தரவுஇருந்தி யாம்செய்மகப் பேறுஉன்னை ஐயஎன்பால்
ஏயஇங்கு தந்ததுஇனித் தவப்பயன் பெற்றேம் பிறப்பும் இனிதுஇற்று என்றார்

**வேறு**

அம்மொழி சூதன்கேளா ஆதிஅம் பரனைப் போற்றிச்
செம்மைசேர் மகங்கள்ஆற்றித் திகழ்தரு முனிவீர்தூய
நும்உயர் குழாம்சேர்வன்றோ நுவல்உறும் என்போல்வாருக்கு
இம்மையிற் தவங்கள் செய்துஇங்கு எய்தரும் பெரும்பேறென்றான் 12

ஆவதுஅக் காலைநைமி சாரண்ய அறவோர் சொல்வார்
ஆவரும் மறைகடந்த ஒப்பிலாக் குரவற்குஅன்பே
மேவுறு மாணாக்கர்க்குஉள் மிகத்தெருள் சிறந்தோய்கந்தத்
தேவரும் கதைமுன் சொற்றாய் கேட்டுஅகம் சிறந்துளேமால் 13

அத்திருக் குமரப்புத்தேள் அமர்ந்துஇனிது ஆடல்செய்யும்
முத்திசேர் தலங்களுள்ளும் முந்துஉயர் தகைமைத்துஆயது
எத்தலம் அதனைக்கேட்பான் இசைந்தனம் ஐயஇன்றுஎம்
சித்தநன் மகிழ்வுகூரச் செப்புதி அறிய என்றார் 14

என்றலும் சூதன்கேளா எரிபடும் இழுதேஎன்னத்
துன்றுளம் உருகிப்பொங்கத் தூய்தரு மெய்சிலிர்ப்பக்
குன்றமும் கடலுமாவுங் குலைந்திடத் தடிந்துஇலங்கும்
வென்றிவேல் குமரன்பாத மென்மலர் பழிச்சிச் சொல்வான் 15

தவம்பல உளஅவற்றுள் சண்முகப் பரமன்எய்தி
அலகில்பல் ஆடல்செய்தற்கு அமைந்ததாம் ஆங்கு அடைந்தோர்க்கு எல்லாம்
சொலும்அறம் பொருளேஇன்பம் தூயவீடு அருள்வதாகும்
நலமுறு மயிலைஓங்க தொண்டை நன்னாட்டின் மேவும் 16

**வேறு**

அம்மலைமேற்சூர் தடிந்த வேல்கரச்செவ்வேள் குறமான் அமரர்மானை
நன்மைஉற வேட்டுஎதிர்ந்த சங்குகன்னற் சூர்மாற்றி ஞாலம்தன்னில்
இம்மையினில் தனைப்பரவும் அன்பர்அகம்கருதுவன எளிதின்ஈந்தே
செம்மையுறச் சித்தியொடு முத்தியையும் தரஅமர்ந்தான் தெரிதிர்என்றான்

சுகம்உதவும் சூதமுனி நகைமுகமா மொழிந்துஅருளும் சொல்லைக்கேளா
உகமுடிவும் அழியாத நோன்புஇயற்று முனிவர்அருள் உவகைமேற்கொண்டு
அகநெகிழ்வு உற்றுஅன்பு உருவம் எய்தினராய் அந்நாட்டின் அணிகள்யாவும்
புகறிஎனப் புகழ்ந்துரைப்ப அதுகேட்டுச் சூதமுனி புகல்வான் மன்னோ 18

**நைமிசாரண்யச் சிறப்பு முற்றிற்று**





## நாட்டுச் சிறப்பு

குமிழ்தடுப்பப் பொரும்இணைச் சேல்தாங்கி மலர்கமலமெனக் குலாமுகப்பொற்
சிமிழ்கடுத்த முலைலோபா முத்திரையின் கணவன் விந்தச் செறுநீள் குன்றை
அமிழ்தலத்துள் எவைமுத்தினோன் பெற்ற மாமறைப் பொருளை அருளிஇன்செந்
தமிழ்கொடுத்த அருட்குமாரப் புலவன்அடிக் கமலமலர் தலைமேல் கொள்வாம்

### வேறு

திருமுகத் தொகைஆறு பெற்றுஇலகிய செவ்வேள்
ஒருமுகத்தில் நின்றுரைப்ப அருஞ்சித்தனோடு உடன்ற
செருமுகத்து அகன்றவற்குஅருள் புரிமயில் திகிரிக்
குருமுகத்து எழில்பெறு தொண்டைநாடு கூறுவமால் 2

### மேகம் மழை பொழிதல் (வேறு)

திருவளர் விசும்பில் கொண்டல்எம் பாலசித்தர்கோன் அடியவர்க்கு அருள்வெண்
தெருள்நிறங் கொடுபோய் ஆர்கலியயின்று செவ்விய அடியர்பால் தீர்ந்த
மருளியன் மலமும் மாயையும் திரண்டு மயிலைமா மலைஉறை குமர
குருபரன் தன்பாற் குறைசொலஅடையும் கொள்கைபோல் மீண்டன விரைந்தே

அன்னகார் எழிலி மயிலைமாமலைமேல் அமரர்சேனாபதி உகைக்கு
நன்னிற மயில்போல்ஈண்டு மற்றுஅந்த நாயகன் அசுரரைத் தடிந்த
மின்னவிர்வேல்போற் றடித்துஅவன்துவச வெங்குரல்போல அதிர்ந்துஇடித்து
மன்னுமெய் அடியார்க்கு அவன்செய் நல்அருள்போல் வளம்செழு மாமழை பொழிந்த

மயிலைமா மலைமேல் மின்னுற்இ இடித்து வான்கரு முகில்மழை பொழிதல்
பயில்விசும்பு அமரர்க்கு இறைவனாம் கரியபாக சாதனன் உளக்கனிவால்
வெயில்விரி மகுட கேயுரம்ஒளிர மேவிஇன்னியம் பலமுழங்க
அயில்எழில் கரத்துக் குழகற்கு நறுநீராட்டு உறும்செயல்நி கராமால் 5

ஈரநீர்க்கொண் மூமயிலைமா மலைமேல் இனியநீர் பொழிவன எழில்மா
யூரமாய்க் குமரச் சேவகற்றாங்கி உறுதலை வேண்டிஅவன் மாவாம்
சூரனாம் அசுரன் கனிந்து வானதியில் தூநறுநீர் கொடுசெங்கை
வீரவேலற்கு உள்ளுவகை மீக்கூர விழைவினில் ஆட்டுவான் போலும் 6

### ஆறு

மலையின்வீழ் புனல் ஆங்காங்குறு மணியின் வகையுடன் செம்பொனும் மலரும்
இலகுறு தளிரும் நிரைநிரையாக இயற்றிஎம்முருக வேட்கு இணங்கத்
துலைவில் பன்மாலை தொடுத்து அணிந்தனபோல் துலங்கு உறவுஅவ்வையின் உலவிக்
குலவுஉறு மருவி அவ்வரைஅடியிற் கூடிஆறு ஆயின அம்மா 7

சந்தனம்அகிலம் குங்குமம் தேக்கம் தருக்களை முறித்து மென்காந்தள்
கொந்துஅலர் சிதற்றிச் சிறுகுடில் குலைத்துக் கொடிச்சிமென் மாதர்கள் காக்கும்

பைந்திணைக் கொல்லை அழித்துவன் குறவர் பாவையர் வெருவுகொண்டு இரியக்
கந்தடு மதத்த களிறுபோம் கதியில்போ யதுகடும் புனல் தீர்த்தம்

வயம்உறுசீய வாகனிதான்வாழ் வண்புலப் பாலையின் மருவும்
எயினராம் தானை அளப்பில கொண்டே எரிமுகத்துஉமிழ் தருகொடிய
வயிநெடுங் கணைவாள் விற்கதைஏந்தி அடல்அறு மகிடனைப் பொருதே
சயம்பெற விடுத்த தன்மைபோல்வர் அன்றிச் சலிலத்தின் பெருக்கு அகன்றதுவே

முந்தொரு தருவைக் கவர்ந்துபார் சொணர்ந்தான் முகுந்தன் என்றுஅவன் உறையூர்மேல்
இந்திரன்படைவந்து அடுதல்போல் தருக்கள் எண்ணில களைந்து எறிந்து இடையர்
தம்தனிக்குடில் செற்றுஅணிகலம் துகில்கள்தயிர் முதலிய கவர்ந்து உழக்கி
வந்துமற்று அவன்தன் நிலத்தினர் மகிழ மருதம் வந்துஅடைந்தது நீத்தம்

வான்உயர் தருவின் மலர்தளிர்கொண்டு மள்ளர்கள் பல்லியம் முழங்கத்
தேன்கனிமுகந்து பதுமமும்சங்கும் திகழ்தரக் கொண்டு வானவர்தம்
கோனைவார் முலைகோட்டி யானைதந்தோனைக் குறுகிஅன்னோன் மகிழ்பூசைக்கு
ஆனநற்பொருளை அமைத்தல்போல் மருதம் அடைந்து அவண் உலவியது அன்றே

குன்றுஉறை மயில்கள் பிடிகள் வெம்பாலை குலவுஉறுபுறவு கண்முல்லை
ஒன்று செம்மான்கண் மருதவெள்ளனங்களுடன் தழீஇ வரும்புனல் காந்தள்
துன்றலர்க்குரவ முல்லையம் கமலம் சொலும்இவை ஆதியசூடித்
தன்தனிக் கொழுநன் மணந்திடச் செலும்நல் தலைவிபோல் நெய்தல் சார்ந்ததுவே

வான்இழி புனல்யாறு அணிதிகழ் குறிஞ்சி மருவுஎழில்பாலை நன்முல்லை
கான்அலர் மருத நெய்தலின் பொருள்கள் கடல்இடை அடைதரச் சேர்த்தன்
ஞானமெய்ப் பாலசித்தனாம் குரவன் நல்அடியார்க்கு அருள்புரிந்துஅம்
மானவர்தமைப் பேரின்பச் சாகரத்தின் மருவுஉறச் செய்தலே மானும் 13

## மருதம்

அத்தனி வராகநதி எனும்பேரி யாறறிவு சான்றோர் தொழும்பால
சித்தர்கோன் அடியார் பக்குவமுறையில் சிந்தையின் ஞானம் தேக்குதல்போல்
அத்துறு தடங்கள் குளங்கயம் வயல்கள் நனிவளம் பெறப்புனல் நிறைத்துஅவ்
வித்தகச் சித்தன் மெய்ப்புகழ்என்ன வியன்புவிமேல் பரந்ததுவே 14

உடைமனை இயல்பிற்கு அமைவுஉறாது உயர்ந்தோர் உரையினை அகற்றி வெம்காம
நடையினர் பொதுமாதர்இல் செலல்போல நன்குறு மடைக்கு அடங்காது
தடைப்படு கரையைச் சாடிமேல் செல்லும் சலிலத்தை மள்ளர்கள் படையால்
கிடைப்பரும் அறிவால் பொறியினை அடக்கும் கேள்வியர்போல் சிறைதடுத்தார்

பரம்பும் அஞ்ஞான மேவலால் உலகில் பன்மறை முறைதிறம் புதல்போல்
நிரம்புபோம் புனலால் கரைவரம்பு உலைந்த நீள்வயல்தனின் மறைமுன்னூல்
தரம்புரிந்து உலகில் சித்தர்கோன் அமைக்கும் தன்மைபோல் மள்ளர்கள் உலைந்த
வரம்புகள் புதுக்கிக் குரம்புகள் ஒதுக்கி வயம்உறு நல்வளம் படுத்தார் 16



**வேறு**

குரம்பு நீள்மடை போல்புனல் ஒலியுமுன் குலைந்த
வரம்பு அமைக்குநர் கலியும்ஏர் உழுநர்வாய் வழக்கு
மரம்பயின்ற கண்நுளைச்சியர் குரவையின் ஆர்ப்பும்
பரம்புஅடிக்குநர் ஓதையும் கடல்ஒலி படுக்கும் 17

நத்துலாம் வயல்வளம் படுத்து நருநன் முளையை
வித்துவார்களும் விளைதரு பயன்கொளும் விழைவான்
முத்துலா முலைக் கடைசியர் மகிழநான் முனைக்கோட்டு
அத்திவான்அவன் விழவுஅயர்ந்து ஆடலின் அமைவார் 18

திறந்த வாய்வளர் நாற்றினைப் பிடுங்கிநாண் செறித்துச்
சிறந்த வேறுசெய் தனில்நடத் திகழ்தரு தோற்றம்
பிறந்தகந்தனில் செல்வத்தின் வளர்இளம் பெண்கள்
அறந்தவா மணத்து அம்மனை வாழ்வுறல் ஆமால் 19

ஆற்றவே முகம்வாய் விழிக்கு அரும்பகை ஆகித்
தோற்றும் அம்புயமாம் பல்கார் நெய்தல் சூழ்ந்து
சேற்றினார் வயல்உறுதலால் கடைசியர் செகுத்தார்
மாற்றுஅலர்க்கு இடைப் புகுந்தவர் வாழ்வரோ மதிக்கின் 20

ஆவல்சேர் மனையவரைத் தீமாதர்சேர்வு அகற்றி
மேவல்செய் வளநிரப்பியே காக்கும் வீரரைப் போல்
தாவில் பூம்பயிர் களைகடிந்து இனியநீர் தகைத்துக்
காவல் செய்குவர் மள்ளர்கள் சுகம்பெறல் கருதி 21

நாறுநீள்பயிர் சித்தர்கோன் அடியவர் ஞானம்
கூறுகேள்வியின் பயன்கொளல் போல்பயன் கொண்டு
வேறுதெய்வங்கள் தொழாஅவர் நிமிர்வின் மேல்நிவந்து
வீறுஅத்தேசிகன் தொழுதல்போல் வணங்கின விளைந்தே 22

ஈர்இரும்பு கொண்டுஉழவர் நெல்அரிகள்ஈர் பொழுதில்
ஆரும் ஆம்பலும் வனசமும் அறுப்புஉண்டு கிடத்தல்
கூரும் அன்புஉறு கொழுநர் மாண்டிட வரும்குறையால்
சாரும் கற்பினார் தம்உயிர் துறத்தலே சாலும் 23

அரிகளாம்என உலவுஉறு மள்ளர்கள் அணிநெல்
அரிகள்ஆவன சும்மையிற் களம்செறித்து அடுபோர்
புரியும் ஆறுபோல் அடித்துப் போர்புரிந்து பொன்அவர்தம்
புரியும் மாமணித்து எனஅதன் மீமிசைப் பொலிவார் 24

பெரும்பகட்டு எழில்புயத்தினர் நெல்லரி பெய்து
கரும்பகட்டினால் துவைத்து உவைநீத்தநெல் கால்போல்
வரும்பகட்டிரும் பண்டியில் கொண்டுபோய் வானோர்
விரும்பகட்டினன் மனைதொறும் குவித்து மேவினரால் 25

மஞ்சளாம் பயிர் காட்டுவ வாழைகள் வாழை
மஞ்சள் ஆவுயர் கமுகுகள் காட்டுவ வளர்பூ
கஞ்சமானமாம் தெங்குஇனம் தெங்குநீர் கயத்தில்
கஞ்ச மாமுகத்து அரம்பையர் பதிபுறம் காட்டும் 26

மருதமாநிலத் தெய்வதச் சந்நதம் வந்த
மருத மாவென வாடுறு மள்ளரை மகிழ்கா
மருத மாமனைக் கிழத்தியர் தொழுவிழா வயங்கு
மருதமா பலா காஞ்சியஞ் சோலைகள் மலர்ந்த 27

இரும்பின் அன்னகோட்டு எருமைகள் யானைகட்கு உரித்தாம்
கரும்பையார் தருபடப்பைபோய்க் குதட்டியே கமழ்பொன்
அரும்பு கற்பகம் சேர்தரு காகமும் அருந்தும்
விரும்பு தேவர்கொள் அமுதுஎனச் சொலும்மொழி விளக்கும் 28

நல்நறும்புனல் தடங்களில் கமலநாண் மலர்மேல்
பொன்நிறச் சிறகு அன்னங்கள் இதுஎனப் பொலியும்
துன்னும் பூம்பொழில் தொறும்மயில் தோகையை விரித்து
மின்னு காஞ்சிபூண் சயமகள்என நடம் ஏவும் 29

சோலை மென்மலர்த் தேறலும் கன்னலைத் துகைக்கும்
ஆலைவாய் வரும்தேறலும் கனியின் நின்றுஅமைந்து
நாலும் தேறலும் நற்பழனப் பயிர் வளர்த்தே
வேலைவாய் நிறைத்து அங்குஉளமீன் விருந்து ஆற்றும் 30

தாமரைத் திகழ் முத்தமும் சங்கின் ஒண்முத்தும்
காமரும் கழைமுத்தமும் மயிலனார் கடிந்த
தாமமுத்தமும் இரவுஇருள் சார்ந்திடா வண்ணம்
சேமஒண்மதி எனத்திகழ்ந்து எங்கணும் செறியும் 31

### குறிஞ்சி
### வேறு

பருமயில் இவர்ந்து கிரியுடன் அசுரைப் பரிதிமுன் பனியெனத் தடிந்த
முருகவேள்அரசு புரிவதற்கு இடமாய் பொழியும் மன்னவன் படைவீட்டுள்
ஒருபடைவீடாய் உமையவள் தாதைக்கொத்திடும் சுற்றமாய் ஒளிரும்
பெருமையில் சிறக்கும் மலைஅமர் குறிஞ்சிப் பெற்றிமை எற்றுஎன இசைப்பாம்



தேக்குஅகில் ஆரம்குறிஞ்சி அங்கசன்தன் செழுமலர்க் கணைகளில் ஒன்றை
ஆக்குஉறும் அசோகம் நாகம்ஒண்காந்தள் அடர்ந்துவான் அளவியே மலரும்
ஊக்கமே உயரும் கானவரதன் ஊடுஉலவியே கொலைத்திறம் புரியும்
மாக்குலம் தடிந்து சீயத்தை எதிர்ந்து மானுடச் சீயத்தின் மலைவார் 33

கவைஉறு கிளைகொள் சந்தனம் முதலாம் கான்மலர்த் தருஎறிகுநரும்
உவைஅறு புலங்கள் உழுநரும் ஆங்கண் ஒளிதரு பன்மணி கிளைந்து
குவைஉறுத்து நருமேனலை வனமுற் கொளும் பயன்விதைகள் வித்துநரும்
நவைஅறுதேறல் நீர்நிரப்புநரும் நாள்தொறும் களிப்பினில் திகழ்வார் 34

ஏனலங்காவல் கொடிச்சியர் தங்கள்இசை மொழிஎழில் விழிக்கு இகலே
ஆனபூங்குயில் அஞ்சுகம் மயில்வாவும் அரியமான் இவற்றினைக் கவணில்
வான்அவிர் உடுக்கள் உதிர்ந்தன ஒளிகொள் மணிக்கலின்வீசி ஆர்த்து அடர்வார்
மேல்நலி பகைவர் அடர்வரேல் வாளாவிடுவ ரோவியன்நிலங் காப்போர்

ஒன்றும் ஆடியினிற் தோன்று தம்முருவோடு உரைப்பது போல்தமது ஒலிகொள்
குன்றுஎதிர் கூவும் கொடிச்சியர் நறுநீர்க் குறுஞ்சுனை ஆடிமென் மலர்கள்
துன்றறல் கருமென் கூந்தலில்சூடிச் சுவைகொள் யாழ்செவ்வழி பயின்று
மன்றலம் பொழிலின் நடமிடும் கலப மாமயில்என உலவுவரால்

செறிகுரல் ஏனல்அறுத்ததன் இடியும் செழுங்கிழங்கு அவியுஞ்சேர் ஈக்கள்
எறிஅடைத்தேனும் கனிகளும் நிறைத்தே இன்னிசைத் தொண்டகம் எழுப்பி
வெறிகொள் ஆட்டுஅயர்ந்து நெட்டிலைக் கதிர்கொள் வேற்கரத் தெய்வதம் பரவிக்
குறிபுகன்று இலகு வேல்மகற் பழிச்சும் குன்றவர் ஒலிகடல் கொளுமால்

### பாலை - வேறு

அன்பொடு வெறிஆட்டி அன்னவர் நடமாட
இன்பம்எலாம் உதவும் எழில்மலை நிலம்அருகாம்
துன்புஉறு பாலைவளம் சொல்ல நினைத்திடிலே
என்பும் வெதும்பும் எனில்எங்ஙனம் ஓதுவதோ 38

கன்னி எனும்பெயரில் கருதுபொருட்கு இதுமாறு
என்ன உணர்ந்து விறல் தேவர்கள் இழிவெய்த
முன்அடல் மகிடன்உரம் பொடியமுடித்து அரியூர்
மன்அருள் சயமகள்தன் விழவு மலிந்திடுமால் 39

கல்பொலி திண்புயவெம் காளையர்களும் அவர்கை
வில்பொலி நுதல்எயின மெல்லியர் களும்விரவிப்
பொற்பு மலர்க்குரவும் புனைதரு பன்மலர்தூய்
அற்பொடு பூசைபுரிந்து அந்தரியைப் பணிவார் 40

கொலைபுரி தருகோபம் குலவு குறும்பர்களும்
அலகில் வறுங்குழியும் அறல்அறும் ஆழ்கிணறும்
உலைவில் குராமரமும் ஓமை அழிஞ்சில்களும்
இலகும் இருப்பைகளும் இசைவுறு எங்கணுமே 41

பகைஉறு துடியொலியும் பாலையின் யாழின்வரும்
தொகைபெறு பஞ்சுரமும் தொலைவுறு வெஞ்சமமும்
பகல்இடை வருசூறைப் பவனமும் உகள்முயலும்
தகுமியல் அறுகள்ளித் தருவும் அலர்ந்திடுமே 42

இலகுறு வெம்பாலை எழில்திரு மால்அயில்பார்
உலகொடு போய்அவனுள் உடலை வெதுப்பியதால்
நிலவும் உடல்கருகி நெய்த அதியுண்டும் அழல்
குலைவிலது ஆதலினால் குளிர்கடல் புக்கனனால் 43

வெய்யது வையம்அதின் விள்ள அதற்குநிகர்
எய்துவது ஒன்றுமிலை இன்பமுடன் பழகி
ஐயமிலாது குறிப்பறிகுநர் ஒருவர் தமைக்
கைஅகல் வுற்றவர்தம் நெஞ்சு கடுத்திடுமால் 44

**முல்லை -வேறு**

இன்ன பாலை இசைத்தனம் ஈது அன்றி
அன்ன ஊர்தியை அம்புயத்து உந்தியின்
முன்னம் ஈன்ற முகுந்தன் இனிதுஅமர்
துன்னு பூம்பொழின் முல்லையைச் சொல்லுவாம் 45

கொன்றை பூவை குருந்தம் பிடவநன்
மன்றற் பூம்பொழில் வானம் அளாவுதல்
அன்றுஒர் காவை அரிகவர் வெம்பகை
சென்றி டற்குஅங்கு சேர்தல் நிகர்க்குமால் 46

முல்லை வேய்ங்குழல் ஊதிமுன் ஆயர்தம்
மெல்லி யார்தமை மேவிய மாயனைச்
சொல்லி ஆங்கவர் தோகையர் இன்பமா
மல்லன் மேவும் விழவின் வணங்குவார் 47

சேஇனங்கள் தழுவித் திருந்து இடைப்
பாவையார் தழுவப் பயில் கோவலர்
ஆவினம் குழல் பண்ணில் அழைப்பர்அக்
காவி மெய்ம்மலர்க் கண்ணன் நிகர்ப்பவே 48



சாமையும் பன்முதிரையும் சால்புடைத்
தேமலிந்த விளைவுகள் செய்குவார்
தாம மென்குழலாரைத் தழுவியே
காமர் சோலை மருவுவர் காதலார் 49

முதிரை மேய்வன சேவல்கள் மொய்யொலி
வெதிரின் ஆயர் விளைக்கும் இசைஒலி
அதிரும் முன்கை வளைஒலி ஆய்ச்சியர்
ததிம திப்பொலி யோடும் தழைக்குமே 50

**வேறு**

பூவைமேனி வந்துஓங்கியே பொலியும் விண் மதியைத்
தாவிவெண்ணெயை உறியிடைக் கவர்ந்திடத் தாவும்
தேவைஒப்பன அன்னவற்கு அருள்தரச் சிவனார்
மேவிநிற்பன ஒத்தன கொன்றையாம் விருக்கம் 51

குருந்தினற்சினை மேவுகாயா எழில் கோல
மருந்தடுத்தமென் மொழிஉளஇடைச்சியர் வனைந்த
வருந்துகிற்கரம் கொடுகிளை தனைஅணைந் தேறும்
திருந்துமாயனை ஒத்திடத் திகழ்ந்தது முல்லை 52

கானயாற்றுஇடை ஆடுபுகழுமிய குரவை
யானஇன்னிசைப் பண்களால் பாடும் ஆய்ச்சியர்கள்
பாநலம்பெறும் இன்சொலால் பால்தயிர் பகரும்
மேன்மையே தழைத்துஓங்குபு விளங்குமான் முல்லை 53

**நெய்தல் - வேறு**

மைதவழ் திரையார் கலியினார் கலியும் வால்வளை குமிறிசைத் தொனியும்
பொய்திகழ் மருங்குற் பரத்தியர் புலம்பர் வருணனைப் போற்றுறும் விழவின்
எய்துஉறும் விளரிச் செவ்வழிப் பண்ணும் இனிய வாக்குழுமித் தகையான்
நெய்தலின் வளங்கள் அளப்பில் அவற்றின் நிலைமையை நிகழ்த்துவது எவனே

கடற்கருகு உயர்பூம் புன்னைநீள்ஞாழல் கான்மலர் நீழலில் சுறவின்
அடற்பரும் என்பை நாட்டுபுநெய்தல் அலரை மென்புன்னையைக் கைதை
மடற்கமழ் மலரை அணிந்து மீன்அடிசில் வைத்திட வருணன் ஆங்குஅமையத்
தொடற்கு இசையாழ் செவ்வழியிசைத் தளவர் தொழஅருள் வளநனி தொகுமால்

கண்டகக்கைதைப் பொதும்பருஞாழற் கானமும் புன்னையம் காடும்
கண்டலம்புதரும் உண்டகத் திரளும் கலந்துஉறு வளம்செறி நெய்தல்
இண்டிறல் அளவர் வலைகொடுவீசிச் சிக்குமீன் குழுவினைக் கரையில்
கொண்டுவந்து உகுப்ப வளத்தியர் உணக்கும் கொள்கையில் புட்கள் ஓச்சுவரால்

கயலினைக் கவரவரு பறவைகள் பூங்கடி தடநுளைச்சியர் கண்ணைப்
பயம்உறும் இருபத்திரம்என வெருவிப் படில்வரும் உபத்திரம் என்னா
நயம்உறும் உடலைப் பத்திரநாடி நற்சிறைப் பத்திரம் விதிர்த்துப்
பயின்மயிலனையார் கரம்எடாது உறவும் பறப்பன நெய்தல்அம் பாக்கம்

விளரியாழ்வருடிச் செவ்வழிப் பண்ணை விளம்பிடும் முழக்கமும் உப்பை
யவனர்கள் அளக்கும் ஒலியும் நன்நாவாய் அதிர்குரல் கோட்பறை ஆர்ப்பும்
தெளிதரும் உவர்நீர்க் கேணியில்பரதர் சேயிழைஅவர் குடைகலிப்பும்
ஒளியிடும் தரளம் குளிப்பவர் தெழிப்பும் உறுகடல் துழனியில் ஒலிக்கும்

துங்கவின் தமிழ்ச்சாகரப் பலதுறைநூல் சொற்பொருள்உள நிறைத்து இயற்றும்
தங்கநூல் செறிக்கும் புலவர்போல் பொருள்கள்தண் கடற்றுதுறைதொறு நிறைத்து
வங்கம் வந்துஉரிய துறையினில் சொரிந்தும் வைகுதல்இன்றியே உலவும்
இங்குஅவாப் பொருளைஈட்டுநர் வாளா இருப்பரோ பகலும் எல்லியுமே

**திணை மயக்கம் - வேறு**

பழுத்தநீள்சினைப் பலவுபோய் வேங்கையில் படரத்
தழைத்தவேடுவச் சிறுமகார்அதன் கனிதடிவர்
இழைத்த தீங்கினைப் பொறுமின்என்ற தன்விலைப் பொன்னீ
விழுப்பமாகநற் கணிமலர்த் தூவிடும் விருப்பால் 61

ஐவனங்களும் ஓரையும் ஏனலும் மணியார்
அரைய நுண்ணிடைக் கொடிச்சி யர்அளந்திட வளவத்
தையலார்கள் ஒண்டரள நற்பவளம் தந்திடவே
உய்யுமாறு கொண்டு அன்னவர் இடங்களில் உய்ப்பர் 62

சோகம்செய்யும் அசோகப்பூ அரன்மிசை தொடுத்த
வேகவேள்கணை போன்மெனக் கொன்றைமேல் வீழ்ந்தஅவ்
வேகனாற்கணை எரிந்தபோல் கரிந்து கீழ்இறைதல்
ஊகியாவதை நகைப்பதை ஒக்குமென் முல்லை 63

கமுகுஇளங்கதிர் முத்தமும் கடலலை ஒதுக்கும்
உமிழ்சுடர்ப்பொலி முத்தமும் சேர்வுஉழி உறையும்
மமதை மீக்கொளும் கம்புஉளக் கழிஇடை வாவி
நிமிர்சுறாவினைக் கொத்துமால் சமயநேர் தரவே 64

தடத்தின்நின்று எழும் வாளைஅம் கமுகினைச் சாடிக்
கடத்திற் கானயாற்றுஇடைக் குதித்து உழக்க அக்கான்யாற்று
இடத்தின்நின்று உகள இளவரால் இருமலைச் சுனைவீழ்ந்து
அடுத்த மீனினம் அனைத்தையும் கலக்கியது அம்மா 65



**வேறு**

வேங்கையின் நிழல் மேதி உறங்குவது
ஏங்கு சோலையில் சேர்ந்திடும் வேங்கைகள்
ஈங்கு நானிலத்து இன்னிடம் சற்றுப் பெற்று
ஓங்கு குறுங்குறும்பு ஒத்தன பாலையே 66

இன்ன ஐந்திணையின் வளம் எய்தியே
மன்னும்இத் தொண்டை நாட்டிற்கு வானவர்க்கு
அன்னம் கிட்டுறா அந்தரம் ஆகிய
பொன்னி நாட்டைப் பொருவெனல் ஆகுமோ 67

வானம் மல்குவ மான்மதன் ஐம்மலர்க்
கானம் மல்குவ கண்ணியம் ஓங்குநல்
தானம் மல்குவ சார்வரும் வீடுஅருள்
ஞான மல்குவ நாளும்அந் நாட்டினே 68

ஏட்டின் உள்ளன எண்ணத்தில் உள்ளன
வீட்டின் உள்ளன வேதத்தில் உள்ளன
காட்டின் உள்ளன கண்ணன இத்தொண்டை
நாட்டின் உள்ளன நாடரு நீதியே 69

காலை ஆதிசற் கன்மப் பயிற்சியே
மாலை ஆதிமென் மாதர் முயக்கமே
சாலை யாவும்நற் தன்ம முயற்சியே
மேலை வானினும் மிக்கஇந் நாட்டினே 70

வள்இதழ்ச் செம் மலரில் தடங்களில்
கள்ளம் அல்லது கள்ளம் அற்றுஇல்லிதழ்
விள்ளும் மௌனவன் மெல்லியர் நுண்ணிடை
கொள்ளல் ஆகும் கொடியன நாடெலாம் 71

தலம் எலாம்புகழ் சாற்றும்அந் நாட்டிற்பா
சிலைகு லாம்தரு வேய்ந்த கொடித்திரள்
அலகிலாப் புதல் அன்னவை காய்கனிக்
குலையது அன்றிக் குலைபிறிது இல்லையே 72

**வேறு**

நிழலுலாம்பொழில் அத்தொண்டை நாட்டினில் தெய்வ
விழவுஇயக்கலி மென்மலர்க்கோதை மெல்லியலார்
மழவிடைக்குநேர் குமரர் கள்மணத்தினுக்கு இயம்பு
முழவுஇயக்கலி அல்லது ஏலாகலி மொழியின் 73





இழுக்கம் இல்புகழ்அத் தொண்டை நாட்டினன் எழிலார்
முழுக்கு பூண்முளைக் கலவையின் சேற்றின் மும்மதத்த
பழுக்குலைப் பனைக்கைக் கரி மறுகுஇடைப் பயின்ற
அழுக்கல் இன்றிச்சொல் வழுக்கல்இன்று ஆகும் மாக்கட்சே 74

**வேறு**

திருவளர் தொண்டைஎன்னத் திகழ்ந்திடும் நாட்டின்சீரை
ஒருவிதம் உரைத்தசூதன் ஒளிவிடும் மயில்வேல் ஏந்திக்
கரிமகள் வள்ளிஎன்னும் கன்னியர் உடனேஎங்கண்
முருகன்வாழ் மயிலைக் குன்றம் முதுநகர் உறைதல் உற்றான் 75

**நாட்டுச் சிறப்பு முற்றிற்று**





## நகரச் சிறப்பு

முருகுஎலாம்ஒரு வடிவுஎனத் திரண்டுஎழும் முருகனைக் கிளிமஞ்ஞை
அருகுஎலாம் செறிந்துஇளம் தினைஅருந்திடும் அடுக்கலின் மாச்செந்தேன்
பருகலாம்எனப் பரிந்திடும் அரிவையின் பதமலர் பணிவானை
உருகலாம் உளத்தொடும் பணிந்தவர்பதத்து உய்யலாம் பவம்தீர்ந்தே 76

நாடுஎலாம்புகழ் தொண்டைநாடு எனச்சொலும் நன்மகண் முகமேபோல்
ஈடுஇலாதநல் அழகுபெற்று இலங்கிவேள் இலங்குதன் மனைமாரைத்
தேடலாம்படி உறுமயில்மலை கொளும் திருநகர்ப் பெருஞ்சீர்யாம்
பாடலாம்படி துணிந்தனம் அவன்இரு பதமலர் முடிவைத்தே 77

### மதில் - வேறு

அளவுகொண்டு அகன்ற புவியை உள்அடக்கி அடற்படை உயர் பொறிஅமைந்து
வளமொடுநூலின் ஒழுகலால் உயர்ந்து மணிஒளி திகழ்தலால் பகையைத்
தளைபடுப்பதனால் பல்படை பயிலும் தன்மையால் சூக்குமத் தகையால்
களைகணாம் அரசர் நிகர்க்குமால் மயிலைக் கல்நகர்ச் சூழ்திருமதிலே 78

உயர்வினால் மாலாய் முகங்கணான் கதனால் ஓதிமத் தலைவனாய் உன்னும்
வயங்கொள் வெள்வடிவான் மதிதவழ்தலினால் மாதுஒரு பாகனாய் வானிற்
புயல்இனம் ஊரும்தகையில் இந்திரனாய்ப் பொன்னகர் கடந்து கோளகைபோய்
மயன்முதலிய பேரியாவரும் மயங்க வதிகுவது அந்நகர் மதிலே 79

### அகழி

அம்மதில்புறம் சூழ்ந்துஅகல் இரும்புவியின் ஆழம்அளந்து அறிந்திடவும்
செம்மணிச்சுடி கைச்சேடன்இம் மயிலைத் திருநகர்உறை தருமாந்தர்
தம்மைஒப்பவனோ வல்லனோகல்வித் தகைமையால்என மதித்திடவும்
பொம்மலோடேகும் தன்மையினால் ஆழ்ந்து பொருஅற விளங்கினது அகழி

நீறுஇடார் ஐந்தக்கரத்தை உச்சரியார் நிமலனைப் பணிந்திடார் பவம்நீத்துத்
தேறினும் வீழ்ந்தோர் ஏறிடாவகை ஆழ்ந்துஎழில்சிறை யனக்குழாம்வளைகள்
கூறுமீன் குலங்கள் இடங்கர்நீர் முடுவல் குரண்டம் இன்னன பலகுழுமி
நாறுமாமலர்கள் அளப்பில் அமர்ந்து நறைதர விளங்கும்அக் கிடங்கே 81

### வீதி - வேறு

வாகை உற்றிடும் அறைபயின் மடம்உயர் தந்து
பாகம்ஆர்மடம் புராண ஆகமம்பகர் மடமே
ஆகநச்சிய பதிநல்இசை வளர்மடம் இவ்
யோகர் ஞானிகள் உறைகின்ற மடம்பல உளவால் 82

ஆதிசைவராம் அந்தணர் வீதியும் மலரோன்
தீதிலாமுகம் வருமறை வேதியர் தெருவும்
நிதியாய் உலகுஆடரும் நிருபர்தம் மறுகும்
ஏதமற்றநற் பொருள்பெறும் வணிகர்தம் இருப்பும் 83

அடுத்துஉள்ளோர் நிரப்பு அடுத்திடாவகை அருள் நிதியம்
கொடுத்தல்இன்றி எவ்உயிர்கட்கும் பசிகொடார் ஆகி
விடுத்திடாப் புகழ் மேவுவேளாளரும் அவர்பால்
உடுத்த ஏவல்மாந்தர் அருமுறை தெருக்களும் ஒளிரும் 84

**வேறு**

தெள்ளு சாந்தில் திகழ்மணி மாடங்கள்
வள்ளி யானையை மைந்தன் மணப்பதை
உள்ளி ஈசன் வரப்பல் உருக்கொடு
வெள்ளி மால்வரை வந்துஎன மேவுமால் 85

மாடம் மேவும் மணிக்கொடி பத்தியில்
கூடி வானில் குலவுதல் வான்மக
ஆடி ஆதவற்கு ஆநந்த நண்ணுற
நீடு சாமரை ஆட்ட நிகர்க்குமால் 86

வென்றிப் போரின் விளங்குஅரி ஏறனார்
துன்று பூங்குழல் அத்தோகைநல் லாரைநன்
மன்றல் அன்பின் மருவுறு மாடங்கண்
முன்றில் தோறும் முரசம் முழங்குமால் 87

துகிலினார் கொடி தோன்றிய மாடமேல்
அகிலின் தூமம் அளாவிய நாப்பணி
அகில்சுமந்த நகைமுக வல்லியர்
முகிலின் ஊடொளிர் மின்என மொய்ப்பரால் 88

மாட மாளிகை மீது மடநல்லார்
ஆடு கின்ற சிலம்பொலி அண்டர்ஊர்
கூடி அங்கு நடித்திடும் கோதையர்
வாடி நிற்க மயக்கம் விளைக்குமால் 89

மயிலியல் திருமாதர் மதனனார்
செயிரின் மேல்நிலத்தில் செய் கலவிகள்
பயிலும் காலைப் பரிந்து களைந்துஎறி
வெயின் மணிப்பணி மின்என வீழுமே 90



சந்தனம் திமிரும் தட மார்புஇடை
முந்து அனங்கன் விடும்கணை மோதிட
வந்தனங்களின் வேதுஒற்ற ஆடவர்
வந்தனங்கள் புரிவர்இன் மாதரை 91

தத்தை நாயகர் பேசுசை யோகவா
தத்தை ஓதவும் தையலர் கேட்டுஒளிர்
முத்தை ஒப்ப முறுவல் புரிந்துவாய்
முத்தை ஈய முகத்தில் அணைப்பரால் 92

கோட்டு வாரணக் கொங்கையும் ஓரிரு
கோட்டு வாரணமும் மதம் கொள்வன
கோட்டு வாரணக் கோமதனார் தநுக்
கோட்டு வாரணம் கூவும் அளவுமே 93

**வேறு**

கார்உலாவு பொன்கந்த வெற்போடு நற்கனக
மேருஆதிய வந்துஅறு முகப்பிரான் மேவி
யாரும் இத்தலத்து அமர்தல்போல் பொன்மணி அமைந்த
தேர்உயர்ந்து நீள்கோடுஅகம் செறிவன திகழ்ந்தே 94

ஐங்கரத்தன் எம்உருவினில் சிறிதுபெற்று அன்றோ
துங்க மூவுலகும் தொழத் துலங்கினன் என்றால்
எங்கண் மேன்மையினை இசைக்குநர் உளர்கொலோ என்னாத்
தங்குமால் களிறுஅளப்பில தருக்கொடு வயங்கும் 95

அரிஅரீமுதல் பல்வகைப் பிறவியில் ஆழ்ந்தும்
பெருமை இன்றென எம்உருவு எடுத்தபின் பிறவான்
தெரிஇனி யாங்களே உயர்வென நிமிர்ந்து திண்திறல்சேர்
பரியினம் தெருஇடை இறுமாப்பொடும் பயில்வ 96

**கடைவீதி**

மணிபொன் பீதவத்திரம் வளைஆழி மல்குதலால்
பணிபணம் பொருந்து தலினால் படிஅளப் பதனால்
அணிகொள் நீட்சியால் இசையினால் யாரும்வந்து உறலால்
கணிகொள்ஆ வணம்செந் திருமால் எனக் கவினும் 97

சந்தனத்தை மென்கலவையின் சாந்தினைக் கொண்டு
வந்தனத்தை நேர்நடையினர் பகர்ந்திட வைப்பக்
கந்தனத்தைநேர் மெல்லியர் வாங்கித்தங் கணவர்
தந்தனத்தை நாடாதுமேற் பூசுவர் தழைப்ப 98

நகையை நாசியைக் கண்கன்ள வாயைநன் முலையைப்
பகைசெய் முல்லை சண்பக நெய்தலாம் பல்பங்கயத்தின்று
தொகையைக் கைப்பிடி யாக்கட்டித் தூக்கினர் பகரச்
சிகைமென் காட்டினில் கொண்டுபோய் இடுவர்வாழ் செல்வர் 99

**தாசிவீதி**

மனம் பொருந்தினும் வாலிபம் பொருந்தினும் மதிக்கும்
கனம் பொருந்தினும் கல்வியைப் பொருந்தினும் கருதார்
தனம் பொருந்தினர் தம்தனம் பொருந்துஉறத் தருவார்
வனம் பொருந்துஉறும் கணிகையர் உறைதெரு வயங்கும் 100

அற்பினோடு வந்துஅரசரும் இருநிதி அளித்துஎம்
நற்பதம் பணிந்திடச் சுகம் அருளுவ நாடின்
கற்புமாதருக்கு எவன் சிறப்பு யாங்களே கடவுள்
பொற்பு மாதர்என்று உலவுவர் பொதுமட வியரே 101

**நீதி - வேறு**

பாலன் அங்கம் பருத்திடத் தாயர்அன்
பால் அனங்கள் பரிந்துஇனிது ஊட்டுவார்
பாலனம் செயும் பண்புஉறு நந்தகோ
பாலன் அம்மரு கன்பணி செய்யினே 102

ஆர ணங்களை அந்தணர் ஓதுவார்
ஆர ணங்கனர் அன்னம் வழங்குவார்
ஆர ணங்கு சடையவர் நீறுஅணி
யார் அணங்குஉறு வார்என்று அறைவரே 103

**வேறு**

பேறெனப்பெறும் பொருள்எலாம் பெற்றிமை ஆக
வீறியேஇருக் கின்றனநம் பரன் விரும்பு
நீறுஇலா ததோர் முகமும் அந்நிமலனார் எழுத்தைக்
கூறிடாததோர் வாயும்அங்கு இல்லையால் குறிக்கின் 104

கல்வியால் உயர் அனந்தனைக் கீழ்உறக் கண்டார்
ஒல்லும் மெய்யுரு வான்மதன் உருவினை ஒழித்தார்
செல்வ மேன்மையால் தனதனைக் குருடனாச் செய்தார்
மல்லன் மேவுசீர் மயிலையங்கிரி நகர் மாந்தர் 105

தந்தை தாய்மொழி தவறிடாத் தகைமையும் பெரியோர்
வந்து நாடிடும் பொருள்பல வழங்கிடும் மனமும்
தந்த நாயகர்த் தேவுஎன மகிழ் விரதமுமே
சொந்தமாய் மதித்திருப்பவர் கற்பகத் தூயோர் 106



அறத்தின்நன்னெறி இல்லறம் ஆற்றுவது அறமே
புறத்தினன்நெறி போய்உறும் பொருள் எவன் என்னா
உறுத்திடும்படி மேலவர் ஓதிய மநுநூல்
மறுத்திடாதவர் வாழ்க்கையே விளங்கும் அந்நகரில் 107

தவமும் ஞானமும் மெய்ம்மையும் பொறுமையும் தயையும்
சிவன்பதாம் புயம்திகழ் தரும்சிந்தையும் சிறப்ப
அவமெனப்படும் அவற்றையும் பரிகரித்து அமர்வார்
உவமைஅன்னவர்க்கு எவரையாம் உரைத்திடு வோமால் 108

**வேறு**

பூகமா மரங்கள்எங்கும் போர்மதன் சுரங்கள் எங்கும்
யாகசா லைகளேஎங்கும் அவன்லீ லைகளே எங்கும்
யோகியர் வாசமெங்கும் உத்தமர் நேசம் எங்கும்
கோகிலத் தொனியேஎங்கும் கொத்தெழில் கனியே எங்கும் 109

மறைஅவர் நடையேஎங்கும் வள்ளியோர் கொடையே எங்கும்
கறைஅறு மதியேஎங்கும் கணக்குஅறு நிதியேஎங்கும்
நிறைபுனல் தடமேஎங்கும் நிலவன மடமேஎங்கும்
மறைதமிழ்ப் பண்ணேஎங்கும் அருள்பெறு கண்ணேஎங்கும் 110

வாரணம் மாவேஎங்கும் மணம்உறு காவேஎங்கும்
தோரண நிரையேஎங்கும் தூயவர் உரையே எங்கும்
தாரண ஒளியேஎங்கும் சகலர்க்கும் அளியேஎங்கும்
பூரண மனதேஎங்கும் புலவர்கள் தனதேஎங்கும் 111

அடியவர் உருவேஎங்கும் ஆறெழுத்து அருவேஎங்கும்
மிடிதொலைப் பவரேஎங்கும் வினைஅலைப் பவரேஎங்கும்
கடிமலர்த் தாரே எங்கும் கனம்உடை யோரேஎங்கும்
படிதொழு மயிலைக்குன்றப் பதிதனில் விளங்குமன்னோ 112

**வேறு**

பேறுஎலாம் பெறஅடைந்தவர் தமக்குஅருள் பெம்மான்
ஆறுமாமுகப் பரன்உயர் சித்தனோடு அமர்ந்த
மாறுஇலா வளமயில் மலைநகரின் மாண்பு அணைத்தும்
கூறல்ஆவதோ ஒருவரோர் நாவினைக் கொண்டே 113

**நகரச் சிறப்பு முற்றிற்று**

## முதலாவது
## திருக்கைலாயச் சருக்கம்

மாதாஎனும்சொற்கு இணங்கநிதம் வழுத்திப் பணியும் வகைஅறியாத்
தீதார்சிறியர் தமக்கும்அளி செய்யும் உமையாள் தருபுதல்வா
போதாதிகிரிப் படைக்கரப் பைம்புயன் மேனியன் உள்மகிழ் மருகா
நாதாசிகரித் தேவாஎன் னவைதீர்த்து அருள்வது உன்பரமே 114

**வேறு**

பொன்ம யூரச் சயிலப் புரிவளம்
சொன்ன மாமறைச் சூதனை நோக்குபு
மன்னு நைமிச மாவன மாதவர்
உன்னிஉள்ளம் உவந்து உரைப்பார் அரோ 115

கங்கை வந்தநம் கந்தன் கணத்து உயர்
சங்கு கன்னன்சூர்ச் சாய்த்தனன் என்னவே
துங்க மாதவ நீமுனம் சொற்றதை
எங்கண் முன்விரித்து ஓதுதி என்றார் 116

இன்ன ணம்பகர் அந்தணர் இன்புறச்
சொல்நலம் புணர் சூத முனிவரன்
மன்னு மாதவர் கேள்மின் என்றேமகிழ்ந்து
அன்ன வண்ணம் அறையல் உற்றானரோ 117

நல்ல செய்அறமே முதல்நான் கையும்
ஒல்லை மெய்அடியார்க்கு அருளோர் முதல்
வல்லி வள்ளி தெய்வானை மணாளன்தன்
செல்வ மெய்க்கதை செப்பற்கு எளியதோ 118

மாஇரும் புவி வானம் வரியராத்
தோய்உறும் தலம் முற்றும் தொழுதிடும்
சேய்அரும் கதை செப்புதற்கு ஓர்பதி
னாயிரம் பருவத்தினும் ஆவதோ 119

திலக வாள்நுதல் தேமொழி ஈர்ங்குழல்
கலக வாள்விழி வள்ளிதன் காதலன்
இலகு காதை இயன்ற அளவுஓதுவன்
உலகெலாம் உய்ய உன்னு முனிவரீர் 120

முன்னம் மேவும் முதல்யுகம் தன்னிலே
பன்னும் இக்கடல் பாருள்ளத் திக்கினும்



கன்னி பாகக் கடவுள் மறைமுதன்
மன்னும் ஆகம மாண்பு மறைந்தன 121

இல்ல றத்தின் நெறியும் யாகமும்
சொல்ல ரும்துறவின் தவத் தூய்மையும்
மல்லல் லாரும்எண் ணான்கெனும் மாண்புடை
நல் அறங்களும் ஒய்ந்து நலிந்தவே 122

வீறு கொண்டுபல் வெம்சமயப் புட்கள்
கூறு கொண்டு சைவப்பயிர்க் கோதிட
ஆறு கொண்ட இருஞ்சடை அண்ணல்தன்
நீறு கொண்டுஅணி யும்நெறி நீங்கிற்றே 123

முந்து எழில்திரு மால்உந்தி முண்டகன்
வந்து எழுப்பும்இம் மாநில மாந்தர்கள்
நந்து எழுத்தை நவின்றனர் ஆகிஓர்
ஐந்து எழுத்தை அறைமதி அற்றனர் 124

இத்திறங்கள் அனைத்தையும் எண்ணு றீஇச்
சித்தர் மாதவர் சேர்ந்தனர் ஓர்உழை
அத்தனுக்கு உரைப்பாம் என்று அகத்திடை
வைத்த காதல் வழாதுசென்றார் அரோ 125

**வேறு**

துள்ளிச்சிலம்பார் மலர்அடியைத் தூக்கிஐம்பான் தொழில்நிகழ
உள்ளிச்சிலம்ப நிருத்தம்இடும் ஒருத்தன்உமையாட்கு ஒருபாகன்
தெள்ளிச்சிலம்பு ஆறுஅணிசடிலன் இருந்தும்தளியாக் கொண்டுஅருளும்
வெள்ளிச்சிலம்பின் அடிஅடைந்தார் வேதம்சிலம்பும் நாவுஉடையார் 126

அந்திமதிச்செவ் வான்சடிலத்து அமலன்பொன் தாள்அணியும்முடிப்
பந்திஉரிஞ்சும் சேவடியான் பரவுகயிலைக்கு ஒருகாவல்
நந்திஅடிகள் அடிபரவி நன்குபழிச்ச அவ்இறைவன்
சிந்தைசெய்து உய்த்திடஈசன் திருமுன் தவத்தர் சென்றனரால் 127

**வேறு**

ஒருகோலம் காணுதற்கு ஒண்ணாது இலகுமலர்த்தாளன் ஒப்பீறில்லான்
இருகோலம் கொண்டதிரு மேனியினான் முக்கோலன் இசைநாற்கோலன்
வருகோல்ஐந்துஎன்நடையையாக அழல் கோவைஉளான் மனத்துட்கொள்வோர்
திருகோலம்இடத் திருஓலக்கத்தின் இருந்தபர சிவத்தைக் கண்டார் 128

கண்டவுடன் புளகம்எய்தி உடல்பனிப்ப உளம்உருகிக் கண்ணீர் வாரக்
கொண்டதிருக் கரம்சிரத்தில் கூப்பி அரகரஎன்னக் கூறும்ஓதை

தெண்திரை நீர்ஒலிகடுப்ப ஐந்தினும் எட்டினும் வணங்கிச் சிவாநந்தத்தேன்
உண்டதுஅகம் கொளத்தேக்கி மேல்வழிதல்எனத் துதிகள் ஓதல்உற்றார்

கரும்குவளை நிகர்மிடற்றுஎம் கண்நுதலே முத்தலைவேல் கனன்மான்கையா
மருங்குவளைந் திடநிமிர்ந்த முலைமலைமா தணிகடவுள் மணியேசூலால்
நெருங்குவளைக் குலமுரலும் பண்ணைதிகழ் தில்லைமன்றில் நிருத்தம் செய்வோய்
ஒருங்குவளைத்து அடியர்இடர் முக்குறும்பைக் கடிந்துஅருளும் உம்பர்ஏறே

மால்அயன் இந்திரன் முதலாம் கடவுளர்வந்து அடிவணங்கி வாழ்த்தும் மூவா
மூலமுதலாம் பொருளே முனிவர்உளத்து அகலாத மூர்த்தியே நின்
சீலம்உணர்ந்து இத்துணைஎன்று யாவர்வழுத்துவர் வெள்ளிச் சிலம்பில்மேவும்
பாலவிலோ சனஅரவா பரணசிவசங்கர எம்பரம போற்றி 131

அன்பர்உளத்து இடைஅகலாது ஆநந்தச் சுவைசுரக்கும் அமுதேஎன்றும்
இன்பஉரு வமாய்இலகும் தவம்ஏயத் தவம்அதனால் எய்தும் பேறே
பொன்புணர் மான்முதல்அமரர்க் காய்ந்துஇரவி எயிறுஉகுத்த போரில்வல்லோய்
நின்பெருமை சொலற்குஎளிதோ பொன்மலை வில்ஏந்து திண்தோள் நிமலாபோற்றி

என்றுபலவாறு துதித்துஏத்தி நின்ற முனிவரை இனிதின் நோக்கி
நன்றுஉமது துதிவியந்தாம் எவன்குறைஉற்று ஈங்குஅடைந்தீர் நம்முன்நீவீர்
ஒன்றுதுயர் தமைஉரைமின் எனக்கனிவாய் மலர்ந்தனனால் உமையாளோடும்
பொன்திணி மாமணித்தவிசின் அமர்ந்துஇலகும் கைலைமலைப் புத்தேள்அன்றே

இத்திருவாக்கு அளித்தஉடன் இறைஞ்சி மலர்க்கரம்கூப்பி எந்தையேநின்
சத்தியஆகமவேத சாத்திரங்கள் பாடுஅழிந்து தரணி தன்னில்
எத்திசையும் விளக்கம்இலாது இருத்தலினால் அவைதுலக்கம்எய்தா நிற்ப
நித்தம்நினது அடிஅடைந்தேம் எமக்குஇரங்கி அருள்புரிக நிமலஎன்றார்

அவ்வாறே அருள்புரிந்தான் உம்இருப்பில்ஏகும்என அமலன் கூறச்
செவ்வாய் வெண்ணகைபாகர் தொழுதுவிடை கொண்டு அகன்ற செய்தவத்தோர்
இவ்வாறு நலம்பெறுதற்கு எத்தவம் செய்தனமோ என்றுஇறும்பூதுஎய்தித்
தெவ்வாய பலசமயம் கெடும்சமயம் பார்த்திருந்தார் சிந்தித் தாராய்

**வேறு**

இவ்வணம் ஏகிய பின்னர்எம் அண்ணலின் எண்ணத்தான்
அவ்வண்ணமே சிற்சில பகல்கழிதர ஆங்கோர்நாள்
கொவ்வை இளங்கனி வாய்இமயம்தரு கொம்பன்னாள்
எவ்வமில்தண் புனல்ஆடஉளத்துஇடை எண்ணல் உற்றாள் 136

வானவர் விஞ்சையர் கேசரர் சித்தர்கள் வரியாழின்
கானவர் தும்புரு நாரதர் அந்தணர் களும்மேவத்
தான்உயரும் பதமேஅருள் கைலைச் சைலத்தின்
மேனிலவோர்இடை மேவினள் உலகை விரித்தாளே 137



**வேறு**

அவ்இடைக் கற்பகம் அகிலம் சந்தனம்
எவ்வம்இல் சண்பகம் ஆதி ஈர்ம்பொழில்
செவ்வையின் அமைவுஉற நடுவண் தீம்புனல்
திவ்விய தடம்ஒன்று சிருட்டித் தாள்அரோ 138

சந்திர காந்தத்தின் படிகள் சார்ந்துஒளிர்
இந்திர நீலத்தின் கரைகள் ஏய்ந்துஅதில்
செந்துகில் விளிம்புகள் சேர்ந்த தாம்ஒரு
சுந்தரத் தடத்துஎழில் சொல்லல் பாலதோ 139

தேம்படு பாசிலைச் செய்ய தாமரை
ஆம்பல்அடுங் குவளைகள் அரிய நீலங்கள்
மேம்படு வலம்புரிச் சங்கம் வெண்மதி
சாம்புஒளி முத்தமத் தடம் மலர்ந்ததுவே 140

கோகிலம் இனியதே மாவிற் கூவுதல்-
ஏகநா யகன்கணால் ஏய்ந்த துன்பினை
ஒகையோடுஉறும் உமைக்குஉரைத்து ம்ஆரஉன்
ஆகம்அது அடைதிஎன்று அழைத்தல் போலுமால் 141

அத்தனி மதுமலர்ப் பொழிலின் ஆய்மயில்
சித்திரத் தூவிஅஞ் சிறைவிரித்து ஒளிர்
முத்துஅரிச் சிலம்புஅடி பெயர்க்கு மோகனக்
கொத்துஎழில் மாதர்போல் நடம்கு ணிக்குமால் 142

ஆழ்தரு தீம்புனல் நிரம்பி ஆய்மணிக்கு
ஆழ்தரு தடம்திகழ் கடிமென் காவினைச்
சூழ்தரு பொன்மதில் நிலவித் தூமணிப்
பாழிமால் வாயிலோர் பாங்கர் மேவுமால் 143

**வேறு**

இன்ன பொற்பின் தடத்தை இமைப்பதன்
முன்னம் அன்னை முடித்தன் அளிச்செயல்
உன்னும் கால்வியப் பீதன்று உலகெலாம்
தன்னுள் இன்றொர் கணத்தினில் தந்ததால் 144

ஆய பூம்பொற் தடத்தினில் ஆய்மணி
வாயில் காப்பச் சிவகண மன்இறை
மேய சீர்ச்சங்கு கன்னனாம் மேன்மையார்
தூயவன் தன்னை ஏவினள் சொல்லுவாள் 145

வைத்த காவல் வழாவகையாம் புனல்
இத்த டத்தின்நின்று ஏகும் அளவுஇவண்
எத்தி றத்தகை யோர்களும் எய்துற
உய்திடாது உறைஈங்கு என ஓதினாள் 146

ஓத வாயில் புறத்தினில் உற்றனன்
நாதன் நல்உருப் பங்குஇடு நங்கைதான்
வேதன் மாயவன் விண்ணவர் தந்தகை
மாதர் சூழத் தடத்தினில் வந்தனள் 147

**வேறு**

குன்றா எழிலே கொளும்வா விஇடைச்
சென்று ஆடினள்அச் சீரார் உமையாள்
பொன்றுஆழ் திதலைப் புணர்பொம் மன்முலைத்
துன்றேர் இடையார் துணைசூழ் தரவே 148

தெருளே பெறுசித் தர்கள்தேர் வருமெய்ப்
பொருள் ஆடநலம் தருபொற்பு ஆழி
சுருள்ஆர் திரைதூய் புனல்ஆடு தல்தன்
அருளாழி இதாம்எனலா குமரோ 149

திருமங்கை திகழ்ந்து ஒளிர்வெண் கமலத்
தருமம் கைமருங்கு உறவாய் மயில்ஏர்
வரும்அங் கிலனங்களுள் வாவுதல் போல்
ஒருமங் கைஉலா யினள்நீரி னுளே 150

உழுதுஆடி அரிக் கணம்ஒண் கமலக்
குழுமா மலர்மென் மதுகூட்டு உணும்அச்
செழுநீர் குழல்தூவினள் தீம்பிறவி
எழுதா வகையின் னருள் தூஅனையே 151

தன்நா யகன்நேர் பெறுதார்ச் சடைமேற்
பன்னா ளினும்வாழ் பாகீ ரதிபேறு
என்னாம் எனவே இருதா ளின்மிதித்து
அன்னீர் இடைஆ டினள் ஆர்அணியே 152

பாரார் தருபல் உயிர் அண்டமெலாம்
சீராய் அருளும் சிவசங் கரியா
நாரா யணிநா யகியத் தடநன்
னீரா டினள்நீள் தரும்அன் பினளாய் 153



**வேறு**

அறத்தலைவிஅச்சிலம்பின் அமைந்த மலர்த் தடத்தில் விளையாடும் காலைக்
கறுத்தமணிக் களத்துஅனந்த வரைச்சாரல் தொறுநேடிக் கவனம் கூர்ந்துஅங்கு
உறத்தனித்து விளங்கியதோர் வாவியைக் கண்டுஅதி சயித்துஉள் உவகைபொங்கி
வெறுக்கை ஒளிஎனத் துலங்கும் இயன்தடம்இங்கே புதிது என்ன எண்ணி

ஆவிஎலாம் படைத்து அளிக்கும் அமலன் அங்குமேவும்போது அம்மை முன்னம்
வாவிமருங் கியாரேனும் வாராமல் காத்துஎன வகுத்த மாற்றம்
காவல்கொடு அங்கிருந்த சங்குகன்னன் உலகுஎங்கணுமே கலந்து நின்ற
தேவனுக்குமோ அவன்என்று உரையாடாது இருந்தனன் மேற்செயலை ஓரான்

பிஞ்சுமதி அணிசடிலப் பெருமான்அத் தடக்கரைசேர் பெற்றி தன்னை
வஞ்சிஇமயமலைஈன்ற மடமயில் கண்ணுற்று எழில்சேர் வாவி நீங்கி
எஞ்சல்இலாது உளத்துஎழுந்த பெருநாணத்திடை மூழ்கி இடர்உற்றுஏகி
மஞ்சொலிப்பக் கலைதிருத்தி வஞ்சியரோடு ஒளிப்பதனை வள்ளல் கண்டான்

தையல் உளஇருப்பால் இங்குஇயற்றிய நீர்விளையாட்டின் தன்மை தன்னைப்
பையநமக்கு உரையாமல் இருந்தனன் இச்சங்குகன்னப் பரிவிலான்என்று
ஐயன்மிகவும் செயிர்த்து மீளவும் வந்துஅனையன் முகம்அதனை நோக்கித்
துய்யஉமை புனல்ஆடும் செயல்நமக்குஇங்கு ஓதாத துகளினாலே 157

வந்தஅபசாரத்தால் நமதுகணங்களின் தலைமை வாய்ந்தநீதான்
இந்தஉரு இழந்து அவனி தன்னில் அரவுஉருஎய்தி யியறியென்னாச்
சிந்தைதெரு மந்துஇனிஎன் செய்குவல் என்றுஅடி வணங்கிச் சிரமேல் கைசேர்த்து
எந்தையே எவ்வுலகும் படைத்தவனே எனத்துதிகள் இயம்பல்உற்றான் 158

**வேறு**

முக்குணமாய்மூவுருவாய் ஆக்கல்காத்தல்முடித்தல்இவைமுடித்துஅருளும்முதல்வாபோற்றி
அக்கறுகுகொன்றைதும்பை செஞ்சடைவேணிக்கு அணிந்துஅருளும்தற்பரனே அரனேபோற்றி
இக்குவிலைக் கையில்ஏந்து மதனன்மாளா எரித்தநுதல் கண்ணானே இறையேபோற்றி
தக்கவர்கள் உளம்அகலாது ஆநந்தத்தேன் தண்மாரிதூவுசல தரமேபோற்றி

மலைக்கொடிக்குஒர் பால்உதவி இலங்கும்வெள்ளிமலைக்கிறைவனே பவளவண்ணாபோற்றி
அலைக்கடுவை மிடற்றுஅடக்கி அமரர்ஆவி அழியாமல் அன்றுஅளித்த அரசேபோற்றி
கொலைக்கரியை அலக்கணுற உரித்துப் போர்த்த கொற்றமிகு மூஇலைவேல் கோவேபோற்றி
சிலைக்குஇசைய நெடும்கைலம் குனித்தவெற்றிச் சேவகனே பாவகத்தின் சிறப்பேபோற்றி

விடநாகம் அணிந்ததிரு உருவாபோற்றி விடைக்கொடிஏந்திய கரத்து வீராபோற்றி
படநாகக் கங்கணனே போற்றி வேதன்பஞ்ச முகத்துஒரு முகத்தைப் பறித்தாய் போற்றி
திடம்மிகுஇடபம் உகைத்தோனே போற்றி சிறுமானைத் தரித்துஅருளும் சிவமேபோற்றி
வடநிழலில்சனகாதி நால்வருக்கும் வாய்மலராது உண்மையினை வகுத்தோய் போற்றி

அனந்தகுணன்ஆகிஎல்லாம் தானேஆகி அங்குஇங்குனைமால்எங்கும் அமர்ந்தாய் போற்றி
நினைந்த அடியார்உளத்தின்விழைந்தல்லாம்நிறைதர அங்குஅவர்க்குஅருளும்நிதியே போற்றி
கனந்தருக்கு ஆலவனம் தன்னில் வானைம்தூக்கிய பொற்பதநடனத் துரியா போற்றி
சினந்தருளம்பிறவினும் கோடை தீர்ப்பான் செறிந்துவருதிக்கு முகில்திரளே போற்றி

புதுக்குறைவிலாளியே அன்பிலேனின் முண்டகத்தாள் துணையேத்த முயலுகில்லேன்
விதுக்குறைகுடும்கடிலவினையேன்தன்பால்விளைவது அரிதோபிழைதான்வெகுண்டுநீயே
அதிர்ப்புறஇக் கொடும்சாபம் அளித்தல்நின்னைஅன்றி இதுதீர்ப்பவரார் அடியேற்கு எந்தாய்
புதுக்குதமிழ்க் கவிபொழிவோர்க்கு அருள்சுரக்கும் புண்ணியனே இச்சாபம் போகுமாறே

நாயினேற்கு அருள்தருவாய் என்றுசங்கு கன்னன்அங்கு நவின்மாற்ற நம்பன்கேளாப்
பாய்அதிரை நீருடுத்த உலகின்மேவிப் பயன்தருநன் நெறிமருவப் பரந்தவேதப்
தூயசிவாகமம் இவற்றைத் துலக்கம்செய்து தோமறுசைவம் தழைப்ப முயன்று நம்தம்
சேயினுடனே என்று சமமாய்நின்று செருச்செய்வாயோ அன்றே தீரும்சாபம்

அச்சாலை நமதுஉருவோடு அமர்திஎன்ன வரன்அருளி எழுந்தருளச் சங்குகன்னன்
ஒச்சவரும் துதிபுரிந்தே இறைஞ்சிநாயேன் உய்ந்தனன் உய்ந்தனன் இன்றேஎன்று பல்கான்
மிக்கமண்மேல் ஆழ்ந்துஎழுந்து புளகம்கூர்ந்து விழியிரண்டும்துளிபனிப்பவிகற்பம்இன்றி
அக்கணத்தில் புவிஅதனில் அடைவான்வேண்டி ஆர்வமொடுஉளத்தின்இடை எண்ணுவானல்

**வேறு**

அனைத்து உயிரும் தந்துஅளிக்கும் அம்மைசெயும் நீர்விளையாட்டு அதனைஆங்கு
தனக்குஅறிவியாது இருந்த சங்குகன்னன் தன்னைஅரன் சபித்தல் சொற்றாம்
வனப்புஉறு மன்னோன் புவியில்வந்த அரியபாலசித்த வடிவமாகக்
கனைத்திடும்ஆழ் கடல்இடைநின்று எழுந்தநலம் விழைந்துஇனிது கழறுவாமால்

**திருக்கைலாயச் சருக்கம் முற்றிற்று**





## திருக்கைலாயச் சருக்கம்

(வசனம்)

தவச்சிரேட்டராகிய நைமிசவனத்து முனிவர்கள் வினவ சூத முனிவர் கீழ்க்கண்டவாறு சொல்வதாயினர்.

முனிவர்களே, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு புருடார்த்தங்களையும் தமது அடியார்கள் பெற்றுஉய்யக் கொடுத்து அருளும் முதல்வரும், வல்லிதேவசேனா சமேதரும் ஆகிய ஸ்ரீசுப்பிரமண்யக் கடவுளது திவ்யப் பிராதபமானது எவ்வளவு கூறினும் முடிவு பெறாது. ஆதலின் என்னால் இயன்றவரை சொல்லுவன்.

முன்னொரு யுகத்தில் பரசிவனால் அருளிச் செய்யப்பட்ட வேதஆகமங்கள் அவற்றின் நெறிகள், அனைத்தும் நலிவடைந்து தீயபுறச் சமயங்கள் எங்கும் பரவின. அதுகண்ட தேவர் முனிவர் முதலினோர் கூடித் திருக்கைலாயகிரி அடைந்து திருநந்தி தேவர் வழிவிட உட்சென்று கருணைக் கடலாகிய ஸ்ரீபரமேசுவரனைக் கண்டு வணங்கித் துதித்துத் தமது குறையை விக்ஞாபித்து, அவர் திருவுளம் இரங்கி 'அத்துயர்தீர அநுக்கிரகித்தோம், நீவிர் நும் இருப்பிடம் செல்க' என்று அருள்உரை கொண்டு சென்றனர்.

பின் சிலநாள் கடந்துழி சிவபிரானது திருவருள் இயக்கத்தால் அருள்சத்தியாகிய அம்பிகை திருஉள்ளத்தில் புனல் விளையாட்டு விருப்பம் கொண்டனள்ஆகி கயிலைமலையின் ஒருசார் சென்று அங்கு திவ்ய அலங்காரநீர் நிலைத் தடாகமொன்றும், நாற்புறம் சோலை, மதிலும், சிருட்டித்து, அதன் வாயிலில் காவலாகச் சிவகணங்களுள் சிறந்த சங்குகன்னன் என்பானை நியமித்து, 'யாம் இத்தடாகத்தில் நீராடி வெளிப்படும்வரை, எத்தகையோர் வரினும் உட்செல்லவிடாது காக்கக் கடவை' என்றுஓதி, திருமகள், கலைமகள் முதலிய சேடியர் சூழத் தடாகத்துள் சென்று விளையாடுவதாயினள்.

அத்தருணம் நீலகண்டராகிய பரமேஸ்வரன் பார்வதிதேவியாரைக் காணாது அந்தத் தடாகத்தைக் கண்டு இஃது ஏதென்று எண்ணி உட்பிரவேசிக்குங்கால், காவலிருந்த சங்குகன்னன் தடைசெய்யாது வாளா இருந்தனன். தமது கணவராகிய பரமசிவன் உள்வரக் கண்ட பார்வதி நாணம்அடைந்து கலைபேணி ஒளித்தனள். அதுதெரிந்த பெருமான் சங்குகன்னனை நோக்கி 'பார்வதி நீராடும் விஷயத்தை எமக்குக் கூறாது வறிதிருந்தமையால், நீ இவ்வுரு நீங்கி மனிதவடிவு அடையக் கடவை' எனச் சபித்தார்.

அதுகேட்டு அவன் மனம்கலங்கி 'அன்பு அறிவு சிறிதும் இல்லாத அடியேன்மீது தேவரீர் சினந்து இக்கொடும் சாபம் இட்டீர். இது தீர்வது எவ்வாறு?' என்று பலவிதமாகத் துதித்து வணங்க, அது கண்ட பரமேசன், கருணையினால் 'நீ பூவுலகில் சென்று வேதஆகம நன்னெறிகள் எங்கும் பரவச் செய்து நமது குமாரனான முருகனிடம் சமயுத்தம் செய்வாய். அப்போது சாபம் தீரும்' என அநுக்கிரகித்து அந்தர்த்தானம் ஆயினார். சங்குகன்னன் பணிந்து மகிழ்ந்து பூவுலகத்தில் வர எண்ணியிருந்தனன்.





## இரண்டாவது
## பாலசித்தர் திருஅவதாரச் சருக்கம்

மலைமுனிக்கு அருள்தந்தானை மறலிபால் எனைத்தாரானை
நலமலிவனம் வந்தானை நவைஉளோர் அகம்வாரானை
அலை வறந்திடக் கண்டானை அடியர்செய் பிழைகாணானை
இலைகுலாம் அயில்வேலானை இறைஞ்சிநன் மகிழ்கூர்வாமே 167

**வேறு**

அலகில் சோதிபொன் அம்லத்தாடு வான்அருளால்
இலகுவாண்முகச் சங்குகன்னப் பெயர் இறைவ
உலகில் தோன்றிடு கதையினை யாம்இனிது உணரப்
பலகலைக்கும் ஓர்உறையுளாம் தலைவநீ பகர்வாய் 168

என்று கூறிய சௌனகாதியர்களுக்கு இனிதாய்த்
துன்று நற்புகழ்ச் சூதமாமுனிவர துகள்தீர்
மன்றல்ஆர் கடம்புஅணி புயவேலவன் மலர்த்தாள்
ஒன்று உளத்தில் ஓர்ந்து அன்புடன் கேண்மின் என்று உரைப்பான் 169

மாற்றி இத்தனும் எத்தனும் ஆகஇம் மண்மேல்
தோற்றுவாம்எனச் சங்குகன்னப் பெயர்த் தூயோன்
சாற்றுமானிட யோனியின் வரின்இடர் தரும்அக்
கூற்றுஅகற்றியே தோன்றுதல் நலம்எனக் குறித்தான் 170

**வேறு**

கயிலை மலைக்குஇறை யோன்அருள் வண்ணம் கடல்புடை சூழ்தரு காசியின்ஊவடே
மயிலைமலைக்கு அருகாய்ஒரு தானம் வந்துஅரிதாகிய மானிடன்ஆகும்
செயலைஅகம் கருதித் இக்களிமேவித் திரைநுரை சேர்தரு மார்கலிசேரா
வெயிலை விரித்து அதிகாலையின் மேவும் விரிகதிரோன்என எய்தினன்அம்மா

**வேறு**

செஞ்சடில மண்டலமும் திருச்செவியில் குண்டலமும் திருவெண்ணீறு
விஞ்சிய கண்மணி தயங்குமேனியும் சின்முத்திரையும் விளங்கும் தண்டும்
சஞ்சிதம்எலாம் பொடிக்கும் கற்பம்உறு பொக்கணமும் தன்பால்மேவித்
தஞ்சம்எனும் அடியவர்கள் சஞ்சலம் தீர்த்தவர் தலைமேல் சாத்தும் தாளும்

அங்கலிங்க சங்கமும் ஆகமபாகத்தை அருள்தரு செவ்வாயும்
செங்கலிங்கம் இலகியதோர் திருமெய்யும் புன்னகையும் சீரால்மிக்க
துங்கம்உறும் திருஅரையில் இலங்கோடும் அடிபணியும் தொண்டர் உள்ளச்
செங்கமலம் மலர்விக்கும் திருநோக்கும் சித்திஎட்டுத் திகழும் மாண்பும்





ஐந்துஎழுத்தை அருங்கலனாப் புனையும்எழிலால் தலமும் அடியர் உள்ளம்
வந்துஎழு மெய்ஞ்ஞானபா னுவின்ஒளியும் திசைவியக்கும் மௌனச் சீரும்
சந்தனத் தென்சைலம் அமர்ந்திடு முனிவன் முதலானோர்த் தழுவிவான்நாட்டு
இந்திரனை நெடியோனை நான்முகனை ஒருபொருளில் எண்ணாவீறும்

**வேறு**

இத்தகையனை தினையும் உற்றுஅரிய அற்புத இலக்கணம் இயைந்து வயதுஓர்
பத்துஎன வழுத்தும் உருவத்தொடு குணக்கடல் பரப்பி உளமீன் கடனது
மெய்த்திருவினில் சிறிதுஉறக் கருணை வைத்து வளைமேவும் கரைஅண்மி அருகே
வித்தகம் மிகுந்தபொழில் உற்றுஉறைவதற்கு உளம் விழைந்து அவண் இருந்தனன்அரோ

அத்தலம்அதில் துதிகொள் சித்தர்கள் களித்துஉறையும் ஆச்சிரமம்ஒன்று காணா
எத்திசையினும் போதமெய்க் கதிர்விரித்து இரவிஎன்ன அவண்உற்று உயர்தரும்
சித்துகள் புரிந்துசிவ யோகநிலை நின்றுமறை தேர்சனகர் ஆதிஉணர
வித்தகம் உணர்த்தி அருள்அத்தனை நிகர்த்து அடியர் வித்தம்உறவோ திவருநாள்

மானவர்களில் தகுதி ஆனமன முற்றுஅறிவு மாணஉடையோர் அணுகிநீ
தான்உயிர் கணத்துஇறைவனோஎது சித்தர்கள் தமைப்பணி கொளும் தலைவனோ
ஞானமுனிவர்க்கு அருளும் மெய்க்குரவனோ அகில நற்றவம் இழைத்த அதனால்
ஏனைஉலகத்தினை விடுத்துஇவண் அடைந்தனைசொல் ஈதுஅருள்க என்றனர்அரோ

நின்றவர்தமக்கு உளம்இனிக்கும்வகை என்றுஉயர் நித்தன் உலகத்தை அணுகித்
துன்றிய சிவாநுபவம் உற்றுஇலகுவோம் அரியசுத்த உபதேசமும் உலகோர்
ஒன்றஅருள்வாம் எனலும் அத்தகைய பத்தர்மனம் ஒத்துநய பத்திபுரியப்
பொன்றுதலில் சைவமறையின் திறமுணர்த்தி அருள்பொற்பொடும் அமர்ந்தனன்அரோ

சித்தர்இனம் மெத்தவும் மடுத்து அருகிருக்கஅவர் சித்திநிலை பெற்றிடுவிதம்
சுத்தசிவ தத்துவ மறைப்பொருள் செவிக்கு அதிசுவைகொள உணர்த்தி உணவிற்
சற்றெனும் விருப்பமும் ஒழித்து உறைஇடத்தின்மிகு சத்வகுண சித்தர்கள் எலாம்
பத்தியுடன் உற்றுஇணையில் சித்தர்செயலைக் கனிவுபற்றி இஃதுஒன்று புரிவார்

பாலவயதுஆக அலைவாரிதியின் மேவிவரு பான்மையும் அலாது அளவுஇலாச்
சீலம்உறு சித்துபுரி செய்கையினுமே பாலசித்தன்என நாமம் நிறுவி
ஆலவிடமே அமுதமாய் அயலுவான்இவனலாது இலைஎனா நினைவொடும்
சாலநலமேவு துதிகூறிட அவர்க்குஇனிய தண்ணருள் சுரந்துஉறையும்நாள்

அத்தன்அருள் பெற்றவர்கள் உற்றபெரு முக்கண்மலைஆதிய வரைக்கண் அணுகிச்
சித்தர்கள்தமக்கு அரிய அற்புதம்உறப் புநித சித்திநிலை முற்றும் உதவித்
தொத்தலர் வனத்து அமரும் நற்றவர்களுக்கும் ஒருதூய சிவபோத நல்கி
இத்தகைமை யோடுஇனிய சித்தன்உலவிப் பழைமை எய்தும் இடம் உற்றனரோ



அங்கண்அமர் போதிடை எங்கள் சிவன்ஆணைவழி அந்தரமும் நாகர்உலகும்
பொங்குதிரை ஆழிசுலவும் புவியும்நாடி வருபுந்திபெறு நாரதன்எனும்
சங்கைஅறு மாமுனிவன் வந்திட விசேடமொடு தங்கும் உபசாரம்ஆதி
மங்கலம்எலாம் விதியினன் கனிவினால் உதவ மாமுனிவன் ஏற்று மகிழா

கோலம்மருவும் சித்தர்கோன் இடைமிகும் பத்திகூடிய விதம்கூறுவான்
சீலமுடன் இங்குஉக்கு மேலைவருணன் றிக்கில் தேடரிய இன்புற்றிடும்
சோலைகள் நெருங்கிக்கலே லைஙறும்புட்கள் தூய்மையின் முரன்றுஒப்பிலா
மாலை அடையும் பொற்பின் மாமயில்எனும் பொற்றை வாழ்குவது இனம் சொற்றுமே

அக்கிரியின் அற்புதம் உரைக்குதல் எனக்குமரி துஅத்தலையின் உற்றவர்எலாம்
எக்கலையும் எத்தவமும் எப்பொருளும் எப்படிஎணத்திடை நினைப்பர் அதுபோல்
ஒக்கமருவிக் களிசிறக்கஒரு பச்சைமயில் உற்றஅறு முகக்கடவுளை
மிக்குஉளம் இருத்திஒரு வெற்புஉருவு எடுத்துஅரிய மெய்த்தவம் இயற்றியதுபின்

மஞ்சுதவழும் பொதியையம் கிரியிருந்து தமிழ்மண்டல நிறைந்திட வளர்
நெஞ்சகமலர்ந்து இலகு கும்பமுனிவன் பணிய நேயவருள்துந் தகுரவன்
கஞ்சனது அகங்குலைய முண்டகம்எனும் கரதலங்களின் அறைந்து எனதுஉளத்து
அஞ்சலென வந்துஅருள்செய் கந்தன்இவர் வாகன மதாகி மகிழ்வு உற்றதெனவே

வீணைமுனியோ அதுஏது மயில்மேவிஒரு வெற்புருவமாகி உலகில்
காணவியை காரணம் அதுஏது புகல்என்று உலகு காதல்உறு சித்தன் வினவத்
தாணுவின் உளத்துஅடல்கொள் சோடம் முழுதற்றின் அளிசால்உள் உருகிக் கனியவே
பாண்எனும் அணைத்தும் உயர்யாழொடு பிணைத்துஇனிது பாடுமுனிவன் பகருவான்

சங்குகன்னத் தனிப்பெயர் பூண்டுஉளான்
பொங்கு வாரியில் போந்திடு சித்தனாய்
இங்கு அமர்ந்து இயம்பின மாமயில்
துங்க மாமலை ஆனதைச் சொல்லுவாம்

**பாலசித்தர் திருஅவதாரச் சருக்கம் முற்றிற்று**







## வசனம்

முனிவர்களே பரமசிவத்தின் சாபத்தைப் பெற்ற சங்குகன்னன் என்னும் கணத்தலைவன் கீழ்க்கண்டவாறு கருதுவதாயினன். நாம் பூவுலகத்தில் மனிதஉருக் கொள்வதில், தாயின் கருப்பவாப்பட்டுப் பிறக்கின் துன்பம் நேருமென்று அதனை விலக்கி, சிவாக்ஞை-யின்படி மயூராசலத்தின் அருகாக அவதரிக்கக் கருதிக் கீழ்ப்புறமுள்ள கடலினிடத்து, உதயசூரியன்போல் ஒளிவிடும் திருமேனியோடு திருஉருவம் கொண்டு எழுந்தனன்.

சடாமகுடமும் கர்ணகுண்டலங்களும், விபூதி உருத்திராக்ஷம் நிறைந்த திருமேனியும், ஞானமுத்திரையும் தன்னைஅடையும் அடியார்கள் முடியில் சூட்டும் பாதங்களும் திருமார்பில் தரித்த சிவலிங்கதாரணமும் வீரசிவாகம உண்மைகளை உபதேச சாரமாகப் பொழியும் திருவாயும், செக்கர்வான் போன்ற காவிவத்திரத் தோற்றமும், பரிசுத்த வெண்ணிறம் அமைந்த லங்கோடு கௌபீனமும், அடியார்கள் இருதய கமலத்தை மலரச் செய்யும் அருள்நோக்கு அமைந்த திருவிழிகளும், அஷ்டசித்தி விலாசமும், பஞ்சாக்கர ஜெபம் இயற்றும் திருநாவும், இந்திராதியரது போகங்களைப் பொருட்படுத்தாத துறவுநெறியும் அமைந்து பத்து வயதென்னும் பருவம் காட்டி விளங்கினார்.

ஆங்கு ஓர் ஆச்சிரமம் வகுத்து வசித்து, சித்திகள் நடத்தியும், சிவயோகம் புரிந்தும் சௌனகாதி முனிவர்களுக்குப் பரமசிவன் தட்சிணா மூர்த்தமாயிருந்து அநுக்கிரகித்தது போல், அங்கடைந்த பக்தர் சித்தர்களுக்கு ஞானபோதம் புரிந்தும் வரும்நாளில், உத்தமத் தொண்டர்கள் பலவாறு துதித்து வழிபாடு செய்து வந்தனர்.

இந்த முனிவர் பல சித்தர்கள் புடைசூழ்ந்திருப்ப அவர்களுக்கு மனோலய மார்க்கத்தை உபதேசித்து ஆகார விருப்பம் சற்றுமின்றி ஒழித்து விளங்கினர். அந்தச் சித்தர் முதலியோர் இவரது இளமை வடிவத்தையும், அற்புதச் சித்தியையும் கண்டு இவருக்குப் ‘பாலசித்தன்’ என்னும் காரணப் பெயரிட்டு நீலகண்டராகிய பரமேசுவரன் உம்மையன்றி வேறுஇல்லை என்று துதித்திருந்தனர். இவர் பெருமுக்கல்மலை முதலிய பல பர்வதங்களுக்கும் பல வனங்களுக்கும் யோகவலியாற் சென்றும், ஆங்காங்குள்ள சித்தர் முனிவர்களுக்கு அநுக்கிரகம் புரிந்து மீண்டும் தமது ஆச்சிரமம் வந்து அமைவதானார்.

அக்காலத்து, நாரதமுனிவர் இவரிடம் வரக்கண்டு, உபசார மொழி கூறியதால், அவர் மகிழ்ந்து, பாலசித்தரைநோக்கி, ஈண்டைக்கு மேற்குத் திக்கில் சுகந்த பரிமளச் சோலைகளால் நெருங்கப் பெற்று மயூரகிரி என்னும் பர்வதம் ஒன்று உளது. அதன் பெருமை என்போன்றோரால்



சொல்லல் அரிது. முருகக் கடவுளது ஒப்பற்ற மயில்வாகனமானது, ஒரு காரணத்தால் மலைவடிவு கொண்டு தமது கடவுளை நோக்கித் தவம் செய்ததாகும். பொதியமலைத் தலைவராகிய அகத்திய முனிவர் வணங்க அவருக்கு ஞானதேசிகராய் அமர்ந்து பிரணவ உபதேசம் புரிந்தவரும், பிரமன் அகந்தைகெடத் தலையில் சூட்டியவரும் ஆகிய கந்தக் கடவுள் ஆரோகணித்தற்குரிய பாக்கியத்தைப் பெற்றது என்ற விவரங்களை ஓதினார். அதுகேட்ட சித்தர் நாரதரை நோக்கி, மயில் மலைவடிவு கொண்டது யாது காரணம்? அதன் விவரம் கூறுக என வினவ, நாரதர் பின்வருமாறு கூறலானார்.



## மூன்றாவது
## மலையுற்பவம் உரைத்த சருக்கம்

மதுமலர்க் கடம்புஅணி புயமுருகனை மயில்மிசை வருவானை
விதுமுகக்குற வனிதையை அநுதினம் விழைந்த மோகனை நீங்காது
அதிர்பொலன் கழல்அடியானை அடியவர் அகத்துஇருள் தொலைப்பானை
நதிஅணிந்த சங்கரன் மகிழ்குமரனை நாம்தொழுது உய்வாமே 188

### வேறு

சூதன்இவ்வணம் சொற்றிட நைமிச வனத்து
மாதவத்தினர் மாமனத்திடை மகிழ் மலியா
நாதன்ஆகிய சித்தற்கு நாரதன் அன்பால்
ஏதுமாமயில் ஓங்கலுற் பவக்கதை உரையாய் 189

என்னஅத் தவர்அன்புஉளத்து எய்தியே வினவ
அன்னபால சித்தாதிபன் தனக்குநா ரதன்தான்
சொன்னவாறு இனிக் கேளுமின் சொல்லுதும் என்னா
மன்னு மாதவ நாயகன் சூதன்வாய் மலர்ந்தான் 190

முன்னமாயைஎன் பவள்தனைக் காசிபன் முயங்கப்
பன்னுசூரன் மாவெனப் பகர்தரு மசுரன்
துன்னுசீயன் வெந்தாரகன் அசமுகி துணையா
மன்னு தானையாம் அசுரரோடு உதித்தனன் மண்மேல் 191

உதித்தசூர் முதல் அவுணரோடு அருந்தவம் உஞற்றி
மதிச்செழுஞ்சடை அண்ணல்பால் வரம்எலாம் வாங்கிக்
கதிக்கு நேமியன் முதற்கடவுளரை என்கண்டே
அதிர்ப்புஉறும் திரையாழின் மகேந்திரத்து அமர்ந்தான் 192

அமர்ந்து வெய்யகோல் ஆயிரத்து எட்டெனும் அளவில்
சமைந்த அண்டத்தும் செலுத்தி வெம்தானையாம் கடலை
நிமிர்ந்து போர்செய விடுத்து அருந்துயர்உற நெருக்கித்
தம்அராப் புவித்தேவரைச் சிறைஉறத் தளைந்தான் 193

ஆற்றவும் துயர்எய்தியே கடவுளர் ஆனோர்
ஏற்றி வந்துஅருள் கடவுள்பால் கைலையின் எய்தி
மாற்றஅரும் திறல் சூரனால் வருந்திய மாற்றம்
சாற்றிப் போற்றலும் அப்பரன் தண்ணருள் புரிந்தே 194

கந்தவேள்தனை நோக்கி வல்லசுரர் தம்கணத்தைச்
சிந்துமாறு வென்றிடுதி என்றுஉய்ப்பஅச் செவ்வேள்



வந்தவானவர் தங்களை நோக்கி வஞ்சகர்தம்
வெம்திறல் செகுப்பாம்இனி வெருவன்மின் என்றான் 195

அந்த வாசகம் செவிவழி அமுதுஎனத் தேக்கி
உந்தும் ஆநந்த வெள்ளத்தின் மூழ்கிய உம்பர்
கந்தவேள் பதமலரினை உள்ளுறு கனிவால்
முந்தவீழ்ந்து வீழ்ந்து இறைஞ்சினர் துதிபல மொழிந்தார் 196

அம்புயத்தினன் இடர்இனி அகன்றனன் என்றான்
உம்பல் வானவன் அம்பதிக்கு உறுகண் இன்று என்றான்
பம்புவானவர் எம்முயிர்ப் பன்னியர் களத்தின்
வம்புலா மணமங்கலம் வாழ்ந்தன என்றார் 197

இன்னவாறு அவர்இசைத்து எமக்கு அரியபேறு எய்த
மன்அயிற்கரக் குமரநாயகன் தனை வழுத்தி
உன்னரும் சிறப்பு அனைத்தையும் புரிந்துஉளத்து உவப்பால்
பன்னலம் தருபூசனை பன்முறை செய்தார் 198

முழுதும்ஆகிய முக்கண் எம்கடவுளுக்கு அன்பாய்
எழுதஒணா மறைப்பொருளினை அருள்செயும் இறையோன்
பழுதுசெய்திடு சூரர்முதல் கொடியரைப் பாற்றித்
தொழுததேவரைக் காப்பத்தன்உளத்துஇடைச் சூழ்ந்தே 199

வீரவாகுவே முதலிய வீரரும் வெய்ய
சாரதப்படைக் கடலும்பின் சார்ந்திட ஏகித்
தாரகன்தனைக் கிரியுடன் அயில்கொடு தடிந்து
சூரன்தனைமிசை மகேந்திரம் அடுத்துஅமர் தொடுத்தான் 200

அரிமுகன்தனைப் பானுகோபன்தனை அவுணப்
பரவையைப் பல படைகளால் தடிந்து பல்மாயை
இரவுஉருக்கொடு சூரன் வெம்போரினை விளைப்பச்
சிரமுரங்களை வரும்தொறும் எழுந்தொறும் சிதைத்தான் 201

இத்திறம்பல உருக்களை அறுமுகன் இகுப்பக்
உத்திரத்து அனல் புனல்முகில் வளியும் கொடுபல்
அத்திரம் தொடுத்து அசுரன்அம் குமரன்மேல் அடர்ந்தான்
எத்திசா முகங்களும் பலவண்டமும் இடைந்த 202

அடர்ந்து வெஞ்சமர் புரிந்திடும் சூரைஆங்கு ஆங்குத்
தொடர்ந்து வெங்கடும் படைகளால் தடிந்திடச் சூரன்
படர்ந்த சூதமாக் கடல்இடை அண்டங்கள் பரிப்ப
நடும்கிளைப் பெரும் தூண்என நின்றனன் அண்ணி 203

நின்றகாலை வேல்ஏவினன் அறுமுக நிமலன்
துன்றுசூதமாம் தோற்றம் அதுஅழிந்து முன்உருவாய்க்
குன்றிடா அமர்செயவேல் கூறுஇரண்டு ஆக்கச்
சென்று மஞ்ஞையும் கோழியும் ஆயினன் சினந்தே 204

படர்ந்த மஞ்ஞைமேல் இறைபதம் ஊன்றிடப் பரிந்தே
அடர்ந்த வெம்சிறைப் புடைப்பினால் அண்டத்தின் அடுக்கும்
இடைந்து ஐவகைப் பூதமும் குலைந்திட வெற்பும்
தொடர்ந்த சூறையால் துகள்பட எங்கணும் சுழன்றான் 205

சுழன்ற சாரியின் வேகத்தும் சிறைகொள் சூறையினும்
மழன்ற சீற்றத்தும் அசைவிலாக் குமரன் உற்றுஅடர
உழன்ற சூரன்வெம் சீற்றமும் ஆற்றலும் ஒருங்கே
இழந்து அயர்ந்திடும் புவியினில் இருந்தனன் இளைத்தே

நின்றசூரன் வல்அவுணராம் கடலையும் நீண்ட
குன்றமும் தடிந்து இலகிய வேல்கரக் குமரன்
மன்றல் பூஞ்சரண் தொடக்கத்தாற் சூக்கும வடிவாத்
துன்று நல்உணர்வு எய்தியே இன்னணம் துதிப்பான்

**வேறு**

தனது திருஅருளின் உலகுயிர்கண் முழுவதும் அருள்செய்து அருணி பகவதிகுமரிஎம்
பனைகிரி புரையமலை விதுவைநிகர் தருவதனி பகர்அரிய இமயம் உதவும்
புனிதை புளகிதம் இருகமதம் அகிலின் அளறுவழி பொறிதி தலைசிதறு நகில்ஒண்
கனகிர எழில்உமை அவண் மடியின் அருமையொடு கனிஅமுதம் அயில் புதல்வனே

வரிஅரவம்இறுகு திருவரையமலன் அருணம்எரி மழுஒலிசெயும் தமருகம்
பொருவின்மணிவிதியின்அடு தலைகரியின் அது அதலை புகலும் அறுபதம் இசைதர
விரியும்மதுஒழுகுஇதழ் இவைகள் அணிதரு பரமன்விழைவின் அணைதரும்உமையவள்
பரிவினு டன்னை துகதன் என மகிழும் ஒருகுமர பணியும் நெறியருள் தருவையே

தடம்உலவும் குளிர்கமல அறுமுகம் ஒருபனிதரு தனிவிழிகள் எனும்வனசமும்
மடமைஅறு அடியர்இடர் கெடஅவர்கள்தவ மலியவளர் பன்இருகரமுளரியும்
ஒடிவில்பல பிறவிதொறு நலியும்உயிர் மருவஒளிர் உபயபதமலர் பதுமமும்
கொடியன்னை திருநறவுஎனது தவமகிமைதனை உலகர் குயிலுவது அரிதுஅரிதுஅரோ

கடவிகட கடமதம்அது உலவுகரிமுகனொடு கனிவுபெற வருதுணைவனே
இடமதனில் உறைவிபுதர் மணிமுடிகள் வருடுதலின் இசைவகை குலிசமுறு சரணனே
பொடிபட என்மலமுழுதும் அறுதிசெயும் வகைதரிசனம் அதுஅருளவருபுனிதனே
விடைஅருள இதுதருணமென அதுமறுவகலினை விடியஎழுதரு பரிதியே



உனது திருநாமம் ஒருதர நவிலுவோர் பிணிகள் உறுமிடிகள் ஏதமறலி
யினதுகயிறோதிமமது இடையில் வருவேதன்முடி எழுதுவரி யாவும் அறவே
புனிதம் அடைவார்கள்என மறைகண் முதலாயகலை புகலுவது நீதிஅதுவா
மனதில்நினைவோர்கள் வினைபொடி செய்வடி வேல்உருவும் வகைஅருளினோடு செயலால்

எனது உடலம் அதிபுநிதம் மருவியது உன்அருளின்மிகவரும் அனுகஅரும் உயர்வுதந்து
உனதுபதம் அடையும்வகைஅருள்தினை அசுரன்மொழி உரைஅதனை முருகன்மகிழா
நினதுமனது உளவிழைவு புகழ்தினை அசுரகுல நிருபன்உளம் மகிழ்வின்உருகிப்
பனகமணி தருபரமன் நுதல்விழியில் வருகுமர பசியமயில் உருமருவியே

மறைமுடியின் அந்தமுனி வரர்மதியின் அந்தம்ஒளிர் வனசமலர் இன்பஅடியே
நிறைஉவகை முந்திஎனது உருவிடைவந்து இலகநெறியொடு சுமந்து உலவவே
குறைஅகல இன்றுவரம் அருளிய அன்பர்பரவு குணநிதிஎனும் சலதியே
துறைபல நெருங்குஅமுது கவிவலர் சொலும்பனுவல் தொடைஎன அணிந்த புயனே

**வேறு**

என்று அந்தம் துதிகள்நவின்று அசுரகுலாதிபன் இசைத்த விசையைக் கேளா
நன்று அவணம் அளிப்பமுன் அசுரகுலக் கொடுந்தொழிலான் அவை அடைந்தா
இன்று அவைஎலாம் அகல மயில்மலையாத் தவத்தோர் ஆண்டு இருப்பைஆயின்
மன்றஎமைத் தாங்குஉறுவா கனம்ஆவாய்எனத் திருவாய் மலர்ந்து பின்னும்

எவ்உயிர் ஆயினும் புரிந்த வினைக்குஉரிய பயன்அனைத்தும் எந்நாள் சென்று
அவ்வுயிரே பிறந்து அடையும் ஆதலின் நீஇப்பிறப்பில் ஆற்றிநின்ற
கவ்வைஉறு பவம்அனைத்தும் பிறந்து தொலைத்தால்அலது கழிவு உறாதால்
செவ்விதின் நீஉணர்வை முனம்தேவரையும் மேவல்கொண்ட திறலோ என்றான்

என்னஉளம் களிதளும்பி இகலுலவும் தகுவர்குலத்து ஏந்தல் எந்தாய்
அன்னவிதமே புரிவல்இன்று எனக்குத் தானநிலை அருளுக என்னக்
கொன்நுனை வேல்இறை பெண்ணைக் குத்தரமா விந்தியம்என் குன்றில் எற்கா
மன்னியநற் புவியின்இடை வைகுதியால் எனஅவனும் வணங்கிப் போனான்

அவ்வாறே அத்தலத்தின் அத்தன்அருள் பூரணமாய் அகத்துள் கொண்டு
செவ்ஆம்பல் மலர்வயல்சேர் தொண்டைநாட்டு உருநாட்டித் திசைமயங்க
ஒவ்வாமல் ஓங்கலுக்குப் பொன்ஓங்கல் விலங்கல்எனும் உரையைப் பூணத்
தவ்வாமல் ஓங்கினான் மயில்ஓங்கல் எனும் பெயரில் தகுவர்கோமான்

கற்றுஅண்டர் இந்திரன் மால்அயன் முதலோர்மனது அண்டக் காணாது ஓங்கி
உற்றுஅண்ட அடுக்குஅனைத்தும் துருவிஎழு தருசிகரம் உருவத்து ஓய்ந்தே
எற்றுஅண்டம் எனவிலகி எவ்வளமும் பெற்றுஅண்டம் என்ன நின்றே
பொற்தண்டைக் காலில்ஒளிர் நற்தண்டபாணி தனைப் போற்றினானே

வருவருடம் ஓவாத பொழில்இலகு மயில்கிரியாய் வலுநோன்பு அண்டர்
ஒருவருட வரைஅகலாது இயற்றி அரவிந்தமலர் உவப்பில் மேவும்
திருவருடும் கழல்இணையான் திசைமுத்தான் இவர்துதிக்கும்
குருவருடன் அகங்கருதி விழிபனிப்ப அரியதுதி கூறிநின்றான் 220

பொன்வரையின் கன்னிஅருள் புதல்வனை அவ்வரை வடிவன் போற்றி நிற்ப
மின்வரையில் புணர்தனமார் இருவரையும் அருகில்வைத்த வேலோன்போந்து
தென்வரையின் அகத்தியற்கு மறைப்பொருள் சொல்திரு வாயைத் திறந்துசூர
நின்வரையில் அருந்தவத்தின் மிகமகிழ்ந்தான் நினைஅடிமை நிலவக் கொண்டாம்

பொறிகலந்து சிறைவிரிந்து வலிமிகுந்த மயில்உருவாய்ப் பொருந்திநந்த
நறியமலர்த் தாள்அடைதி எனும்அளவில் அவ்வாறே நண்ணி நிற்பக்
கறைஅகல மயில்இவர்ந்துஒர் ஆறுமுகமும் ஈராறுகமலக் கண்ணும்
உறுவலிகொள் ஒருபன்இரு புயஎழிலும் இருபதமும் ஒளிர நின்றே 222

அம்மயிலின் உருவாகும் சூரபன்மன் முகம்அதனை அன்பாய் நோக்கி
இம்மையில்நம்பால் நினக்கு வேண்டுவரம் நவிலுதியே எண்ணம் போலச்
செம்மைஉற நாம்அளிப்பம் எனக்கரு ணாலயம் ஆகும் செவ்வேள் என்தன்
மும்மைமலம் அறுத்துஇனிய மெய்ம்மைதெரிந்து அருளும் முதல்வன் சொற்றான்

வேறு

கூர்வேல்ஏந்தும் கரதலத்துஎம் குரிசின்மொழிந்த மாற்றம் அதைக்
கார்வாய் தலைக்கண் தகவுபசும் களிமாமயில் ஆகியசூரன்
சீர்வாய்த்தது இன்றுஎனக்கு என்று சித்தம்களித்து மயிர்பொடிப்பப்
பேர்வாய்த்திடுநல் துதிகள்பல பேசிப்பணிந்து பகருவனால் 224

கரிமாமகளை மருவும்அருட் கடலேநின்றன் கழல்இணையைப்
பரிமாமயிலில் தங்கிநிற்கும் பலனைப் பெற்றேன் சலனம்அற்றேன்
நிருபா எனைஆட் கொண்டதுவே நியமம்ஆகில் என்அமிசத்து
ஒருபால் இங்ஙன் மலைஉருவாய் உறைய வேண்டும் கற்பமுமே 225

கற்பாகற்ப முடிவுஇன்றிக் கழறுமயிலை மலைஎன்றே
நற்பேர் விளங்கக் கீர்த்திபெற்று நாதாநின்தன் மாதருடன்
பொற்பாய் அமர்ந்தே அடியர்குழாம் போற்றநாளும் வரநல்கி
நிற்பாய் உமைபாலா என்றான் நீலமயிலாய் நிலைநின்றான் 226

அறைந்த மாற்றம் அலைஎறிந்த அயிலோன் கேட்டேஅவ் வணமே
நிறைந்த மயிலை மலைஉருவாய் நின்றன்அமிசம் இங்கிருக்கின்
குறைந்தமதி வேணிப்பெருமான் கொடுத்தசாபம் அகல்வதற்காய்
உறைந்து இம்மலையில் தவம்செய்வான் உறுவான்சங்கு கன்னன் என்போன்

அன்னவன்தன் தவவலிக்காய் அன்புகூர்ந்து அங்குஅரன் முனிவான்
மன்னும்சாபம் தீர்த்தருள வருவாம் இந்த மயிலைமலை



தன்னில் அமர்ந்துஅந் நாள்முதலாய்த் தரணியோர்கட்கு அருள்அளித்து
நின்னதுஎணத்தை யாமுடிப்பா நீயுட்கவல்நீங் குகஎன்றான் 228

விடவாய் அரவக் குழுநெளிய வீறும்பதத்தால் ஏறிஎழில்
படவாய் இடத்தைக் கிழித்துஎறியும் பசுமாமயிலின் மிசைஏறித்
திடமார்கனகத் தடமேருச் சிலையான் வெள்ளி மலைஅடைந்தான்
கடலாம்பிறவி இடைவருந்தாக் கதியை அருள்நம் குருபரனே 229

அதனால்அந்த மயிலைமலை ஆழிஏழும் சூழ்புவியில்
சதமா வதிந்து மதிவல்லோர் சுதகால்இதயம் துதித்திடஅற்
புதமாவிளங்கும் அக்கிரியில் போய்அங்கதிர்வேல் சேயைநினைந்து
இதமார் நோன்பு ஆற்றின்எய்தும் இதயம் கொண்டது எளிதுஎன்றான்

**வேறு**

தானவன் மயிலைப் பருப்பதம் ஆனதுஉம் தவமேஅதும்
வானவன்பணி வேலவன்முனம் வந்து நல்லருள் தந்தது
மானமஞ்ஞை யிவர்ந்ததும்சில வாறுஇசைத்தனம் இவைஅலால்
ஆனஅன்பொடு பாலசித்தனரும் தவச்செயல் ஓதுவாம் 231

**மலையுற்பவம் உரைத்த சருக்கம் முற்றிற்று**

**ஆ திருவிருத்தம் உஎக**



## மலையுற்பவம் உரைத்த சருக்கம்

முனிவர்களே முன்னொரு காலத்தில் மாயை என்பவளால் பெறப்பட்ட சூரபன்பன் தனது சகோதரர்களாகிய சிங்கமுகன் தாருகுன் முதலியவர்களுடன் அருந்தவம் செய்து பரமசிவத்தினிடத்தில்பல வரங்களைப் பெற்று பிரமன், விட்டுணு முதலிய தேவர்கள் புறங்காட்டி ஓடச் செயித்து, கடலின் மத்தியில் உள்ள மகேந்திரபுரியில் அமர்ந்தான். ஆயிரத்தெட்டு அண்டங்களிலும் தனது கொடுங்கோல் செலுத்திக் கடும்போர் இயற்றித் தேவர்களைச் சிறைப்படுத்தினான்.

அவ்வாறு பலகால் வருந்தியதால் எஞ்சி ஒதுங்கிய இந்திரன், பிரமன், விட்டுணு முதலிய தேவர்கள் கயிலாயமலையடைந்து சிவபிரான் முன்னிலையில் குறைகூறித் துதித்தனராக, பரமசிவன் அருள்கூர்ந்து முருகப்பெருமானை நோக்கி, 'நீ சென்று அசுரர்கள் செய்யும் அநீதியை ஒழியும்படி சங்கரித்துத் தேவர்களைக் காக்கக் கடவை' என்று ஆக்ஞாபித்தனர். அவ்விடை பெற்ற குமாரக் கடவுள் தேவர்களை நோக்கிக் கிருபைகூர்ந்து அபயம் அளித்தனர். அந்த அநுக்கிரக வார்த்தையைப் பெற்ற தேவர்கள் முருகப் பெருமானை வணங்கி மனமகிழ்ச்சியுடன் துதித்தனர்.

திரிநேத்திரங்களையுடைய பரமேஸ்வரனுக்கு ஞானோபதேசம் செய்தருளிய முருகக் கடவுள் சூராதி அசுரரை அழித்துத் தேவர்களைக் காக்கத் திருஉளம் கொண்டு வீரவாகு முதலிய மகாவீரர்களும் பூதசேனையும் உடன்வரச் சென்று மாயாபுரியில், தாரகனையும் கிரவுஞ் சத்தையும் அழித்துப் பின் வீரமகேந்திரத்திற் சென்று சூரபன்மனிடம் யுத்தம் இயற்றி, சிங்கமுகன் முதலியோர் அழிந்தபின் சூரன் பலவித வடிவுகொண்டு போர்இயற்றி, முருகன் யுத்தம் செய்து அழிக்க முடிவில் அண்டகோளகையை அளவிய உன்னதக் கிளைகளோடு அடர்ந்து நெருங்கிய மாமரமாய்ச் சூரன் நின்றனன். அதுகண்டு முருகப்பெருமான், தமது ஞானசத்தி வேலாயுதத்தை ஏவினர். அதுசென்று மரத்தை இருபிளவாக்கத் தனது சுயவடிவாய் முன்வந்தனன். அதனையும் பிளந்ததால் மயிலும் சேவலுமாய் வடிவுகொண்டு எதிர்த்தனன். அதுகண்ட சுவாமி, மயிலின்மீது திருவடியூன்றி ஆரோகணிக்க, மிகுந்த வேகத்துடன் பலதிசைகளிலும் சிறையடித்துச் சென்று அயர்ந்து பூமி-யில்வந்து இறைவன் அருளால் உண்மை அறிவு சிறிது தோன்ற அறுமுகக் கடவுளை அன்புடன் துதிப்பானாயினன்.

சர்மங்களகரமுள்ள பார்வதியின் பால்அமுதம் அருந்தியவரே. அக்னி, தமருகம், கொன்றைமாலை முதலிய தரித்த பரசிவத்தின் அன்புக்குரிய



உமையவள் தனது குமாரனென்று அருமை செய்யும் குமரக் கடவுளே. உமது தாமரை மலர் போன்ற ஆறுமுகங்களும், பன்னிரு கரங்களும் இரண்டு திருவடிகளும் தெரிசிக்கப் பெற்ற எனது தவம் அளவிறந்ததாகும். கணபதியின் துணைவரே. தேவர்கள் முடியிடறும் திருவடியுடையவரே. அடியேனது மும்மல வாதனை முற்றும் ஒழியக் காட்சி தந்துஅருளிய பரிசுத்த சொரூபரே. எனது வினையிருள் அகல உதயமாகிய ஞான சூரியனே. உமது திருநாமத்தை ஒருதரம் செபித்தவர்களுக்கும் தேகப்பிணிகள், வறுமை, குற்றம், ஏமபாசம், பிரம்மலபி எல்லாம் நீங்கிப் பரசுகம் அடைவார்கள் என்று வேதங்கள் சொல்வது உண்மையேயாகும். உமது கையில்உள்ள ஞானசத்தி வேலாயுதத்தின் பெருமையினால் எனது சரீரம் பரிசுத்தத் தன்மைஅடைந்தது. உமது திருவருளால் யான் எவரும் அடைதற்கரிய உமது திருவடித் தொண்டு அடையப் புரிக என்றனன். அவன் மொழிகேட்ட முருகக் கடவுள் திருவுளம் இரங்கி உனது விருப்பம் யாதென்று வினவ, யான் இப்போது கொண்டுள்ள மயில்வடிவோடு இருக்கவும், வேதங்களின் முடிவிலும், தவமுனிவர்களது அநுபவ முடிவிலும் விளங்குகின்ற உனது திருவடிகள் என்மீது பொருந்தி இருக்கவும், யான் அதனைச் சுமந்து திரியவும், குறைவில்லா வரம் கொடுத்து அருள வேண்டும். அடியார்கள் பரவும் தோத்திரமாலை அணிந்த புயங்களை உடையவரே.

என்று பலவாறு துதிப்பதைக் கேட்ட குகக் கடவுள் நீ விரும்பியவாறு அளிப்போமாயினும் நீ அசுரப்பிறவியில் அமைந்து பல தீங்கு இழைத்துள்ளாய். அவை முற்றும் கழியுமாறு மலைவடிவாய் ஒரு வருடம் இருந்து தவம்செய்வையாயில் எம்மைத் தாங்கும்பேறு பெறுவாய் என்று திருவாய் மலர்ந்தார். அதுகேட்ட சூரன் தேவரீர் வாக்கின்படி செய்வேன். அது எவ்விடத்திற் செய்வது என, பெண்ணையாற்றிற்கும் விந்தியபர்வதத்திற்கும் மத்தியில் என்றோதலும் அவன் வணங்கித் தவம் செய்யச் சென்றான். சென்று தொண்டை நாட்டினிடத்து மயில்மலையாய் வடிவுகொண்டு சூரன் விளங்கி முருகப் பெருமானை நோக்கித் தவம் செய்து கொண்டிருந்தான்.

சூரபன்மன் இவ்வாறு மலைவடிவாய் வழிபட்டு நிற்கையில் வல்லி தேவசேனா சமேதராகிய முருகக் கடவுள் காட்சியளித்துப் பொதியமலையில் விளங்கும் அகத்திய முனிவருக்குப் பிரணவப் பொருள் விரித்தோதிய தமது அற்புதத் திருவாய் மலர்ந்து நீ இங்கு செய்த தவத்திற்கு யாம் மிகவும் மகிழ்ந்தோம். உன்னை நமது அடிமையாக ஏற்றுக் கொண்டோம். பலவித நிறபேதச் சிறப்பமைந்த தோகைவிரித்து வல்லமை மிகுந்த மயில்வடிவு கொண்டு நம்மைத் தாங்குக என்று அருளியது கேட்டு, அவ்வாறே நின்றனன். முருகப்பெருமான் அதன்மீது

ஆரோகணித்து மயில்வடிவாய் விளங்கும் சூரனைநோக்கி உனக்கு வேண்டும் வரம் இன்னம் யாதுஎனச் சொல்வையாகில் அளிப்போம் என்றார்.

அதுகேட்ட சூரன் மனம்மகிழ்ந்து உமது திருவடியைத் தாங்கப் பெற்றேன். மனோவாதனை அற்றேன். எனது தவமும் உமது அருளும் விளங்கும்பொருட்டு, எனது ஓர்கலை இங்கு மலைவடிவாய் அமையவும் அது மயிலமலை என்று பேர் விளங்கவும் அதன்மீது தேவரீர் தேவிமாருடன் எழுந்தருளி நின்று, வணங்கும் அடியார்கள் விரும்பிய வரங்களை அநுக்கிரகிக்கவும் வேண்டும் என்றனன். அதுகேட்ட முருகக் கடவுள் உனது அமிசம் இங்கு மலைமடிவாய் இருக்கில் ஈசுரசாபத்தால் பின் ஒருகாலத்தில் சங்குகன்னன் என்பான் தவம் செய்ய இங்கு வருவான். அவனுக்கு அருள் புரிய யாம் வருவோம். அதுமுதல் இம்மலையில் தங்கி ஆன்மாக்களுக்கு அருள்புரிந்து உனது எண்ணத்தை நிறைவேற்றுவோம் என்று அருளி மயில்வாகனத்துடன் திருக்கயிலாய மலையின் சார்பான கந்தகிரியடைந்து விளங்கினார். ஆதலால் அந்த மயிலமலை உலகத்தில் நித்தியமாய் விளங்கி அறிஞர்கள் மனமாரத் துதிக்கப்படும். அங்கு சென்று வேலாயுதம் தரித்த குமரக் கடவுளைத் தியான சிந்தனை புரிந்து வழிபடுவோர் எல்லா நன்மையும் பெறுவார் என நாரதர் கூறி முடித்தார்.





## நான்காவது
## பாலசித்தர் தவம்புரி சருக்கம்

தண்டை கொண்ட தனித்தொடை பூண்டுஉளான்
தண்டை செய்பவர் தம்மைத் தடிந்திடத்
தண்டை அங்கரம் தாங்கிய மொய்ம்பினான்
தண்டை யங்கழற் சந்ததம் ஏத்துவாம்

என்ற சூத முனிவரன் இன்னருள்
துன்று பாலசித் தன்தவத் தூய்மையை
அன்று நைமிசத் தாய தவத்தர்க்கே
ஒன்றும் அன்பின் உரைத்திடல் ஆயினான்

**வேறு**

என்று யாழின் முனிவரனும் இசைத்துப் பின்னர் அவ்வுழியின்
நின்று விடைகொண்டு எழுந்து அருளாநின்று ஆனந்த முனிஉரைத்த
அன்றேமகிழ் கொண்டு அடியார்குழாம் அருகிற்சூழ்ந்து வரஎழுந்து
சென்றான் மயிலை மலைநோக்கிச் சீலம்உயரும் பாலசித்தன்

தேங்கும்பலவும் சூதமும் உட்செறி மாதுளையும் நரந்தமும்தாள்
தேங்கும் கமுகும் கதலிகளும் ஒருங்கு நெருங்கும் பொழில்சூழ்ந்த
பாங்குதோறும் முனிவர்குழாம் பயிலும் தவச்சாலைகள்பலவா
ஆங்காங்கு அமுதத் தடநிறைந்த அணிமா மயிலை மலைகண்டான்

கணியா உருவம் எடுத்துமுனம் கன்னிவள்ளி தன்னைமணந்
தெணிவந்து அடையும் தொண்டர்குழு எல்லாம் துலங்கக் கதிஅருளித்
தணியாஅருள் கொண்டுஇலங்கியநம் தாயாம்சேயன் புடன்அமர
அணிஆர்ந்து ஒளிரும் மலைச்சாரல் ஆர்ந்தளங்கள் நோக்குவனால்

இடியேறு ஒளிப்ப வளிசலியாது இருப்ப உறையை மாலகலத்
தடியானஅதுவும் சொலிப்புஅடங்கத் தபனன்கிரணம் தனைஒடுக்கப்
படியில் அதிர்ந்து மூச்செறிந்து பரவும்மதநீர் சொரிந்துஇரண்டு
வடிவாம் தம்தம் விழிகாட்டி மஞ்சைஇகழ்குஞ் சரம்கண்டான்

நமதுமரபில்ஒரு புலிக்கு நன்மை அளித்த ஒருமுதல்வன்
தமதுபொருள்சேய் வரில்அன்னான் தாளைவணங்கிக் கதிபெறுதற்கு
அமைதியுடன் இங்குஉறைவம்என அண்ணும் தகைபோற் குயவரிகள்
சுமதிபெறு மாமுனிவரைப் போற்று உன்னும் முழைகள் நோக்கினனால்

காலைஅடக்கிப் பொறிபணத்தைக் காணாது அடக்கி அதிகரிக்கும்
ஆலைஅடக்கி அறிவுஒண்ணா மாந்தர்தம்மை வாய்அடக்கித்

தோலைஅடக்காது உதிர்த்துவளர் தூயதவம்செய் முனிவர்கடன்தம்
பாலையடக்கு மாசுணங்கள் பயிலும்அழகைப் பார்த்தனனால்
எங்கள்அரிவை மணவாளர்க்கு இன்பம்தந்து இவ்உலகம்உயத்
தங்கஇருத்து மலைஇதுநீ சார்வாய்என்று நெறிகாட்டி
அங்கத்திசையில் தனைமுன்னா அழைத்துக் கொடுபோ வன்போல்
வங்கப்பொறிய செங்கோட்ட வாமானினமுன் செலக்கண்டான் 240

கயிலைக்கிழவன் அருள்இளஞ்சேய் கானக்கிழத்தி முலைதழுவிப்
பயிலும்குமரன் அவுணனெனும் பரிமாமயிலை உகைத்ததனால்
செயல்எத்திறமோ யாமெல்லாம் சேர்ந்திங்குஅணித் தாய்இருப்பம்எனில்
அயிலான் இவர்கள் என்றிடல்போல் அகவும் மயிலின் இனங்கண்டான்

கொய்யும் புனத்தில் அஞ்சுகமே முதலாம் குருகுகுழாம் குழுமிப்
பையமுதிரும் தினையருந்திப் பரிந்துஅங்கு அகன்று பாரின்கண்
உய்யுமாறு தமைப்புரந்தார்க்கு உறுகண் உறுங்கால்ஒருவி விடும்
வெய்யர் உரிமை பாராட்டும் வியப்பைக் காட்டக் கண்டனனால் 242

முல்லைத் திணையில் பலகாலும் முதிரும் அமுதிற் குழல்ஊதி
எல்லைதோறும் போய்உலவும் எழிலான்இரையை ஒருங்குஆக்கிப்
புல்லார்வித்துப் புனல்காட்டிப் போற்றும் அசோதை மகன்போலச்
செல்வப் பொதுவர் உறைந்திருக்கும் திருவைப் பார்த்தான் சித்தர்பிரான்

எங்கள் பெருமான் சின்னாளில் எய்துவான் இக்கிரித்தலத்தில்
அங்கண்அவற்குக் கனிநீழல் அரியசுகந்தம் அளிக்கனத்
துங்கவலாரி யைந்தருவைச் சுவர்க்கம் ஒரீஇக் கொணர்ந்துஇங்ஙன்
தங்கநிறுவும் தகைபோலத் தளிர்ஆர் தழைபூம் பொழில்கண்டான் 244

முருகன் வருவான் இம்மலைக்கு முப்போதினும் அன்னோன் மார்பிற்
தெரியலாக வேண்டும்எனச் செழித்து மலர்ஏந்து இனஅனைய
மருவுஅதுவும் பொதிந்திருக்கும் வண்ணக் கடம்பு வரிபாட
வருகிற் செறிதல் சுருதிநிலை அறியும்உளத்தன் நோக்கினனால் 245

ஒருவர்க்கேனும் உதவாமல் உண்ணாமல் தன்னுடல் வருந்தி
அரிதில் ஈட்டி வைத்துநிதி அலைக்கப் புகுந்தோர்க்கு ஈகுநர்போல்
மருமாமலர்தோறும் கவர்ந்து வந்தோர் தம்மைக் கடிந்துமது
பெருகஈட்டி இகழ்ந்திடுமீ பேய்போல் அலைகின்றன கண்டான் 246

கண்ணுற்றினைய வளன்அனைத்தும் கருதும்உள்ளம் களிகூர்ந்து
விண்உற்று அண்டம் மேவுதலான் விண்ணோர்க்குஅணித் தாயவர் பரவும்
தண்உற்றுஇலகும் பொழில்தோகைச் சைலப்பொலமன் மாமுகட்டுஏறி
வண்ணக்கமலச் சுனைஅருகில் வந்துஅவ்விடத்தின் வளநோக்கி 247



**வேறு**

ஆங்கணச் சுனைநீர்ஆடி அரும்பொடி பூசிஅக்கம்
தாங்கிநன் மலர்கள்ஆதி தான்கொடு பூசைஆற்றி
நீங்கஅரு பொழிலினாப்ப ணெடுநிலா மணிக்கற்பாறைப்
பாங்குஇனிது அமர்ந்து வைவேற் பரமனைப் பரவிஏத்தி 248

வலம்இடம் எனும்குறங்கின் மற்றக்கால் மாறிஏற்றி
நலன்உறு பதுமம் என்னும் மாதன நண்ணியோர்கை
இலகுஉறு மருமம்சேர்த்து இலங்கு முத்திரைஓர் கையில்
துலங்குஉற அமர்ந்துஇலங்கும் தூமலர்க் கண்முகிழ்த்தே 249

பயிலிய மானன்தன்னைப் பரிதிஒண் மதியில்பண்பா
இயலுற முறையிரேசித் தேற்புழிப் பூரித்துஉள்ள
மயில்அறக் கும்பித்தோங்கி வளர்தரு மூலத்தீயை
அயமதி மண்டலத்தின் முட்டியின் அமுதம்ஆர்ந்தே 250

இன்னணம் பிராணயாமம் இயற்றிஐந் தவத்தைநீங்கி
மன்னிய மானன்உள்ளம் மருவிய காட்சி தன்னிற்
துன்னிய பிரத்யாகாரம் தூஇத ஆதியைத்தான்
நன்னிலை பொருந்தஉள்ள நாட்டு தாரணை புரிந்தும் 251

இந்திரி யாதிமாறும் தத்துவச் சேட்டை எய்திப்
பந்தமார் உடலின்உற்றும் பற்றகலான் மாதன்னை
அந்தமாய் நோக்களய்திச் சமாதியும் இனிதின்ஆற்றி
நந்தலி றனுவினான் மாநலம்பெற இனிதிருந்தும் 252

வருபுறக் கரணம் உள்ளா மாண்புஉறு கரணம்சேர்த்தி
ஒருமையா மனத்தைத் தூயான் மாஇனில் ஒடுக்கிஇன்ப
மருவுமான் மாவைமுத்தி வரதனாம் குமரன்என்னும்
பரம்பொருள் கூட்டிஇன்பம் பயில்தவ யோகத்து உற்றான் 253

**வேறு**

இன்னணம்ஓர் முப்பான் ஐந்துஆண்டுகாறும் இனியதவம் உணவுஇன்றி இயற்றிநின்று
மன்னும்பொழில் குமரன்வராது இருப்பப் பின்னும் வலியதவஞான வயிராகம் தன்னால்
அன்னவனை எச்சிறையில் அடைத்துஅன்பாகும் அடற்கயிற்றால்கட்டிஇமைப்போதும்அறாது
உள்ளுற நோக்கிஅழல்நாப்பணின்றே ஒப்பரிய தவம்புரிந்தும் உறாமையாலே

பெருமானைக் குமரனையன் பாகமேவும் பெண்மானை வளமானுட் களிக்கமுன்னம்
வருமானைக் குறவர்குலம் வளர்த்தமானை வடிவெல்லாம் திரண்டு உருவாய் வந்தமானைத்
திருமானைக் கலைமானை ஏவல்கொண்டு திருஅருள்செய் திடுமானை இடத்தில்வைத்து
ஒருமானைக் கரத்துஅணிந்தோன் மருகிஆதி உறைமானை உளமனையில் உவட்டவைத்தே





வானைஒரு குடைநிழலில் செங்கோல்ஓச்சு மகவானைக் கண்மணியாம் மகளைச்செந்தேன்
சோனைமலர் சொன்றைமுடி வதனமோரஞ் சோனைபசுமலர்த்து மருமகளை எம்பெம்
மானையொரு குருபரனை வசைப்பொற்பூ மானைமணந்தோற்கு மருமகனை வேற்கை
யானைமனம்மகிழ்த்தும்இன்பஅமுதைத் தெய்வயானைதனைஉளம்ஊறும்கேசத்துஇருத்தி

இருகரமுந்துவாதசாந் தத்தின்மேலே ஏற்றிஇரு நிலத்து இடைக்கால் அங்குட்டத்தை
மருவநிறீஇக்கண்ணாகும்படித்திற்சற்றும்வந்துஅடையாதுஇமைஇரண்டும்மலர்த்தியுள்ளம்
ஒருமையதாய் புற்கலனில் ஒடுக்கிமூலத்து உறும்கனலை மதித்தலத்தில் ஓங்சமுட்டிக்
குருபரனாம் குமரனுக்கு ஆருயிராம் அந்தக்கோதையரைக் குறித்துஅரிய தவம்புரிந்தான்

அரிஉருகஅயன்உருக மகவான்வானோர் அண்டர்கள்எலாம் உருக வருக்கன்சோமன்
எரியும்அழன் முதலியளும் பூதம்யாவும் சித்தம்எலாம் ஒத்துஉருகத் திங்கள்சூடும்
கரிஉருகஅக் கணங்கள்எலாம் முருகவைவேற் கந்தன்உளம் உருகாத விந்தைதன்னைத்
தெரியும் வள்ளி நாயகியாள் உருகிஎம்மான் திருச்செவிஎலாம் உருகச் செப்பல் உற்றாள்

**வேறு**

இன்னல்செயும் அவுணர்சமர்க்கு ஆற்றாதுகற்பகநாடு இழந்து வானோர்
மன்னவன் மண்ணுலகின்இடை வேணுவனந்தனிற் புகுந்து மலர்த்தாள் ஏத்தப்
பொன்உலகம் தனைஅளித்து இந்திராணி திருமங்கலத்தைப் பூணச்செய்த
மின்னவிரும் இலைவடிவேற் சுமந்த மலர்க் கரத்தானே விண்ணோர்கோவே

பதினாறு கலைமதியை ஓர்ஆறு முகமதியால் பழித்த வேந்தே
விதிநாறு மலர்முடிகள் ஒருநான்கும் பொறிகலங்க இசைந்து குட்டி
அதிநாறு அலைஎறியும் சடைப்பரனுக்கு ஓம்பொருளை அருளும்கோவே
வதிநாறும் கமலஎழில் அழித்திடும் பொன்னடிக் கமல வாழ்வே போற்றி

என்னஅருந்துதி நவின்று தேவர்சேனாபதியை இனிது நோக்கி
மின்னுலவும் செங்கதிர்வேற் கரத்தோனே கைலைமலை மேவும்சங்கு
கன்னன் மயிலோங்குஅறனில் நமைக் குறித்தங்கரிய தவங் கடினமாகப்
பன்னெடுநாளாய் வருந்தி உஞற்றுகின்றான் ஆனதனால் பரிவுகூர்ந்தே

அம்மயிலைக் கிரிஇடையிடை நாம் எய்தியவன் உளவிருப்பை அளித்தல் வேண்டும்
செம்மையொடும் எனக்குறவர் மடமான்அங்கு உரைத்திட அச்செவ்வேள் கூறும்
கொம்மைமுலை உமைபாகன் அன்னவன் பாலபசாரம் குறித்து முன்னம்
வெம்மையினில் தரும்சாபத் தான்அரனாப் புவியின்இடை மேவினனால்

சங்கரன்தன் அநுமதிக்கு முரணாகஅம் மயிலைச் சயிலத்துஏகி
அங்குஅவனுக்கு அருளல்முறையன்றுஎன மேல்நிகழ் வெண்ணி அண்ணல் கூற
மங்கைசிகா மணிஅணங்கு மாநிதியாம் குறவர்குல மடமான்பின்னும்
செங்கமலக் கரம்குவித்துப் பதம்தொழுது உள்உரிமையுடன் செப்பா நிற்கும்



எவ்வண்ணம் கொடும்சாபம் எய்தினன் ஆயினும்நமை இனிதிற்போற்றி
ஒவ்வரிய தவம்இயற்றி வருந்தல்உற்றான் ஆதலின்மிக் குஉவகைஎய்தி
எவ்வம் இலாதவன் பரித்த சாபமின்றே சென்றுஅகற்றி இனிமைசெய்தல்
செவ்விது எனஉரைத்து உளத்து அன்போடு எந்தைசிந்தை செய்யான் போல

நங்காய்நீ நவின்மாற்றம் தக்கதுஅன்று நாம்அதனை நயவோம்நீ மற்று
இங்குஇனிமேல் பகரல்என உரைத்தும்ஒரு விளையாட்டில் எந்தாய் பின்னும்
மங்கலமாம் ஆநந்தமொழி கூறியுளம் களிசெய்தும் வருந்திப் பல்கால்
சங்குகன்னற்கு அருஞ்சாபம் தவிர்த்துஅருள வேண்டும்எனச் சாற்றிநின்றாள்

அண்டம்எலாம் தனதுஅருளால் கண்டவனை ஆரணத்துக்கு அப்பாலனைப்
பண்டுஎன்னைப் பாலகனாப் பயந்துஅருமை செய்தானைப் பரமன்தன்னைக்
கண்டநிலையில் களங்கம் கண்டுவிண்டு ஆதியர்களை யான்கண்ணால் காண
மண்டலத்தில் வைத்தானை மனம்வருந்த வைத்தானை மதிவைத் தாயால்

ஆனதனால் நமதருகினில் நில்லாதுஇங்கு அகல்திஎன அண்ணல்சீற்றம்
தான் அடைந்து நவிலஅதை மானறிந்துஅவ் விடைஅகன்று தகுதெய்வானைத்
தேனையும் தன்னோடுவரும் பான்மைசெய இருவோரும் திகழ்வளம்சேர்
மானமயிலைக் கிரியில் தவம்புரியும் சித்தனிடம் வரநினைந்தார் 267

**வேறு**

சித்தன்மயிலை வெற்பின்இடைச் சிவன்மாமகனை உள்ளத்தின்
புய்த்துப் புரிந்த தவம்உரைத்தாம் உயர்வாமயிலைப் பொருப்பின்இடைத்
தத்தைஅனைய மொழிவள்ளி தந்திமகிழும் பைந்தொடியோடு ஒத்துமுருகற்கு
இதம்உரைத்தும் உறாதால் வருவது உரைப்பாமே 268

**பாலசித்தர் தவம்புரி சருக்கம் முற்றிற்று**







**வசனம்**

முனிவர்களே, இவ்வாறு கூறிய நாரதமுனிவர், பாலசித்தரிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றனர். அதுகேட்டு மனம்மகிழ்வுற்ற பாலசித்தர் அடியார் புடைசூழ மயூராசலம் செல்ல நினைந்து, தமது ஆச்சிரமம் விடுத்து, தென்னை, பலா, மாதுளை, கமுகு, வாழை முதலிய சோலைகளால் நெருங்கப் பெற்று ஆங்காங்கு தவசிகள் கூடித் தவம்புரியும் சாலைகள், அமிர்த நீர்த்தடாகங்கள் நிறையப் பெற்ற அழகிய மயிலமலையைக் கண்டனர். அவ்விடத்துப் பல மான்கள், யானைகள், உலாவுவதையும் புலிகள் முழையுள் அடங்கி-யிருப்பதையும் சர்ப்பங்கள் அடைகிடைப்பதையும் மயில்கூட்டங்கள் அகவி நடமிடுவதையும் கிளிக்கூட்டங்கள் கொஞ்சிக் குலவுவதையும் பசுக்காப்பு இயற்றிவேய்ங்குழல் ஊதிக் கண்ணனைப் போல் இடையர்கள் விளங்குவதையும் தேவலோக தருக்களை ஒத்த மலர்விருக்ஷங்களையும் உலோபிகள் உண்ணாமலும் உதவாமலும் பொருள்ஈட்டிக் கள்ளரால் இழத்தல் போன்று தேன் சேர்க்கும் ஈத்திரள்களையும் பர்வதசிகரத்தில் அமைந்த தாமரைத் தடாகங்களையும் கண்டு மகிழ்ந்தனர்.

அந்தச் சுனையில் பாலசித்தர் மூழ்கி அரிய திருநீறு, உருத்திராக்கம் தரித்துப் பலசுகந்த புஷ்பங்களால் தமது நியாயமான அங்கலிங்கபூசை முடித்துச் சோலையின் நடுவில் சந்திரகாந்தப் பாறை ஒன்றில் பதுமாசனமாய் உட்கார்ந்து மார்பு சேர்ந்த வலக்கையில் சின்முத்திரையும் துடையின்மீது அமர்ந்த இடக்கை அமைப்பும் கொண்டு பிராணவாசியை ரேசகபூரங்களால் சமப்படுத்திக் கும்பித்து மூலாக்கினியைச் சந்திரமண்டலத்துக்குச் சுவாலிக்க வைத்து அமுதம் அருந்தி இவ்வாறு பிராணாயாமமும் அதன்பின் பிரத்தியாகாரம், தாரணை, சமாதி முதலிய அங்கங்களும் அமைந்த மகா யோகத்தில் நிலைத்து மோக்ஷகர்த்தாவாகிய குமாரக் கடவுள் என்னும் பரம்பொருளை வழிபட்டிருந்தனர்.

இவ்வாறு முப்பத்தைந்து வருடம் ஆகாராதிகளை விடுத்துக் கடுந்தவம் இயற்றும் காட்சி தாராமையால் ஞானவைராகம் மிகுந்து அந்த அறுமுகப் பரனை உள்ளச்சிறையில் அடைத்து அன்பெனும் கயிற்றால் கட்டி இமைப்பொழுதும் மாறாமல் தியானபாவனையில் கொண்டு நிற்பதாகிய இணையற்ற தவத்தை இயற்றும் அப்பெருமானது தெரிசனம் சித்தர் பெற நேரவில்லை. அதன்பின் ஸ்ரீகந்தக் கடவுளது இருபுறத்தும் இச்சை கிரியை வடிவாய், அமைந்து விளங்கும் அருட்சத்திகளான வல்லி தேவசேனா என்னும் தாய்மார்களை இருதய கமலத்தில் அன்போடு சிந்தித்து வழிபடுவதானார். இருகரமும் தலைமேல் தூக்கி, பூமியில் கால்பெருவிரல்களை ஊன்றிக் கண்ணிமை பொருதாமல் மேலுற நிமிர்த்தி மூலாக்கினியை மூளச்செய்து



யோகத்தைப் புரிந்தார். அவ்வாறு இருக்குங்காலத்து, கந்தகிரியில் தாய்மார்இருவரும் முருகப்பெருமான் திருவுள்ளம், பாலசித்தரது தவத்திற்குச் சிறிதும் நெகிழாதிருப்பது கண்டு அவரது திருச்செவியில் மனம் உருகும்படி பலவிதத் துதிகூறி கயிலாயத்திலிருந்த சங்குகன்னன் மயிலமலையில் வந்து நம்மைக்குறித்துக் கடினமாகப் பலநாள் வருந்தித் தவம் புரிகின்றான். அம்மலையில் அவனுக்கு எதிரில் காட்சி கொடுத்து அவன் விருப்பை அளித்தல் வேண்டும் எனக் கூறிய உரையைக் கேட்டு முருகக் கடவுள் பரமசிவனுக்கு அபசாரம் செய்து சாபம் ஏற்றதால் அவன் மனிதனாக அமைந்தான். ஆதலால் நாம் அவனுக்கு அருள்வது முறையன்று என எதிர்கால நிகழ்ச்சியை உத்தேசித்துக் கூற பின்னும் நம்மை அன்போடு வழிபட்டு வருந்துகின்றான் ஆதலினால் அவனது சாபத்தை நிவிர்த்தித்து அருள்வதே நலம்என உரைத்தும் அதைக் கருதாவராகி, நீங்கள் சொல்லும் வார்த்தை முறையன்று என மறுத்தார். பின்னும் வள்ளியம்மை பலமுறை வேண்டலால், பரமேசுவரனை மனம்வருத்தச் செய்த சங்கு கன்னனுக்கு அருள மனம் வைத்ததால் நமது அருகு வசித்தல் தகாது செல்க எனக் கோபத்தோடு கூற, அஃது அறிந்த வள்ளிநாயகி அப்புறம் விலகி, தெய்வயானையம்மையையும் உடன் அழைத்துக் கொண்டு இருவருமாக, வளம் பொருந்திய மயிலமலையின் வசிக்கும் பாலசித்தரிடம் செல்லத் திருவுளம் கொண்டனர்.



## ஐந்தாவது
## தேடிவருந்து சருக்கம்

கொங்கைஆகிய கிண்ணமும் வண்ணமென் கொவ்வையஞ்
செவ்வாயில் தங்கும்ஆர் அமிர்தும் குவளைக்கணிற் தங்கும்ஓர் அருள்தேனும்
எங்கள்அன்னையாம் வள்ளிநாயகி இடத்துஏற்பதற்கு அன்பாகத்
துங்கவேனல்அம் சாரலில்திரியும் வேள்துணைஅடி மறவேனே 269

**வேறு**

இன்ன வண்ணம் இயன்ற சித்தன்தவம்
பன்னு மாதவச் சூதனைப் பார்த்துஎழில்
உன்னு நைமிசத் தூமறை அந்தணர்
பின்இ யன்றமை பேசப் பேசுவான் 270

**வேறு**

காதுலாவும் இருகண்கள் உலாவக் கண்டுலாவும்இள மான்எழில் கான
மீதுஉலாவும் மடவோதிமமுற்றும் மேவிவந்துகதி யின்றிற நாடித்
தாதுஉலாவுமலர் வாவிஉலாவும் தகைஉலாவும்தனி நடையின்உலாவிச்
சூதுஉலாவுநகில் மாதுஇருவோரும் சுபம்உலாவுமனதோடு நடந்தார்

நிலைவருந்திறம் அருந்தவநாளும் நெஞ்சகம் கொடுவருந்தி நெகிழ்ந்தம்
மலைவருந்து நெறிநின்றவன்மாடே மயில்வருந்தும்மிகு சாயலினால்வன்
சிலைவருந்து நுதலார் இருவோரும் திகழ்இளம்பிடிகள் நடையின் வருந்தக்
கலைவருந்திஉணர் வோரும்வருந்தக் கால்வருந்திஅதர் மேயினர் அன்றே

கனிநெருங்குசினை யில்சிறைமேவும் கான்நெருங்குபற வைக்குலம் எல்லாம்
தனிநெருங்குவன மீதுபசந்தத் தளிர்எனும் பரிசுதூவி நெருங்கப்
பனிநெருக்கு குரன்மேயின கிள்ளைப் பண்நெருங்க முலையாமலைபாரம்
இனிநெருங்குமென வேமயிலைப் பேர்இலங்கிடு கிரநெருங்கவந்து அணைந்தார்

கண்டுகண்டுமுனி பத்தினிமாரும் கானகத்தில்வளர் கன்னிகையாரும்
அண்டொணாது மகிமைப்பெறுசூரும் அங்குதங்கிவளர் மற்றுஉளபேரும்
தண்டனிட்டு அடிபணிந்துவழுத்தித் தங்கள் கண்குளிர நாடினர்ஏக
வண்டுகிண்டி மதுஉண்ட கடம்பன் மங்கைமார் இருவரும் கிரிகண்டார்

மாவினில்குயில் எலாம்இவர்தம்மை வாஎனும்பரிசு கூவிட அன்பர்
நாவினில் துதிசெயும் பரிசுஎன்ன நாதமார்அளிகள் கீதம்இசைப்பக்
காவினில்குலவு மன்னவர்சாயல் கண்டுதுன்றுசிறை மஞ்ஞையிர் இந்தப்
பூவினிற்பொலி பொதும்பர் உலாவப் பொற்புஉலாவு மலைமீதில் இவர்ந்தார்



அஞ்சலித்து முடிஏறிய கையும்அரிய சித்தனது நீறுஅணிமெய்யும்
விஞ்சிவிஞ்சி விழிஊறியநீரும் வெந்தணல்கொடியின் மாறிய சீரும்
நெஞ்சினில்படிய நின்றிடுவீறும் நிச்சயித்துஉவகை அம்புனல் மீறும்
வஞ்சிவள்ளி தெய்வானைமினாடி மனமகிழ்ந்து அதிசயத்து உரையாடி 276

முத்தைஒத்த மணிமூரலும் நீர்உண் முகிலை ஒத்த தளிர்கள் நிறைகுழல் ஏரும்
தத்தைஒத்து அமுதம்ஊறிய சொல்லும் சாரும் நற்புருவமாம் இருவில்லும்
கொத்தை ஒத்திடுபயோத மெய்யும் கொண்டுஇளம் படிவமாய் அருள்செய்யும்
சித்தகன்னியை ராய்மயில்ஏறும் தேவனுக்குஉரிய தேவியர் நின்றார் 277

சித்தனுக்குஎதிரில் நின்றிடுமாதர் திவ்யநல்உருவை நாடிவியந்தே
இத்தகைக் கொள்இவரே முருகன்தன் இனியதேவியர்கள் என்றுநினைத்துப்
பத்தியோடுஅவர்கள் பாதம்இறைஞ்சிப் பண்மலர்த்திரள்கள் தூவிவணங்கி
வித்தகத்துஅரிய நீவிரியாவர் மேயகாரணம்என் ஓதுமின்என்றான் 278

அந்தநல் உரையை எம்தமைஆளும் அன்னைமார் இருவரும் செவிகேளா
வந்தஅன்புஅதிக ரித்துஉயர்சித்தன் மாமுகத்தை இனிதாய் எதிர்நாடி
எந்தைமார்கள் உயர் சித்தர்கள்இங் ஙனம்எய்துவார்கள் எனஉள்ளம் உவந்தே
விந்தையாகஉறையும் செயல்உன்னி மேவினம் கனிவில் என்னவிளம்பா

அன்னை தந்தையர்கள் போலவிரும்பி ஆதரித்திடுவை என்ன வியந்தே
மன்னுமெய்த் தவம்இயற்றிய நீரான் மங்கைமார் இருவரும் களிஎய்தி
இந்நிலைக்கண் எனைஆள்தருமாறே இன்றுவந்ததென மன்றஉணர்ந்து
சொன்னவாசகம் மறுக்கிலன்நும்பாற் தொண்டுசெய்குவல் எனத்துதி செய்தான்

அற்றைநாண் முதலாய் இருவோர்க்கும் அந்தமாமயிலை நற்கிரி தன்னில்
கற்றுஉணர்ந்தநெறி நின்றிடுசித்தன் கனியும்நீர் உமைஉபசாரம் அதுஆக
நற்கனிக்குவை கிழங்குகள் ஆதிநாள்தொறும் தவறிடாது கொணர்ந்து
சிற்றடிக்கண்அவை வைத்து வணங்கத்திவ்ய நல்லமுது செய்துமகிழ்ந்தார்

வள்ளிநாயகி எனும்மட மானும் வானநாயகிஎனும் கனிதேனும்
விள்ளொணாஉவகை வெள்ளம் அழுந்தி விச்வகன் மனவண்மேவ நினைந்தே
தெள்ளியதோர் பரவும் மகம்மேருச் சிகரநீள்முடிகள் என்னு நிவப்பின்
வெள்ளை மேகஉரு வெள்கிடும் வண்ணம் வேள்வியப்பஒரு மாளிகையோடும்

சூளிகைப்பயிலு நிர்த்தவரங்கம் துப்புணற்குஉரிய தாகிய இல்லம்
தாள்உலாவி வருதற்குஒரு கூடம்தனையும் முன்புதருக என்ன வியந்தே
கோள்உலாவி வருமாறு உயர்வாகக் குலவுமாமணி குயிற்றி விளங்க
நாளுநாளும் இவை நிலவுஉறுமாறு நற்சிருட்டியில் இயற்றினன் அம்மா

அந்தமாலுபரி கைத்தலமீதே அரிவைவள்ளிதெய் வானைஎனும்பேர்
எந்தம்அன்னையர்கள் அன்பின் வதிந்தே ஏழ்புவிக்கு நலன்எய்துஉறு வண்ணம்

தந்தைஎன்று அருகு நின்றிடும் சித்தன் தன்முகத்தை நனிஅன்பொடு நோக்கி
இந்தமாளிகையில் ஈசன்அயன்மால் யாவர்ஆயினும் வராது தடுத்தே

காவல்கொண்டு அமர்கஎன்று அதிகாரம் கருணையோடு இனிய கட்டுரைகூற
ஆவலாய்அதனை மேற்கொடுசித்தன் அத்திறம் புரிவன்என்று களிப்பாய்
ஓவிலாமல் இரவும்பகலும் அவ்உபரிகைக்கு எதிர்துவார நிலைக்கண்
மூவராயினும் விடாதுதடுப்ப முன்னினன்பதிய நின்றனன் அன்றே

காலையும் மாலைஉச்சிப் பொழுதுஎன்னக் கூறும்வேளைகள் தொறும்கனிவாய்ப்
பாலசித்தன் நறுமென்கனிமுதல பரிவின்நல்கினன் அருத்துபு காப்பச்
சீலமிக்குமகிழ் வோடுஎழில்வள்ளி தெய்வயானைஎனும் மாதுஇருவோரும்
சோலையாரும் மயிலைக்கிரிமீதே துன்னிவைகிய பின்னே ஒருநாளில்

**வேறு**

வெள்ளி யங்கிரி மேவி இருப்பவன்
புள்ளி மாமயில் ஊர்ந்திடு புங்கவன்
வள்ளி யானை மணாளன் களங்கிலாத்
தெள்ளி யோர்உள மேநடம் செய்பவன் 287

பந்த முற்றும் பறித்துஅருள் செய்பவன்
எந்தை ஆகவந்து எம்தமை ஆள்பவன்
கந்த மொய்க்கும் கடம்புஅணி திண்புயன்
முந்து சஞ்சிதம் முற்றும் அகற்றுவோன் 288

சத்தி யத்தலை நின்ற தயாபரன்
சத்தி வித்தையில் வைத்த சமர்த்தினன்
சத்தி முத்தம் தரும்எழில் புத்திரன்
சத்தி தந்துஎமை ஆள்தரும் தற்பரன் 289

நங்கள் அங்க நலியக் கடிந்தவன்
செங்க ளத்தின் அசுரரைச் செற்றவன்
அங்கு அளங்கம் அரியபெண் ஆக்கினோன்
மங்க ளம்கவி மாலை அணிபவன் 290

முக்க ணக்கற்கு மூலம் உரைத்தவன்
பக்கு வத்தினர் பக்கலி னிற்பவன்
இக்கு விற்கு ஒளிரதி மணாளன்
சொக்கு மெய்எழில் ஏந்திய சுந்தரன் 291

உதய செங்கதிர் ஒத்த ஒளியினன்
இதய செங்கம லத்தினிப் பேய்ந்தவன்
சிதைய மூல மலந்தெறு சிற்குணன்
சுதைள ளத்திரு நீறுஅணி சோதியன் 292



சித்தி எட்டையும் சித்தர்க்கு அருள்பவன்
அத்தி மாமுகன் அன்புறு சோதரன்
முத்தி ஈந்துஅருள் மோனப் பராபரன்
நித்தியன் நிமலன் தன்நிகர் அற்றவன் 293

ஒருதரம் துதிசெய் யினும்ஒங்கு அருள்
கருதரங்கம் என்று எண்ணக் கனிந்தவன்
பொருதரம் பயிலாப் படை பூண்டு உளான்
இருதரங்க நிலைக்கரி யானவன் 294

வந்த சென்மம் வராமல் அளிப்பவன்
கந்த நாறும் கமலத்து உறைபவன்
எந்தை என்றுஅடி ஏத்திடக் குட்டிடும்
சந்த னப்புய மாம்சயி லத்தினன் 295

கருத்து இருத்தி வைக்கும்படி காதலைப்
பொருத்தி விட்டவன் பொங்கும் புகழினன்
வருத்தம் முற்றும் அகற்றிடும் ஐந்துளான்
சந்த னப்புய மாம்சயி லத்தினன் 296

இவ்வ ணம்புகழ் தங்கிய எந்தைதான்
செவ்வி தேக்குயர் வள்ளிதெய் யானையாம்
கொவ்வை வாள்இளம் கோதையர் காதலா
எவ்வ மாறுமுன் மத்தம தெய்தியே 297

வெள்ளி வெற்பிடை நின்றுநம் மெல்லியர்
எள்ளி எங்ஙனம் ஏகினர் என்றுஉளம்
உள்ளி அங்கண் ஒருவிளை யாட்டுஉறீஇ
வள்ள றேடி வருந்தி வருவனால் 298

மாய வன்பதி யேகவம் மாதவன்
தூய அன்பில் துலங்கி எதிர்கொளீஇச்
சேய் இவண்செலும் செய்திஎ னோஎனத்
தாயின் என்னை அளித்தவன் சாற்றுவான் 299

கான கத்தில் கிடைத்திடு கன்னியும்
வான கத்துஇடை வந்திடு பொன்னியும்
போனது இக்கைஇப் போது புகல்என
யான்அ றிந்திலன் என்றுஇசைத் தான்அரோ 300

வேதன் வாழிட மேவினன் அங்குஅவன்
பாத தாமரை சூடிப் பழிச்சிஎம்

நாத னேவந்தது என்என நம்உயிர்
மாத ரார்இங்கு வந்தன ரோவென்றான் 301

மான வேடர் வளர்த்திடும் அன்னையும்
வான நாடன் அளித்த மடந்தையும்
யான்உய் தற்குஇவண் அண்ணுவ ரோஎனாத்
தேன் அலம்புஉறு சேவடி போற்றினான் 302

அந்தர ந்தனில் ஏகினன் அங்குஉறை
இந்தி ரன்மலர் ஏந்தி எதிருஉறீஇ
வந்து அடித்தல மன்னிஇங்கு எய்தின
எந்த வண்ணம் இசைத்துஅருள்க என்றிட 303

மான்அளித்திடும் மானும்ஓர் தெய்வத
யானை தந்தரு ளானையும் இங்ஙனம்
போன வோஎனப் போகியும் போனதை
யான் அறிந்திலன் என்ன இறைஞ்சினான் 304

ஆத வன்பதி அண்ணினன் அங்குஅவன்
பாத தாமரை சூடியிப் பக்கலில்
ஆத னேஎய்தும் வண்ண நவிலெனத்
தாதை யாய்எனை ஆள்பவன் சாற்றுவான் 305

குறவர் தம்குல தீபமும் கோவினுக்கு
இறைவர் தம்குலம் ஏத்தரும் செல்வியும்
உறுதல் இங்ஙனம் உண்டுஎனில் கூறுஎன
அறிகிலேன் என்றுஅவன் அடிவீழ்ந்தனன் 306

இந்து வின்தல மெய்தினன் அங்குஅவன்
வந்து அருச்னை மாண்பின் இயற்றியே
சிந்தையாலும் தெளிவரும் சோதிநீ
எந்தவண்ணம் இங்குஎய்தியது என்றனன் 307

உன்னை வேணியில் வைத்தவன் எண்கரம்
அன்ன வைத்திடு மானின மானையும்
பொன்னில் அத்தரசன் தரு பொன்னையும்
முன்னி என்னஇங்கு உற்றிலரால் என்றார் 308

இன்னணம்பல தேவர் இருப்புஎலாம்
கன்னி தந்துஅருள் காதலன்நாடியே
துன்னும் ஆழ்கடல் சூழ்தரும் வையகம்
தன்னில் வந்தனன் தாயென வந்தவன் 309



பத்ர பீடம்நே பாளம்பி ரமாண்டம்
சித்த ராச்சிர மம்சிவ லோகமே
முத்தம் ஆர்அவி முத்தம் காசி
நற்று வாரந்து நாசிமா நைமிசம் 310

மந்த ரக்கிரி வாரிச மாவரை
அந்த ரத்து உயர்ஆட ரவக்கி
சந்த்ர தானம் சுமிந்திர மோடய
வந்திசொன்ன மலையொடு இராவதி 311

குல்லை யின்பெயர் கொண்டுஎழி லார்வன
மெல்லி சாரதை மேவி இருப்பிடம்
செல்லு தற்கரி தாஞ்சிகண் டம்ஒளிர்
சொல்லொ ணாப்புகழ்ச் சூல வரையுடன் 312

**ஸ்ரீசைலம் - திருக்கோகர்ணம்**

மடன்ம லர்ச்சுனை மல்கு பருப்பத
முடியைக் கண்டவர் மூளும் பிறவிதீர்த்து
அடருமோ சுந்தந்தாள் மல்லிகா ர்ச்சுனம்
மடல்கம் பத்தன்அசைத் திளை நற்றலம் 313

**திருவாலங்காடு**

முஞ்சி கேசியும் உன்பொரு நாகமும்
நெஞ்சம் நெக்கு நினைந்து அவசம்கொள
வஞ்சி நீலியுள் நாணம் மருவவும்
நம்சி வன்நட னம்புரி நற்றலம் 314

**திருவொற்றியூர் - திருமுல்லைவாயில்**

ஐந்த ருக்குழு அங்கண் மகிழதாய்
வந்து அருந்தவம் ஆற்றிய மாதலம்
எந்தை முல்லைச் செடியின் முளைத்துஎழும
சுந்தரத்திற் சொலித் திருக்கும் தலம் 315

**திருவச்சிறுபாக்கம் - திருமாற்பேறு**

ஆற ணிச்சடி லன்னெமை ஆள்பவன்
ஏறு தேர்அச் சிறுத்திய நற்றலம்
தேறு மாயன் திகிரியைத் தாங்கிடப்
பேறுஅளித்துப் பிறங்கிய மாதலம் 316

**காஞ்சிபுரம் - திருவண்ணாமலை**

நாகம் ஈன்றநன் நாரி யிருந்தரு
யோக பூசை யுஞற்றிய நற்றலம்

மேக வண்ணனும் வேதனும் காணஅரும்
சோகம் தீர்க்குநல் சோண கிரித்தலம் 317

**திருக்காளத்தி - திருக்குறுக்கை**

பைய ராவும் பகடு முரண்கொடு
செய்த பூசையால் சித்தி பெறுந்தலம்
ஐயன் என்றுஉண ராமல் அலர்க்கணை
எய்த வேளை எரித்த பெருந்தலம் 318

**திருக்கழுங்குன்றம் - திருப்பெருந்துறை - திருக்கோவலூர்**

அந்த ரத்துயர ராரண மாமலை
எந்தை யார்முனி வோர்களுக் கேமறைச்
சந்தை வைத்தன்று சாற்றிய மெய்த்தல
மந்த காசுரன் ஆவி அடும்தலம் 319

**திருவிரிஞ்சை - சீகாழி**

தம்மை நிந்தை செயுந்தருக் கேய்புரம்
வெம்மை யாக நகைத்த விழுத்தல
மம்மை முன்மயி லாக வருந்தவ
வெம்மை யாள இயற்றிய மெய்த்தலம் 320

**திருவதிகை - மாயூரம்**

அந்த ரத்துயர ராரண மாமலை
எந்தை யார்முனி வோர்களுக் கேமறைச்
சந்தை வைத்தன்று சாற்றிய மெய்த்தல
மந்த காசுரன் ஆவி அடும்தலம் 321

**விருத்தாசலம் - திருக்கண்டியூர் - திருவிற்குடி**

வித்த கன்விப சித்துக் கருடர
வத்த னார்வளர் வன்னி அடித்தலம்
சுத்த னோர்சிரம் கொய்திட்ட தூய்தலம்
சத்தி யம்இல் சலந்தரற் காய்தலம் 322

**திருச்செங்கோடு - திருவஞ்சைக்களம் - திருவானைக்கா - மதுரை**

வாச மாமலர் மாடச்செங் குன்றமே
மாசு தீர்த்திடு வஞ்சைக் களத்தல
மாசி லாக்கரி அன்புசெய் நற்றலம்
ஈச னார்அரசு ஆளும் எழில்தலம் 323

**திருப்பூவணம்**

பூவணத் துறும் பொன்னனை யாண்முன
மாவ ணத்தில் வகுத்த வரனுரு



வாவ லிற்கிள்ளி முத்தம் அளித்தலைத்
தூவ ணத்தில் துதைந்துஎழி லும்தலம் 324

**திருநெல்வேலி - திருச்சிராப்பள்ளி**

தோயு நீர்மழைத் துன்பமை யாவிதம்
காயும் செந்நெலைக் காத்த திருத்தலம்
தாயு மாகி அரிவையைத் தாங்கிய
நேய நம்பர னேசித் துறுந்தலம் 325

**திருக்கோணமலை - வேதாரணியம் - திருவாரூர்**

சீரி னார்கயி லாயத் திருமுடி
நீரி னான்மறை பூசை நிகழ்தலம்
தேரி னாற்சிறந் தேதிரு ஏத்திய
பேரின் ஆற்றுதி ஏறும் பெரும்தலம் 326

**திருவைகாவூர் - திருவழுவூர்**

இடபம் எய்யுறும் எந்தைக்குத் தன்உரு
அடைவுடன் பரன்அன்று அருள்நற் றலம்
கடக ரக்கரி காய்ந்தே உரித்துஅணி
அடல்மிகுந்தே அழகு உலவும் தலம் 327

**திருப்பறியலூர் - திருக்கடவூர்**

அக்க ணிந்தவ னன்று மகஞ்செயும்
தக்கன் அங்கம் தடிந்த பெருந்தலம்
புக்க ஏமன் புரண்டுஅழப் பாதத்தால்
உக்கிரத்தின் உதைத்த உயர் தலம் 328

**வைத்தீசுவரன் கோயில்**

தான வேதனும் தாவு சடாயுவும்
வான ஒண்கதி ரும்மலர் கைக்கொடு
பான லங்கண் டனைப் பணிந்து ஏத்திய
மேனி லாவி விளங்கிய நற்றலம் 329

**சிதம்பரம்**

உலகம் ஏத்திநின்று உய்யவும் நற்றவப்
புலியும் ஞானப் புயங்கமும் நின்றுஎதிர்
மலிமகிழ்ச்சி மருவவும் பொன்மன்று
நிலவும் சோதி நிருத்தம்செய் நற்றலம் 330

இன்ன நற்றல மேமுத லியாவுமே
அன்ன வாவி அகன்சுனை ஆழ்தடம்
துன்னு மாநதி சுற்றுங் கிடங்குகாண்
மன்னுங் கூவல் வளாகம் முழுதுமே 331

வான் உலாவிய மாமலைச் சாரலும்
தேன் உலாவும் செழுமலர்ப் பொங்கரு
மான் உலாவும் அருங்கட மும்இள
மான் உலாவும் வனத்தின் வெளிகளும் 332

மாத வத்தினர் வைகிய தானமும்
சாதகத்தினர் தங்கும் இடங்களும்
மேதம் அற்ற இருடிகள் இன்புஉறு
மோது மாதர் உலாவும் அகங்களும் 333

அஞ்சு கங்கள் அடரும் சினைகளும்
மஞ்சை யாரும் வனத்தும் பொதும்பரும்
எஞ்சல் இன்றி விளங்கும் அரன்எழில்
வஞ்சி யார்தமை நாடி மயங்குவான் 334

என்உ யிர்க்குஉயி ராகி எயினரின்
தன்உ யிர்க்குஉயி ராய்உனைத் தந்திடும்
அன்ன மானுக்கும் ஆருயி ராய்வளர்
அன்னமேஎங் குஅகன்றனை என்றனன் 335

ஐந்த ருக்க ன்அநுதின மும்பயில்
தந்த நற்கிளியே தணந் தாயென்றன்
சிந்தை கொண்டுஎங்கு சென்றனை மென்பத
நொந்தி டும்படி என்று நுவன்றனன் 336

**வேறு**

மலையா சலநின்று உலவும் வளியே!
அலையார் தருமம் முனிவன் அகிலத்து
இலையாம் எனஇங்கு அயிலா துஎவன்
கொலையே புரியக் குலவா வணமே 337

மயில்அன் னவர்மா முகநா ணியிரா
இயலும் மதியே உனையே எளிதாய்
அயிலும் வணம்எண் ணிவிழும் குமரா
பயிலும் படிகால் பரிசே துரையாய் 338

நந்தம் தொனிமுற் றினுமே நலியச்
சந்தம் பெறுதையலர் மேயினர் என்று
உந்தம் மகிழ் ஓவியகோ ரகைகாண்
முந்தும் திசையே மொழியீர் மொழியீர் 339

நாட்டம் தனைநா ளுநகைத்து எழிலால்
வாட்டம் செயுமங் கையர்எய் தினரென்று



ஓட்டம் செயுநல் உழையீர் அவரைத்
தேட்டம் செயல் உங்கள் திறந்ததுவே 340

நஞ்சாய் அலைநா ணஉலா வும்அவர்
தம்சா யன்மறைந் ததுஎனத் தகையால்
எஞ்சாது இவணே பயிலும் மயில்காண்
மஞ்சார் குழல்மா தரைநா டுமினே 341

சொல்லில் சுகம்என் பதுதீ ரும்வணம்
சொல்லிப் புகழ்பெற்று அவர்தூ ரமெனாச்
செல்வக் கிளவிப் பயிலும் சிறையார்
செல்வக் கிளிகாள் அவரைத் தெரிமின் 342

**வேறு**

தன்தன்பதியைப் பிரியாது சலசலத்துஅலரில் உறுமனங்காள்
ஒன்றிக்கலவி யானமகிழ்ந்தே உறையும்கருத்தை அறிந்தனமான்
மன்றற்குழலார் நடைக்குடைந்து வதிந்தேம் அவர்இங்கு அகன்றதனால்
இன்றைக்கு உயர்ந்தோம் என்றோஅவ் இருவர்இருக்கும் இடம்புகல்வீர்

உங்கள்வதனக் கோலம்எலாம் ஒன்றாய்த் திரட்டி ஒளிகாட்டு
மங்கையாரைத் துறந்தம் எனும் மகிழ்ச்சி அதனால் மலர்ந்திருக்கும்
பங்கேரு கங்காள்இவர்கள் படரும்திசையைப் பகர்மின்இன்றிச்
சங்கைவைத்திர் எனிலும்தம்மைத் தாவுமரை என்றுஉரைப் பேமால் 344

மீனந்திரைசை வலங்குமுதம் மிளிரும் கமலம் வெண்முத்தம்
பானந்துயரும் செம்பவளம் பனிக்கண் கரங்கே சம்செவ்வா
யானனம்பல் கழுத்துஇதழ்கள் அமைந்ததடமா மணங்கரசே
மானும்கரியும் கூடிஇங்ஙன் வந்தமாற்றம் அறியாயோ 345

அருவித்திரளே மணிவடமாய் அணிகார்முகிலே மணிவாரா
உருவத்து உயர்ந்து எம்மடந்தையர் பால்ஒளிரும் தடமாமுலை நிகர்த்தீர்
பருவத்தினில் இங்குஎமைப் பிரிந்து படரும்அவர் வைகுஇடம் பார்த்துத்
தெரிவிப்பதற்கோ ஓங்கல்எனத் திருநாமம் கொண்டு எழுந்தீரே 346

கும்பத்தலத்தின் எழில்அழிக்கும் கொங்கையாரை நீங்கினம்என்று
உம்பர்க்கு அறிவிப்பதுபோல உயரும் பனைக்கை எழில்காட்டிக்
கம்பமதநீர் விடுங்கரிகாள் கரம்ஐந்துஉடனே வளர்களிற்றின்
தம்பிஎனஉள் உணர்ந்தவர்கள் சார்ந்தஇடம் பார்த்து உரைப்பீரே 347

எமதுமடவார் புக்கஇடம் எவண்என்று அறிந்துஇங்கு உரையாமல்
உமதுவலியை உளம்கருதி உழல்வீராயின் ஒண்புலிகாள்
நமதுதாதை மூவிலைவேல் நாட்டிச் சிதைத்துஅங்கு உரித்திடுவான்
மமதைஒழிமின் புல்லெனும்பேர் வையமொழியத் தரித்தீரே 348

கடத்தில் பயிலும் விலங்கு எவைக்கும் கவின்சேர் அரசாய் விறல்பெற்றீர்
திடத்தின்நமது சொல்கேளீர் தேவிமார்கள் பிரிந்து உறையும்
இடத்தைத் தெரிந்துஇங்கு உணர்த்திடுமின் இன்றேல் ஆலகாலம்எனும்
விடத்தை அயில்வோன் சரம்பதமாய் மேவிஅடுவான் காணீரே 349

கருமாஎனும்பேர் தரித்திருக்கும் கான விலங்கீர் இதுகேளீர்
ஒருமாமதுரைப் பதிஅதனுளோர் ஈராறு கோலமும்அப்
பெருமான்வழுதி அவைதனில் பிறங்கும் அமைச்சத் தொழிலினராய்
வருமாறு அளித்தோன் சேய்எனது மடந்தை மார்வை கிடந்து எரிப்பீர்

இன்னவண்ணம் சராசரங்கள் யாவும்இரங்க வினவினனால்
அன்னம்அறியாத் தனிமுதலுக்கு அறிஒணாத் தாரகப் பொருளைப்
பன்னுங்குரவன் எவ்வுயிரும் பரிவாய் விளங்கப் பரித்திடுவோன்
என்னவிளையாட்டோ அறியேம் மின்னற்கடலின் கரைகாணான் 351

**வேறு**

தண்ணே யெனும்ஐக் குழல்தாங் கிஒளிர்
பெண்ணே எனும் என்பிழைபே னும்இரு
கண்ணே எனும் என்கனிவால் நிறையும்
எண்ணே எனும் ஏந்திழையே எனுமால் 352

கிளியே எனும்என் கிளர்அருள் கமலத்து
அளியே எனும் அற்புதம் ஆரமுதத்
துளியே எனும் மாமணியிற் துனுநல்
ஒளியே எனும்ஓவியமே எனுமால் 353

மருவே எனும் யாவும் வழங்கிடு பைந்
தருவே எனும்என் தனி நாயகமாம்
உருவே எனும்உன் னுவதற்கு அரிதாம்
திருவே எனும்என் செய்வேன் எனுமால் 354

நிதியே எனும்என் துயர்நீக்கு பெரு
நதியே எனுநல் கலை ஆயிரம்ஆர்
மதியே எனும்வந்து எதிர்நிற்க இது
ததியே எனும்இத் தடையேன் எனுமால் 355

நானத் துயர்நற் குழலாய் எனுமால்
கானத் துயர்கா ரிகையே எனுமால்
மீனத் துயரும் விழியா எனுமால்
வானத் துயர்மாது அரசே எனுமால் 356



**வேறு**

என்றுபல வாகமொழிந்து இளங்குமர ன்இன்புதரும்
அன்றன்மலர்ச் சோலைஉலா மாமயிலைப் பொருப்பின் இடைச்
சென்றுஅன்னப் பருப்பதத்தின் செவ்விஎலாம் கண்களினால்
ஒன்றவியப் பொடுநோக்கி உவகைஎனும் கடற்படிந்தான் 357

முத்தநகை யார்வள்ளி தெய்வானை முகம்காணச்
சித்தசன் தன்எழில்அழிக்கும் செவ்வேள்இங்கு உற்றதனால்
வித்தகம்சேர் பாலசித்தன் வெஞ்சமர்செய் குதல்பாராது
இத்தருணம் அகல்வோம்என்று எண்ணினன்போல் கதிர்மறைந்தான் 358

பொருந்தா அசுரர் உடற்குருதி பொருந்த வடிவேற்கு இரையாக்கும்
குருந்துமயிலை மலைஅடைந்த கொள்கைஉரைத்தாம் அக்குமரன்
வரும்தா ரையினில் பாலசித்தன் மறிப்பச் சினந்துஅங்கு அரும்சமரம்
புரிந்தார்கதிர்வே லினைவிடுத்த புகழை இனிதாப் புகலுதுமே 359

**தேடிவருந்து சருக்கம் முற்றிற்று**



## வசனம்

முனிவர்களே, கந்தகிரித் திருக்கோயிலினிடத்து முருகப் பெருமானால் விலக்கப்பட்ட வள்ளிநாயகி தெய்வயானையம்மன் இருவரும், மிகுந்த மனமகிழ்வுடன் பலவனங்களையும் நீர்நிலைகளையும் கடந்து திருவடி வருந்த நடந்து கடும்தவம் செய்யும் பாலசித்தரிடம் வளப்பம் நிறைந்த மயிலமலை வந்து அடைந்தனர். மாமரங்களின்மீது குயில்கள் இருந்து கூவுவதும் அடியார்கள் துதிகூறுவதுபோல் வண்டுகள் இசைபாடுவதும் இவர்கள் சாயலைக் கண்டு மயில் கூட்டங்கள் சோலைமயில் மறைவதும் ஆகிய சிறப்புகளைக் கண்டு அம்மலையின்மீது ஏறினர். ஆங்கு அரியதவம் பயின்றுள்ள பாலசித்தரது, முடிமேல் குவித்த கையும், திருநீறு அணிந்த மேனியும், கண்களில் வடியும் ஆனந்த பாஷ்பமும் முதலிய கோலங்களை வள்ளி தெய்வ யானை இருவரும் கண்டு வியந்து கூறித் தமது தெய்விக உருவத்தை மாற்றித் தவக்கோலம் அமைந்த சித்தகன்னிகைகளாக வடிவுகொண்டு நின்றனர். அதுகண்ட பாலசித்தர் தமது தவவலியால் இவர்களே நமது முருகப் பெருமானது தேவிமார்கள் என்றுஎண்ணி அவர்களது திருவடிகளை வணங்கிப் பலமலர்களால் அருச்சித்து, துதித்து நீங்கள் யார்? இங்கு வந்த காரணம் யாது என வினவினார். அம்மொழிகேட்டு அன்னைமார் இருவரும் அன்புடன் சித்தரை நோக்கி நாங்கள் சித்தகன்னிகைகளென்றும் எமது தந்தைமார்களாகிய சித்தர்கள் இங்கு வருவார்கள் என்று தங்க வந்தோம் என்றும் கூறி, ‘எங்களைத் தாய்தந்தையர் போல் நீ காக்கக் கடவை’ என்று கூறலும் வியந்து நமது தவத்தால் இவர்கள் நம்மைக் காக்க வந்தவர்கள் என்று உணர்ந்து அவர்கள் மொழியை மறுக்காது உமது தொண்டுசெய்யக் கடவேனென்று துதித்தனர். அன்றுமுதல் அவ்விருவர்க்கும் அம்மலையினிடத்துப் பாலசித்தர் கனிந்த மனத்துடன் கனிவர்க்கங்கள் கொண்டுவந்து உதவி வணங்க அதனையுண்டு மகிழ்ந்தனர். சித்தகன்னிகள் தேவதச்சனைத் தமது மனத்தில் நினைத்து உன்ன சிகரங்கள் அமைந்த அலங்கார மாளிகை ஒன்று அமைக்கக் கட்டளையிட்டவண்ணம் அவன் மந்திர வலியால் அமைத்தனன். அந்தத் திருமாளிகையில் வசித்துச் சித்தரைநோக்கி பிரமன், விட்டுணு, சிவன் யாவராயினும் உள்ளுற விடாது காவல் பூண்டு இருக்க ஆக்ஞாபித்துற்றனர். அவ்உத்தரவைச் சிரமேற்று இராப்பகலாய் யார்வரினும் தடுக்க எண்ணித் திருவாயிலைச் சித்தர் காத்து வந்தனர்.

இவ்வாறு இயலும் நாளில் திருக்கைலாயகிரிச் சார்பான கந்தகிரியில் விளங்குபவரும், மயில்வாகனக் கடவுளும் வள்ளிதெய்வயானை கணவரும் ஞானிகள் உளத்தில் நடிப்பவரும் அடியார் பந்த பாசத்தைத்



தவிர்ப்பவரும் மணம் மிகுந்த கடம்பமாலை அணிந்தவரும் சத்தியத்தில் விளங்குபவரும் பார்வதி முத்தமிடும் குழந்தையும் யுத்தகளத்தில் அசுரர்களை அழித்தவரும் ஞானசம்பந்தராக வந்து எலும்பைப் பெண்ணாக்கியவரும் பரமசிவனுக்குப் பிரணவ மந்திரம் உபதேசித்த குருநாதரும் பக்குவிகள் காண விளங்குபவரு மன்மதனும் கண்டு பிரமிக்கும் அழகரும் உதயசூரியன் போன்ற ஒளியினரும் வெள்ளிய திருநீறு அணிந்த விளக்கத்தினரும் சித்தர்களுக்கு அஷ்டமாசித்தி அருள்பவரும் விநாயக சகோதரரும் நித்தியரும் நிகரற்றவரும் அன்பர்களுக்கு மறுபிறவியில்லாத கதியளிப்பவரும் பிரமன் கதறும்படி குட்டிய மலைபோன்ற புயங்களை உடையவரும் ஆகிய ஸ்ரீ முருகக் கடவுள் தமது தேவியர்களான வள்ளி தெய்வயானையின் பிரிவு ஆற்றாதவராய் தாம் எல்லாம் உணர்ந்த வல்லவர் ஆயினும் திருவருள் ஆடலின் நிமித்தம் கயிலாயத்தினின்றும் அவர்கள் எங்கு சென்றனரோ என்னும் ஐயத்தோடு வருந்தித் தேடிச் செல்வதானார். அவ்வாறு சென்ற கந்தக் கடவுள் விஷ்ணுபுவனமாகிய வைகுண்டமும், பிரம்மபுவனமாகிய சத்தியலோகமும், இந்திர புவனமாகிய சொர்க்கலோகமும், சூரிய மண்டலம், சந்திரமண்டலம் முதலிய தானங்கள் எல்லாம் சென்று தமது தேவிமார்களைத் தேடிக் காணாமல் பூவுலகத்திற்கு வந்து பத்ரபீடம், நேபாளம், காசி, அரித்துவாரம், நைமிசாரண்யம், பிருந்தாவனம், ஸ்ரீசைலம், திருவாலங்காடு, திருவொற்றியூர், காஞ்சி, அருணை, திருவதிகை, விருத்தாச்சலம், திருவஞ்சைக்கலம், மதுரை, திருவானைக்கா, திருநெல்வேலி, வேதாரண்யம், திருவாரூர், வைத்தீஸ்வரன்கோயில், சிதம்பரம் முதலாகச் சொல்லப்படுகிற பல புண்ணியத் தலங்களிலும் அநேக நதிக்கரை மலைச் சாரல்களிலும் முனிவர் இருக்கைகளிலும் சோலைகளிலும் தேடி மயங்குவாரானார். பிரிவு ஆற்றாது பலவாறு தேவிமார்களை முன்னிலையாய் வைத்துப் புலம்பியும், தென்றல், சந்திரன், மயில்கள், கிளிகள், அன்னப்பக்ஷிகள், தாமரைமலர்கள், தடாகங்கள், பருவதங்கள், யானைகள், புலிகள், சிங்கங்கள், வனப்பன்றிகள் முதலிய சராசரப் பிரபஞ்சப் பொருள்களைச் சுட்டிப் புலம்பியும் ஏங்குவதானார். பிரமதேவனால் அறியமுடியாத தனிமுதலாகிய பரமசிவனுக்குப் பிரணவப் பொருளை உணர்த்தி அருளிய ஆடல் என்னென்று கூறுவது? மனத்தளர்ச்சியுடன் பலவாறு தன்மை முன்னிலை படர்க்கைகளில் இரங்கல் மொழிகள் கூறிக் கொண்டு வாசனை மிகுந்த மலர்ச்சோலைகள் நெருங்கியுள்ள மயில் மலையையடைந்து ஆங்குள்ள வளப்பங்களைப் பார்த்துக் களிக்கடல் மூழ்கினார்.

## ஆறாவது
## யுத்தச் சருக்கம்

அன்னமும் தருமணி பலவும்தரும் அமரர்தம் போகம்எலாம்
முன்னவும் தருமூதறிவும் தருமுறையொடு மூதுலகோர்
மன்னிவாழ்ந்திடும் புகழ்தரும் தன்பதம் மருவினர் பின்னும்ஒரு
சன்மம் வேண்டினும் தருகிலாக் குருபரன் சரண்மலர் சிரம்வைப்பாம்

**வேறு**

அகன்அமர்ந்த பாலசித்தன் அரும்தவத்திற்கு இரங்கி அருள் அன்னைமார்கண்
முகமலர்ந்தே பணித்ததனை மொழிந்தனைபின் அடர்ந்தகதை மொழிவாய் என்று
சகமநித்தம் பிரமநித்தம் எனத்தோந்த சவுனகா தியர்கள் கேட்பப்
புகலரும் சூதன்தன் கனிவோடுஅம் முனிவர்முகம் நோக்கிப்புகலா நின்றான்

**வேறு**

விரும்பும் அடியார் உளம்என்னும் வெற்பிலிவர்ந்தஞ் சலியாகும்
அரும்பும்காந்தள் மலர்தோன்ற ஆனந்தத்தேன் மாரிசொரி
கருங்கொள்மூவாம் குமரன்அந்திக் காலைமயிலை மலைமுகட்டின்
வரும்போதுஅரிவை மார்கள்பயின் மணிமாடத்தை நோக்கினனால்

இம்மாளிகைமேல் எனக்குஉயிராய் இலங்கும் இன்னார் இருப்பர்எனில்
அம்மாமுகம்கண்டு உய்வல்என அகிலம்ஆளும் அரசனைப் போல்
செம்மாந்து அணிகேயூரமுடி செய்யமதாணி வெயில் விரிப்ப
எம்மான்ற நுவாள்அயில்ஏந்தி இவர்ந்திட்டான்அம் மலைமீதே 363

கானவேடர் வளர்த்தஎழில் கன்னிஉடனே நான் மருப்பின்
ஆனைமகள் முறைமாடத் அருகுஅம் முருகன் வருங்காலைப்
பானற் களத்தன் அரும்சாபப் பரிசான் முருக்என்று உணராதே
ஏன்இத்தலம் வந்துஉற்றான்கொல் என்னாச் சித்தன் எண்ணுவனால் 364

பொருந்தார் மதில்மூன் றையும்பொடித்த போர்வெள்விடையான் அழற்கண்ணால்
எரிந்த அனங்கன் உருத்தாங்கி எய்தினானோ இந்திரன்தன்
அரும்பாலகனாம் சயந்தனொடு சத்தசுர கீதங்கள் எலாம்
தெரிந்தஅழகார் கந்தருவச் சேயோம்ஆய அருஉருவோ 365

யாவனோஎன்று உளம்மயங்கி அணிமாளிகையின் முகவாயில்
காவல்புரியப் பாலசித்தன் கடிதின்ஏகி ஆரைஇங்கு
மேவல்நில்நில் எனஅறைந்து தடுத்தான் வெயிலால் வருந்தியர்
ஆவல்கூர்ந்து நீர்த்தடத்தை அடுக்கும்காலை தடுப்பான்போல் 366



சித்தன்இவ் வாறுஎதிர்தடுத்துச் சென்றுவடிவேல் ஏந்து செங்கை
முத்தன் முகத்தை நோக்கிஇந்த முழுமாளிகையில் காவல்புரிந்து
அத்தன்முதலோர் அணுகாமல் அண்ணுவேன்இம் மாடம்அதில்
சித்தமடவார் எமைக்காக்கும் திருநோக்கத்தால் அமர்கின்றார் 367

நின்னைநோக்கும் கால்உலகுஆள் நிருபன்தனைப்போல் இருக்கின்றது
உன்னோடுஎதிர்த்துச் சமர்புரிவார் ஒருவர்இலைஇக் கிரித்தலத்தின்
மன்னும்அவர் கடவநிலைக்கண் மாறாதுஇருக்கும் முனிவர்களாம்
தன்னை நிகர்த்தோர் உடன்பொருதத் தரணிஆள்வோர்க்கு அறன்அன்றோ

வாளும்வரிக்கட்டு உறுதநுவும் வடிவேலும் சேர்ந்திருக்கும் இகல்
தோளும்பொலிய நிற்கின்றாய் சொல்வதுஎன்னோ மநுமுறையை
ஆளும்தன்மை அகத்திடைஓர்ந் துஅகல்வாய்என்ன அதற்குஒருசொல்
வேள்அங்குஉரையாது அரிவையர்கள் விரகஅக்கினியின் விறல்அதனால்

அம்மாளிகையில் செலச்செருக்குற்று அணுகுங்காலைப் பாலசித்தன்
இம்மாநிலங்கள் உய்யஅருள் ஈயும்தாய்மார் இருவரையும்
செம்மாமனத்தில் கருதுதலும் தெரிவைமார்கள் வந்துஅருவாய்
மெய்ம்மாதவனுக்கு அருளிஇன்ன மாற்றம்எடுத்து விளம்புவரால் 370

அன்பின்தலைநின்று அடிமைசெய்தே அருளின்தலைநின்ற அகிலத்தோர்க்கு
இன்பம்அளிக்கும் பாலசித்தன் எனும்பேர்புனையும் குணவானே
உன்பங்குஇருப்ப யாம்உன்தன் உளத்தில் தோன்றும் கவல்ஒழிந்தே
நின்பாங்கு எதிர்க்கும் அரசனொடு நேர்ந்து கடும்போர் புரிகென்னா 371

**வேறு**

அத்திரசத்திர வித்தைஅனைத்தையும் அன்பாகச்
சித்தன்உளத்தில் இருத்திஅடற்படை சிட்டித்தே
அத்தம் அளித்துஇர தத்தை விதித்தும் அளித்தார்கள்
பத்தர் உளத்தில் நினைத்த விருப்பும் பழுதாமோ 372

அருளுடன் இருவரும் அருளிய மொழிசெவி அணுகாமுன்
தெருளிய மனதொடு பலபல துதியுடன் அடிசேவித்
திருள்அற ஒளியிடு பலபடைகளும் உயர்இரு தோளில்
பொருள்என அழகுற வரைபொரு கவரியின் மிசைபோனான் 373

தனதுஅரிவையர் அருளிய ரதமிசைவரு தகையோனை
வினைஇரி தரவரும் அறுமுகன் இகலொடு மிகநோக்கி
மனமதில் உயர்சின அனல்உற அவனொடு வலியாக
உனிஅமர் செயஒரு திகிரியை வரும்வணம் உளம்வைத்தான் 374

அகமதில்உனவரு குயவினில் அழகுற அவன்ஏறச்
சகஇருள் அறவொளி விடுகதிரவன் வெயிறனும் நாணப்
பகைகொடு வருதவ சியும்அவன் மிசைமுகில் பயமாகப்
புகைவிடும் அனல்உமிழ் கணைஅடர் விதமிகு போர்செய்தான் 375

அயன்அரிஇமையவர் அசுரர்கண் முதலிய அடர்போரில்
உயர்கொடி அறமுடி அறவிடி எதிரர எனஓடிப்
பயம்அடைடவர்களல திலையிவன்நமதுஎதிர் படைஏவிச்
சயமுற அதிஇகல் புரிவது மிகஅதி சயம்என்றே 376

புகல்அரும்ஒரு மறைமுடி எனும்ஒரு பொருள்மிகு போத
மகம்உற வரன்உயர் செவிஇடை அருளிய அணிவாயால்
இகல்பெறும் அசுரர்கண் முடி,பொடி படவயில் எறிதோளான்
தகைமலர் இருகரம் மிகுசர மழைசொரி தரநின்றான் 377

**வேறு**

காற்றுஎனும் ஒருகணை கந்தன் ஏவிட
நாற்றிசை உயிர்களும் நகமும் எண்திசைக்
கூற்றினைப் பரித்திடும் குஞ்ச ரங்களும்
ஆற்றிடா வணம்சுழல் ஆழி ஒத்ததவே 378

பன்னக வாளியைப் பால சித்தனும்
அந்நிலை தனில்சொரிந்து அதனை நீக்கிட
வன்னியாம் பத்திரம் வள்ளல் ஏவினான்
இந்நில உயிர்எலாம் எரியச் சென்றதே 379

அம்பெனும் அம்பினை அவன்வி டுத்தமல்
வெம்பினை அகற்றினன் வெகுண்டு பின்னரும்
எம்பிரான் மோகனாத் திரத்தை ஏந்தியே
உம்பரும் வெருஉற உடன்று விட்டனன் 380

சித்தனும் ஞானமாம் திறல்கொள் வாளியால்
செற்றன அறுமுகன் செயிர்த்து நோக்கியே
வெற்றிகொள் மடங்கலாம் விசிகம் விட்டனன்
மற்றுஅதைச் சரபமாம் வண்டின் மாற்றினான் 381

இந்நிலை அறுமுகன் ஏவும் வெம்சரம்
தன்னைஅக் கணத்திடைச் சார்த ராமலே
அன்னசித் தாதிபன் அகற்றும் காலையில்
என்னைஆள் உடையவன் ஈது செய்குவான் 382



ஒவ்வொரு பாணம் அதுஉன்னி உன்னியே
இவ்வயின் இவன்மிசை எறிதல் தீதினிப்
பவ்வநீர் அருந்திய பயோத ரம்என
வெவ்விய ஆசுகம் விடுது மால்என 383

**வேறு**

ஆதவன்கணை இந்துவின்கணை அண்டர் தம்கணை கொண்டநேர்
மாதவன்கணை சீதம்ஏவிய வருணன் ஒண்கணை இவைஎலாம்
நாதன்எங்களை ஆளவந்திடு நாயகன் கதிர் வேலவன்
தீதில்சித்தன துடலைமூடுபு சிந்தினான்வினை சிந்தினான் 384

இந்தவாளிகள் யாவையும் மாமழை என்னமெய்யில் எங்கணும்
வந்துஅடர்ந்திடும் வேளையில்செயன் மாறிவெந்துயர் எய்தியே
பந்திகழுந்திடும் அந்தனத்துஎழில் பரவுதாயர்கள் இருவரைச்
சிந்தையங் கமலத்து இருத்துபு செய்தனன் துதிசெய்தவன் 385

**வேறு**

தெள்ளியமெய்ப் போதமுடன் பாலசித்தன் சிந்திக்கும்தன் மையினைத் தெரிந்து அன்பாக
வள்ளிதெய்வயானைதிருப்பேர்தாங்கிவந்துஅருளும்கோதையர்கண்மழைபோல்தாவும்
ஒள்ளிய நற்கணைகள்எலாம் கணநேரத்தில் ஒப்பறுதம் சத்தியினால் ஒதுக்கிஅந்த
வள்ளல்அறு முகன்மிகவும் சோபம்கூர வருத்தினார் அவர்கள்அன்றி மறுப் பரியாரே

தான்விடுத்த வாளிஎலாம் புலப்படாமல் தணந்ததும் அக்கணைகளினால் தனக்குஊடாக
வந்துஉக்கும்சுபந்தனத்தின் மிசைபெநின்று மழைபோலும் தொடைசொரியும் மாதவத்தோன்
ஊன்அடுத்த மெய்யினுக்கோர் நவைஇலாது மும்பர்குழாமம் பரத்தில் ஒளிவேற்குகந்தல்
ஏன்அடுத்தது இவ்வணம்என்று உரைக்கும்சொல்லும்எந்தை அறிந்தான்சினந்தால்எழுந்ததம்மா

அலைகடல்எலாம் சிவக்க அவுணமாதர் ஆரமுலைத் தடம்சிவக்க அண்டத்துஎங்கு
மலைமதிவாளுடு வளியும் சிவக்கச் சூரன் மனதில் வயிரம்சிவக்க வடிவேல்ஏவும்
தலைமைஉளோன்என்றும் சிவக்கும்பாத சரோருகத்தை அடியேன்தன் தலைசிவக்க
நிலைமையின் வைத்தோன் அறுமுகம்சிவக்க நெறிஅருள் ஈராறு கண்ணும் சிவந்த அன்றே

ஆதவன்ஈதுஎது விபரீதம் என்ன அவன்உறை மண்டலத்துஇடை நின்று அப்பால்ஏற
மாதவன்வேதன் மகவான் அண்டவாணர் வளர்பதத்தின் நின்றுஅப்பால் வருந்திஏறத்
தீதுஅகன்ற அன்பர்துதி செவியில்ஏறத் தினமும்அவர் இதயசிங்கா தனத்தில்ஏறும்
ஏதம்இலான் புருவம்எனும் சிலைஇரண்டும் இரும்குளத்தில வரும்சலத்தால் ஏறநின்றே

மதிதவழும் சடைமுடியான் வனத்தில்வாழு மான்தழுவும் கரதலத்தான் வாமம்தன்னில்
அதிகவிருப்பொடு தழுவும் பிராட்டி முன்னம் அரும்பாலன்னைத் தழுவி அணைத்து முத்தம்
புதியநறும் கமலச்செவ் வாயில்தந்து பொருதசுரர் குலமுழுதும் பொடிப்பாய் என்று
நிதியெனமுன்பு அருள்சத்தி வேலைக் கையால் நின்று தழுவிப் பூசைநியதி ஆற்றி

**வேறு**

அயிலைத்தரும்உமைஅஞ்சிட அளுக்குஇடம்அதனைத்தரும்அநும்அஞ்சிட அருக்குஇடமாம்
வெயிலைத்தருகயிலைக்கிரிமிகஅஞ்சிட அதனுக்கிடம்எனும்இத்தரணியும்அஞ்சிடவே
பயிலப்பணமும்அஞ்சிட நிலைபெற்றிடும்இபம்எட்டொடுபடம்உற்றிடும்அரவுஅஞ்சிடவே
கயிலைத்துறவர்கள்அஞ்சிட அலைஅஞ்சிட அதனுள்உறைதருபுத்து அரவுஅனல்அஞ்சிடவே

எச்சத்தியும் இதனினுக்கு எதிரிலை அற்றிடும்என அற்புதம் எய்திக் குருபரன் விட்டிடவே
அச்சத்தனது உளம்உட்கிட அனல்சக்கியயின்முற்றவும் அடுதற்குஎதிர் அமைத்து இடையே
கச்சுக் கிழிபட உற்றுஎதிர் வெற்பைக் குனிதரு வித்தைகள் கற்றுஒப்பறு தனவித்தகியார்
பச்சைப் பரிமளம் மொய்த்துமர் பத்மப் பதமலர் கட்கொடு பத்தித் துதிசெய்து ற்றனால்

**வேறு**

திரைவேலைப் புனல்முழுதும் கொதித்திட அண்டத் தலைவர் சித்தம்எல்லாம்
கரைகாணாத் துயர்வேலை மடுத்திடச்சித் தன்புரியும் கடும்போர்வேலை
உரைவேலை உணர்வுஅடங்கப் படர்வேலை உயர்தவமே உருவமாகிப்
பெருவேலை தனில்வந்தோன் பிடித்தனைமார் திருமுன்னர் பிறங்கவைத்தான்

வள்ளிதெய்வ யானைஎனும் மங்கைநல்லார் இருவர்களும் மகிழ்ச்சி கூர்ந்தே
ஒள்ளிய வேலைக்கரத்தில் பற்றினராய் அங்கிருப்ப உம்பர் ஏத்தும்
வள்ளல் இஃது என்று எண்ணைஇறும்பூது எனத் தன்உள்ளம் அதில் வருந்திச் சோர்வுற்று
எள்ளல்இலாக் கணங்கள்தமை எய்தநினைத்தான் அவையும் எதிர்ந்ததம்மா

நின்றகணமும் நோக்கி இச்சித்தனோடுஅமரை நீவிர்செய்ம்மின்
என்றலும் அங்குஅவை பணிந்து வடிவாள் சூலம்பலகை எழுமுன்னாக
ஒன்றியநற் படைக்கலங்களால் அமர்செய் திடும்காலை உவந்துசித்தன்
நன்றுஇது வென்று அதிசயித்துச் செங்கலிங்கம் தனைஉதறி நாட்டம் வைத்தான்

அக்காவித் துகிலிடைநின்று அனந்தமாய்ச் சிவகணங்கள் அடர்ந்துமேவி
முக்காலமும் தெரியும் செவ்வேடன் கணங்கள்தமை முட்டி தன்னால்
தக்காமற் புடைத்துஅகலத் துரத்தியபின் அத்துகிலின் தலைவந்து எய்தும்
பக்குவமது அறிந்துஇந்த மாயம்அது என்னோஎன்று பரிவுகூர்ந்தே 396

அண்டம்எலாம் தனதுஅருளால் கண்டுஅளிக்கும் பூரணியை அத்தன்பாகம்
கொண்டகலாத் தவக்கொடியை ஆனந்த வல்லிஎனும் கோமளத்தை
வண்டார் பூங்குழலாளை அருந்தாத முலையாளை அறியேன் முன்னம்
தண்டாமல் வருவாளை எனதுஇதய கமலம்எனும் தவிசினாளை 397

கண்ணடங்காத் திருஉருவைக் கண்டிமயன் கனிந்துஉருகும் கன்னிதன்னை
நண்ணும் அடியார் கடம்அது எண்ணம்எலாம் கைகூட்டு நாயகத்தை
அண்ணல்உள இருப்புஅகலாது அடிக்கடி நாடற்குஎழில் செய்தமரும் பெண்ணைப்
பண்அகலா மொழியாளைப் பார்ப்பதியைச் சிலம்பு அணியும் பாதத்தாளை



மஞ்சாரும் பொழில்அடரும் திருக்கைலை மலையில்என்றும் வாழ்வாள்தன்னை
நெஞ்சார நினைப்போர்கள் அஞ்சாமல் எதிர்நிற்கும் நிமலிதன்னை
அஞ்ஞானம் ஒழித்தருளும் அருள்விளக்கை ஆகமத்தின் அங்கத்தாளை
மெய்ஞ்ஞான வித்தகியை வேதாந்தத்து உள்ளிருக்கும் விமலிதன்னை 398

பலசமயம்தொறும் விளங்கும்ஒரு முதல்விஎன்னும் எழில்பசும் பூங்கொம்பை
அலகில் சாராசம் அனைத்தும் உதவியும் கன்னிப் பருவம் ஆயினாளைக்
கலைமகளும் மலர்மகளும் நாள்தோறும் புகழ்ந்துஅமையாக் காட்சியாளை
உலகில் எனக்குஉயிர்த் துணையாய் நின்றாளைச் சிவயோகத்து ஒளிரும்பொன்னை

தலைஅளித்து அங்குஅருமையுடன் முத்தம்இட்டு வளர்த்தெடுக்கும் தாயைத் தன்னுள்
நினைவின்இடைப் பணிந்துஏத்தி இச்சித்தன் சாலம்எலாம் நீக்கிஎன்றன்
மனைவியரைத் தருதிஎன வருந்தினன்அவ் வேளையில்ம நோன்மனித்தாய்
தனையனுக்கு உள்இரங்கி வந்துதழுவி முத்தமிட்டுமடி தன்னில் வைத்தே

கண்ணேஎன் கண்மணியே கந்தன்எனும் காதலனே கடம்பு உலாவும்
தண்ணம்அரும்புய சயிலத்தனிக் குருந்தே இனிவருந்தேல் தவத்தான் மிக்கோன்
திண்ணியன்அச் சித்தன்எனும் சங்குகன்னப் பெயரினான் செயலெலாம்நின்
பண்ணியலும் மொழிவள்ளி தெய்வானை எனும்மடவார் பரிசுஎன்றுஆராய்

உனதுஇளம் கோதையர்களை இன்னும்சில வேளையில்கண்டு அங்குஉவந்திருப்பாய்
துனிஅகலக் கடவாய்என்று உடல்முழுதும் தைவந்தஞ் சொலித்திருக்கும்
இனிமைஉள மணம்உலவும் பொற்கமல மாலைதனை ஈந்துஇன்புஓதி
அனையாகி அருளாகி எனையாளும் பெருமாட்டி அகன்றாள் அன்றே 402

**வேறு**

உமையாளித் திறம்அருளி அகன்றதன் பின்உயர் குமரன் மனத்திடை உவகையாட
இமையோர் மாமுனிவர் அரகர என்றாட எவ்வுலகும் களிதுளும்ப இருகாதாடும்
அமையாநின்று ஒளிவிடு குண்டலங்கள் ஆடவளி முரன்றுஆடும் சுடப்பந்தாரும் ஆடத்
தமைவழுத்தும் அன்பர்லாம்துதிசெய்துஆடத்தன்மடவார்விளையாடும்தலத்தை நேர்ந்தி

அம்மைதருமலர்ச்சரத்தைமுடித்தோம்இன்றேஅரியசித்தன்விடும்சரங்கள்அனைத்தும்ஒன்றாய்
வெம்மையுடன்முடித்துவள்ளிதெய்வயானைமெல்லியர்தம்உளமனையும்முடிப்பாம்என்றே
எம்மனதில் கலிப்பு உளயாவையும் முடித்தே இருவினையும் அறமுடிக்கும் சாமிநாதன்
செம்மையொடு ஆசாயநெறியில் சேதிச் செழுங்கதிரோன் எனஉலவித் திகழ்ந்தானன்றே

**வேறு**

திருமுடி தனில்மணி முடிஒருகோடி தினகரர்என ஒளிசெய் அகன்மார்பில்
பருநவமணிமயம் உலவியஆரம் பரிதிகளொரு சதமிலகியது என்னக்
கரமதில் எழில்பெறும் ஆழிஉலாவும் கடல்இடை உதயமது உறுமதிஎன்னப்
பரிபுரமணிமணம் மருவியபாதம் பவம்அறவரும் எழிலிமக ரன்னவே

தனுவொடு வருசர வணன்பிராமந் தனைமிகு தவநெறி நிலையமர் சித்தன்
கனிவுடன் திருவிழி அமுதெனநாடிக் கடிதினில் அரிவையர் முகமதை நோக்கி
முனமுறும் ஒருபதி அறுமுகன்எனவே மொழிவது நிதமும் திடம்வருவடிவேல்
அணைவனதுநிலை அசும்அது நினைமின் அடியவன் எணைம்இஃது என்ன அறைந்தான்

தாயர்கள்அலஎன மேனிலைவாயில் தலையர்அணங்கடி தலைகொடு நிற்பச்
சேயவனம் உளமிகல் மருவிடஇந்தச் சித்தனை நிலைபெயரச் செய்தலாமல்
போய்அவர் மாளிகையுறல் அரிதென்னப் புதுமலர்மழை அமரர்கள் சொரிதரஒண்
சாயமதி டையொரு கோடியதென்னக் கணைமழை உறைபல மேவினனம்மா

இந்நிலையே அவன்ஏவிய பாணம் ஏகுமுனேமட மாதர்கள் பால்சென்று
என்னை அளித்திடும் அன்னையரே இங்குஎய்திய மன்னவன் இந்நிலமாறா
உன்னதவும்பரி னின்றனனாக ஒளிவிடு கணைசொரி கின்றனன் அதனால்
அன்னிலை கண்டுஅமர் செய்திடுமாறு நான்அறியேன் எனைஆளுக என்றான்

இத்தகை யாவுயர் சித்தன்உரைப்ப வேதமிலாது ஒளிர்பாதுகை ஒன்றை
அத்திறல் சித்தன் மனத்தில் வியப்ப அளித்து இதனில்பத மண்ணியகாலை
வித்தகம்மிக்கு எதிர்வானைஅடுத்தே வீறொடு போர்புரிவாய் எனலோடும்
சித்தன் அவ்வண்ணம் இயற்றுவன் என்றே சேதனமோடு அமர் பாதுகைஏறி

அந்தரமேசமரம் புரிவானை அண்டியனோன் எதிர்வன்படை ஏவ
நொந்திலன்ஆகியும் வெஞ்சினம்உற்றேநொடியில்உன்ஆவியை விண்டிடுவோன்என்று
உந்தினன் அம்புகள் பைம்புயல்என்ன வும்பரிதேமடி என்றுஉரை யாடச்
சிந்தினன் ஆழ்கடலும் தணலாகச் செந்தமிழ் மாலைகொள் கந்தன்அடர்ந்தே

**வேறு**

அக்கணம் சித்தனும் அஞ்சல் இன்றியே
தொக்கபல் கணைகளால் துணித்தல் கண்டுஉளம்
மிக்கவெம் சினங்கொளா வேலன் தன்இரு
கைக்களின் இறுக்கினன் உடலம் கன்றவே 411

பற்றினன் கரங்களால் பாரில் வீழ்தரக்
குற்றினன் சித்தனும் குப்புற்றே விழுந்து
எற்றினன் ஆவிஅன் னவனை இவ்வணம்
முற்றவும் மற்சமர் முயன்றிட்டார் அரோ 412

சிங்கமும் சிங்கமும் சீறிற்றோ எனப்
பொங்குஉறும் புலியுடன் புலிஉடன்று என
வெங்கயத்து உடன்ஒரு வேழம் ஏற்றுஎதிர்
தங்கிய நிலைஎனச் சமர்பு ரிந்தனர் 413



மலையொடு போர்செயும் மலைஅது என்னவும்
அலையொடு போர்செயும் அலைஅது என்னவும்
தலையுடன் தலையது தாக்கவே இடித்து
உலைவிலாத் தொனிஎடுத்து உருமினார் அரோ 414

சித்தன்இவ் வாறுநம் சேயுடன் பொர
மெத்தவும் சினத்தொடு வேல்உடைப் பிரான்
குத்தினன் உரத்தினில் குழைந்து நெக்குஉகக்
கைத்திறத் தான்முகில் கான்ற வேறுஎன 415

அன்புஎலாம் திரண்டுஒரு வடிவம் ஆயினோன்
என்பலாம் நைந்திட இயல் தவத்தினான்
துன்பிலாச் சித்தனும் சோபம் எய்தினான்
இன்புறு காலம்வந் திறுத்த தாலரோ 416

வேறு

நந்தாஒளிர்வேல் கரவேளும் நமது சித்தப் பெருமானும்
முந்துபடை கொண்டு அமரும்சமரம் உஞற்றி விளைந்த பரிசுஉரைத்தாம்
எந்தையாம் அவ்வேள் சித்தற்கு இரங்கியருள்தந் ததுமலர்ப்பூங்
கொந்துஆர்கோதை யரைவிழைவு கூரக் கண்ணுற் றதுமுறைப்பாம் 417

யுத்தச்சருக்கம் முற்றிற்று







## வசனம்

முனிவர்களே, அன்புடன் வழிபடும் அடியார்களது இருதயம் என்னும் பருவதத்தின்மீது அவர்களது அஞ்சலி குவிக்கும் கைகளாகிய காந்தண்மலர்கள் தோன்ற ஆனந்தமழை பெய்கின்ற அருள்மேகமாகிய நமது குமரக்கடவுள் மாலைப்பொழுதில் மயிலமலை முகட்டில் இவர்ந்து செல்லும் தருணம் வள்ளிதெய்வானையம்மை வசிக்கும் திருமளிகையை நோக்கினர். இந்த மாளிகையினிடத்து நமது உயிர்த்துணையாகிய தேவிமார்கள் இருப்பார்கள்ளனத் திருவுளம்கொண்டு அவர்களைக் காணவிரும்பி ஓர் அரசன் வடிவம் கொண்டு நவரத்தின கேயூர மகுடமதாணி முதலிய ஆபரணங்கள் ஒளிவீச, வில், அம்பு, வாள் முதலிய ஆயுதங்கள் ஏந்தி மலையின்மீது சென்றார். திருமாளிகையின் அருகுமுருகன் வரும்போது பாலசித்தர் சிவபிரான் சாபத்தால் முருகன்என்று உணராது இவன் ஏன் இங்கு வருகின்றான், இவன் யாவன், மன்மதனோ, தேவகந்தர்வனோ, மாயை வடிவினனோ என்றுஎண்ணி திருவாசலில் நின்று கொண்டு 'இங்கு நுழையாதே நில்' எனத் தடுத்தனர். சித்தர் இவ்வாறு தடுத்துக்கூறி, சிவன் முதலிய மூவரேனும் இங்கு நுழையாமல் யான் காக்கக் கடவேன். சித்த கன்னியர் இங்கு வசிக்கின்றனர். உன்னைப் பார்க்கும்போது அரசன் போல் இருக்கின்றனை. உன்னோடு யுத்தம் செய்பவர் யாரும் இலர் என்று கூற முருகன் விரகமிகுதியால் மாளிகையுள் செல்லத் தொடங்கினார். அதுகண்ட சித்தர் விரைந்து உட்சென்று தாய்மாரைக் கருதலும், அவர்கள் முன்வந்து அநுக்கிரகித்து, நீ மனக்கிலேசம் நீங்கி உன்எதிர் வந்த அரசனோடு போர்புரிவாய், யாம் உன்பக்கம் இருப்போம் என்று அஸ்த்ரசஸ்த்ரங்கள் அனைத்தும் உதவி, இரதம் ஒன்றும் அமைத்துக் கொடுத்தார்கள். அதைப் பெற்றுச் செல்லும் சித்தரை முருகப் பெருமான் மிகுந்த கோபத்துடன் நோக்கி ஓர் இரதத்தை உண்டாக்கி அதன்மீது ஆரோகணித்துக் கொண்டு இருவரும் போர் செய்தனர். அந்த யுத்தத்தைக் கண்டு பிரமன், விட்டுணு, இந்திரன், தேவர்கள், அசுரர்கள் முதலியோர் மனம் பிரம்மித்தார்கள். இவ்வாறு அனந்தவகையான பாணங்களால் யுத்தம் செய்ய முடிவில், முருகப் பெருமான் சூரியாஸ்த்ரம், சந்திராஸ்த்ரம், தேவாஸ்த்ரம், நாராயணாஸ்திரம், வருணாஸ்த்ரம் முதலிய மந்த்ராஸ்த்ரங்களைச் சித்தர்மேனி முழுவதும் தைக்க ஏவினார். அப்போது சித்தர் சோர்ந்து தாய்மார்களைக் கருதித் துதித்தார். உடனே அந்தத் தாய்மார்கள் சித்தர்மீது இருந்த அம்புகளை விலக்கித் தெளிவித்து முருகன் சோகம் அடையும்படி செய்தனர். சிறிதுநேரத்தில் அச்சோகம் தெளிந்து கோபம் பெருகித் தனது தாயாகிய அம்பிகையால் கொடுக்கப் பெற்ற வேலாயுதத்தைப் பூசித்துச் சகல



புவனங்களும் அஞ்சும்படி முருகப்பெருமான் ஏவ, அவ்வேலானது பாலசித்தர்மீது அக்கினிச் சுவாலையாய்ச் செல்லும் தருணம் வள்ளி குஞ் சரி என்னும் இருவருடைய தாமரையொத்த திருவடிகளை அன்போடு சிந்தித்துத் துதித்தனர். அதுசமயம் பாலசித்தரானவர் முருகப்பெருமானது சமத்துவத் தன்மையடைந்து வேலாயுதத்தைத் தமது கரத்தால் பிடித்துத் தனது தாய்மார்கள் திருமுன்பு வைத்தனர்.

அந்த வேலாயுதத்தை வள்ளி குஞ்சரி என்பார் இருவரும் கரத்தில் ஏந்தி இருந்தனர். அதுகண்டு முருகன் மனம் வருந்தித் தமது கணங்களை நினைக்க, அவை வந்து தலைவன் குறிப்பின்படி சித்தரிடம் போரியற்ற அதுகண்ட சித்தர் தமது கல்லாடையை எடுத்து உதறினார். அதினின்றும் அநந்த சிவகணங்கள் தோன்றி முருகனது கணங்களைப் புறங்காணத் துரத்தின. அதுகண்டு குமாரக் கடவுள் தனது அன்னையாகிய பார்வதியை நினைத்து வணங்க, அவள்தோன்றி முருகனை மடிமேல் வைத்து முத்தம்அளித்து குழந்தாய் நீ வருந்தாதே. அந்தச் சித்தன் சங்குகன்னன் ஆவான். அவன் செயலெல்லாம் வள்ளிதெய்வயானை என்னும் இருவரது பலமேயாகும். இன்னும் சிலநேரத்தில் உனது தேவிமார்களைக் கண்டு துன்பம் நீங்கி இன்பம் அடையக் கடவாய் என ஓதிப் பூமாலை ஒன்று அருளி அந்தர்த்தமாயினள்.

உமையவள் இவ்வாறு கூறி மறைந்தபின் குமாரக்கடவுள் மனக்களிப்படைந்து தனது தேவிமார் விளையாடும் இடத்தை நோக்கி, நமது தாய்கொடுத்த மாலையை முடித்தோம். இந்தச் சித்தனது யுத்தத்தை முடித்து, நமது தேவிமார்களது ஊடலையும் முடிப்போம், என நினைத்து ஆகாயத்தில் எழுந்து ஒளிவடிவான தமது தெய்விக வடிவத்தைக் காட்ட, கண்ட சித்தர் மனம் மகிழ்ந்து தாய்மார் முகத்தை நோக்கி, முன்புவந்து போர் இயற்றியவர் நமது அறுமுகக் கடவுளே ஆவர். உம்மிடம் உள்ள வடிவேல் அவரது ஞான சத்தியேயாகும். இது கருதுமின் என்றனர். அதுகேட்ட தாய்மார் மேல்நிலை வாயிலினின்று பார்க்க, அது கண்ட முருகன் அதிவீரத்துடன் இந்தச் சித்தனை நிலைபெயர்த்து அல்லது உட்புக முடியாது என்று எண்ணிப் பல்லா-யிரம் பாணம் தூர்த்தனர். அவர்ஏவிய பாணம் தம்மிடம் வருமுன் சித்தர் தாய்மாரிடம் அடைந்து இங்கு வந்த மன்னவன் அந்தரமாய் நிற்கின்றான். என்மீது அநந்த பாணம் பொழிகின்றான். அவனோடு போர் இயற்ற யான் அறியேன். என்னை ஆண்டு அருள்க என்றலும் ஒர் பாதுகை அளித்து இதனில் காலூன்றியவுடன் அந்தரமாய் நிற்கும் திறமை பெற்று அவனோடு போர்இயற்றுவாய் என்றனர். அவ்வாறு சென்று பொருதனர். ஆயுத யுத்தமும் பின் மல்யுத்தமும் புரிந்தஇடத்து முருகனது திறத்தில் சித்தரது திறம் குறைந்து மூர்ச்சித்து நின்றார்.

## ஏழாவது
## அருள்புரிந்த சருக்கம்

மாயையரவைத் தொலைப்ப மயில்இருப்ப வினையா மாத்திரைகள்
தாயசனனக் கடல்வறப்பச் சத்தியிருப்ப வரும்துயரம்
ஏயஇடத்துஎன்று எனக்குஅருள வேண்டவோஎன்று உம்பர்தொழும்
சேயைநோக்கிக் கேட்பதுஎவன் என்றுதெளியாய் இன்னும் மடநெஞ்சே

**வேறு**

சண்முகவன் பாலசித்தனொடு விளையாட்டாக வரும்சமர் விளைத்த
புண்ணிய மாக்கதை மொழியக் கேட்டனமேல் விளைந்து அமையும் புகலக்கேட்கு
எண்ணம் உடையேம் அவ்வாறு இசைத்துஅருள்க எனக்சூதன் இளையோன்தாளை
உண்ணிநினைந்து சவுனகாதிய முனிவர் தமக்குஅங்ஙன் உரைக்கல் உற்றான்

**வேறு**

பாயுமால் விடைப்பரன் பணித்த வாறுநம்
சேயினஒண் கரமலர் தீண்டும் பெற்றியால்
ஆயசோ பம்கடிது அகன்று சித்தன்முன்
ஏயபேர் அறிவுவந்து எய்த உன்னுவான் 420

தாரகம் செவிஇடைச் சங்கரற்குஅருள்
ஏரகன் ஏயமர் இயற்றும் ஏந்தல்இப்
பாரகத்து இவனை ஒப்பார்கள் இல்லைஎன்று
ஓரகத்தினன் பணிந்து உவகை மேவியே 421

குருபரன் அருள்விழி குலவும் ஆற்றினால்
உருவம் எல்லாம் புளகுஉற்று மெய்ம்மறந்து
இருவிழியும் துளிஇறைப்பச் சென்னிமேல்
கரமலர் முகிழ்த்து உளம்கனிந்து போற்றுவான் 422

**வேறு**

நதிசூடிய சடிலன் தருநாதா மலர்ப்பாதா
முதியோர் உளம்அகலாது ஒளிர்முழு மாமணி ஒளியே
விதியின்திறம் அறியாதுஉழல் வினையேன்ஒரு பொருளோ
கதிர்வே லவன்எனை ஆளுதி கருணாகர சரணம் 423

மகமாயையை நிலைஎன்றுஉனி வருந்தும் மிகுசிறியேன்
புகல்என்பது நின்றாள்எனும் போதம்பிற வாமல்
இகல்கொண்டு உனைஎதிர் நின்றுஅமர் இயற்றும் பிழைஉடை[illegible]
மிகைநீங்குதற்கு அருள்செய்குவ வேலாயுத சரணம் [illegible]



சுத்தன்சிவ முத்தன்தவ சொருபன்கனல் உருவன்
அத்தன்மறை முடிமேவிய ஐயானனன் அருளும்
சத்தேமுழு முத்தே அருள்தாயே இளம்சேயே
நத்தாதுஉனை நலிசெய்ததை நாடாதுஅருள் சரணம் 425

பொல்லேன்நினைப் புகழேன்தவம் பூணேன்துதி பேணேன்
கல்லேன்கலை நில்லேன்நெறி கடையேன் மடம்உடையேன்
வல்லேன்என நின்னோடு அமர்மாறாது இயன்றேனை
ஒல்லான்என இகழாதருள் உமைபாலநின் சரணம் 426

அலையும் உயர்மலையும் நிலையும்படி அயிலான்
மலையும் தலைமையன் அசுரர் வருடுங்கழ லவனே
புலம்என்பதொரு அணுவும் தெரியாமல் பொருதேயான்
அலைகின்றனன் நிலையாவது இவண் அறுமாமுக சரணம் 427

ஒருமாமலர் ஒருமென்தளிர் ஒருகையு தகம்கொண்டு
அருமாமறை நெறியால் அருச்சனைசெய்திட அறியேன்
குருவேதனி முதலேகுணக் குன்றேஉனை இன்றே
பரிவாய் அடைந்தனன் ஆண்டுஅருள் பரனேஅருள் சரணம் 428

இசையேபயில் அளியின்திர ள்இவருங்கடம் பணியும்
திசைதாவிய புயனேவள்ளி தெய்வானை மணாளா
வசையேநினை குவதன்றிநின் மருமாமலர் அடியை
அசையா மனதொடு போற்றிலன் அத்தாஅருள் சரணம் 429

ஒளியே பரவெளியே சகத்துஉருவே மலர் மருவே
எளியேன் இனிஉய்யும் திறம் ஏதும்அறி கில்லேன்
துளியேபயில் மதுவார்பொழில் சுலவுங்கிரி யாவும்
தளியாய்உறை தருவேலவ தயவாய்அருள் சரணம் 430

மயில்ஏறிய மணியேஒளிர் மதிஏறிய மகிழ்வே
அயில்ஏறிய கரனேதிரு அருள்ஏறிய பரனே
வெயில்ஏறிய கதிர்மேனிய விரிதெண்டிரை அரவில்
துயிலேறினன் மருகாசரண் சுகமேஅருள் என்னா 431

**வேறு**

அஞ்சலி செய்தனன் அடிபணிந் தனன்
செஞ்சொலால் துதித்தனன் செப்புவான் கடன்
அஞ்சணி மிடற்றினன் அல்கு சாபமது
எஞ்சிடத் தீர்த்த அருள்என்ன வேண்டினன் 432

இத்திறத் துதிபுரிந்து இறைஞ்சும் பாலனாம்
சித்தனை அறுமுகத் தேவன் நோக்கிநின்
துத்திய மகிழ்ந்தனம் தொடர்ந்து நம்மைநீ
நத்திலாது அமர்செய்த நவைபொ றுத்தனம் 433

ஆதலால் இனித்துயர் அனைத்து நீக்கியே
மாதுஒரு பாகன்முன் வகுத்த சாபமாம்
ஏதமும் அகற்றினோம் இரும்தவப் பயன்
போதமோடு உறஅருள் புரிகுவாம் அரோ 434

சிவம்உறு கோடிருத் திரக ணங்களில்
தவம்உறும் ஒருவனாம் தகுதி யோய்மறை
அவம்உறுதலைத் தவிர்த்து அமைப்பக் கண்ணுதன்
நவம்உறும் அளியினால் புவியின் நண்ணினை 435

ஆயமெய்ம் மறைமுறை ஆகமங்களும்
தூயஅருட் சைவமும் தோமில் நல்லற
மேயநன் நெறிகளும் விதித்துப் பூமியில்
பாயநற் சீர்பெறும் பரிசு நல்கியே 436

நம்மொடும் இத்தல நண்ணுவாய் எனச்
செம்மையின் அருளிப்பின் சித்தர் கோனுடன்
கொம்மைசேர் முலைநாள் உறையும் கோயிலின்
எம்மைஆள் அறுமுகன் எய்த எண்ணியே 437

தந்தை என்றுஉனை உமைஉரிமை சாற்றிய
பந்துஎனத் திரண்டுஎழில் பரவுமாநகில்
சுந்தர மாதரைக் காணத் தூய்த்தவ
வந்திடு வாய்என மகிழ்ந்து கூறினான் 438

சாற்றலும் சித்தன்அச் சண்முகன்துணைக்
காற்றிரு மலரினை இறைஞ்சிக் கந்தனிற்கு
ஏற்றவாறு இயற்றுதின் எனஇசைத் தலும்
வேல்கரன் அவற்கொடு மனைக்குள் மேவினான் 439

சங்குகன் னப்பெயர் தாங்கு சித்தனோடு
எங்களை ஆட்கொளும் ஈசன் அந்தவேள்
அங்ஙனம் இருந்துழி அரிவை மார்மகிழ்
பொங்குபு நோக்கிஉள் இன்பம் பூத்தனர் 440

குருபரன் கருத்தினைக் கோதை மார்தமக்கு
உரிமையால் சித்தர்கோன் உரைப்ப அன்னையர்



பரிவுகொள் மனத்தின ராய்ப்பல் பூண்உடை
மருமலர் இவற்றினை வனைந்து இருந்தனர் 441

**வேறு**

காவி நேர்விழி மாதரைக் கந்தவேள்
ஆவலோடுகண் உற்றது அறைந்தனம்
தாவில் வானவர் தம்மொடும் எம்பிரான்
சேவின் ஏறிவந்து உற்றமை செப்புவாம் 442

**அருள்புரிந்த சருக்கம் முற்றிற்று**



### வசனம்

முனிவர்களே, இடபவாகனக் கடவுளாகிய பரமசிவன் அருளிச் செய்தபடி முருகப் பெருமான் திருக்கரத்தால் தீண்டப் பெற்றவுடன் சோகம் நீங்கி உண்மைஅறிவடைந்து பாலசித்தர் ஆனவர் சிவபெருமானுக்குத் தராக உபதேசம் செய்த முருகக் கடவுள் இவ்வாறு போர்புரிவர் என்னில் இவருக்குச் சமம் யாருளர் என்று எண்ணி வியந்து முருகன் திருநோக்கத்தால் உடல் புளகித்து ஆனந்தக் கண்ணீர் துளிக்க, சிரமேற் கரங்குவித்து முருகனைப் பலவாறு துதித்தார்.

உமது திருவடியே உண்மைப்பொருள் என்று உணரும் உணர்ச்சியின்றி ஆணவ மறைப்பால் உம்மிடம் போர் இயற்றிய அடியேனது குற்றத்தை மன்னித்து அருளவேண்டும். ஒருமலரேனும் தளிரேனும் கொண்டு வேதநெறியால் உம்மை அர்ச்சிக்க அறியேன். எனது குருவே, ஒப்பற்ற முதல்வரே, குணக்குன்றே, உம்மை அடைந்த அடியேனைக் காத்தருள வேண்டும். சோலைசூழ்ந்த பல பர்வதங்களையும் அரங்கமாகக் கொண்டு எழுந்தருளி விளங்கும் வேலாயுதக் கடவுளே, அறிவில்ஊறும் ஆனந்த சொரூபியே, எனத் துதித்து வணங்கி நீலகண்டராகிய பரசிவன் திருக்கைலாய மலையில் முன் அடியேனுக்கு இட்ட சாபம் நீங்கும்படியு அநுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்ததார். இவ்வாறு துதிக்கின்ற பாலசித்தரை அறுமுகக் கடவுள் நோக்கி உனது குற்றத்தைப் பொறுத்தோம். ஈசுர சாபத்தையும் நீக்கினோம். தவப்பயனும் உண்மை ஞானமும் உண்டாக அநுக்கிரகிப்போம். உருத்திர கணங்களுட் சிறந்த தகுதியுடைய நீ உலகில் வேதநெறி தழைபிறழ்வதை நிலைநாட்டுமாறு அவதரித்தனை, அத்தகைய தருமத்தை இனிது நிறைவேற்றி இந்த மயூராசலத்தில் என்றும் நம்மோடு வசிக்கக் கடவாய், என்று அநுக்கிரகித்து தேவிமார் வசிக்கும் மாளிகையுள் சித்தர் சகிதம் செல்ல எண்ணி அழைத்தனர். அவ்வாறு இருவருட் உட்சென்றனர்.

இதுகண்ட தாய்மார் இருவரும் மனத்துள் மகிழ்ச்சி பொங்கியிருந்தனர். முருகப் பெருமான் திருவுளக்குறிப்பைச் சித்தர் பெருமான் அறிந்து சித்தகன்னிகை வடிவம்கொண்டுள்ள வள்ளி தெய்வானைக்குத் தெரிவிக்க அவர்கள் உடன்பாடுடையவராய் நவரத்தின ஆபரணபுஷ்பங்களைத் தரித்திருந்தனர்.



## எட்டாவது
## தேவராதியர் வரு சருக்கம்

காளமார்தரும் களத்தினன் கைத்தலக் கழுமுளும் உலகுஎல்லாம்
தாளதாளலந் திடுநெடியோன்கரம் தாங்கும் நேமியும்உள்சேர்
நாளமார் மலர்ஆதனன் தண்டமும் நாணிடத் தகுவப்போர்
தாள்அதுஆக்கிய வேள்கரச்சத்தியைத் தொழுது இடர் தொலைப்பாமே

மாசுதீர்ந்து உயர் நைமிசவனத்திடை வாழும் அந்தணர் எல்லாம்
ஈசனார் மகன்தேவிமார் தமதுஉரு எழில்நலம் கண்ணுற்றே
வாசம்உற்ற நன்மாக் கதைஈதுஎன வகுத்தனை தவச்சூத
தேசுலாவும் மற்றுஅதையும் இங்குஅருள்எனச் செப்புதன் நினைத்தானால்

நாட்டமூன்றுஉடை நம்பிராற்குஓம் பொருள்நவின்று அருள்குரு நாதன்
சூட்டும்மா மயில் பரிஇவர்ந்து உலவுஉறும் தோன்றல்ஆகிய செவ்வேள்
பாட்டளிக்கண முரல்குழல்பாவையர் தம்மையாம் பரிவாக
வேட்டிடும்படி புரிதியால்இனிஎன வித்தகம் உயர்சித்தன் 445

செச்சைஅந்தொடை இலகியமார்பினன் திருவடிக் கமலத்தை
இச்சையால் பணிந்து அப்பணி புரிவல்என்று ஏந்திழையார் தம்மை
உச்சிதம்பெற அழைத்து வந்துஇவர்தமை உலகெலாம் மகிழ்வுஎய்தி
மெச்சிடும்படி மணவினை முடித்துநீ வீற்றிருப்பாய் என்னா 446

மாதர்பால்உறு வைத்தகூர்வேலினை வாங்கிஅச் சித்தன்தன்
காதல்கூர்ந்து எழில் கந்தவேளிடம் தரக் கைகொடு குமரேச
ஆதரத்தொடு வெள்ளியம்கிரிஉறை அத்தன்அங்கு உறவுஉன்ன
ஓதம்மேவிய சடையினான் விடையின் மேல்உமையுடன் வரஎண்ணி 447

பூதியக்கமஐந்து அக்கரம் பொருள்எனப் பொருந்திய கணத்தோரும்
நாதன்தன் உருப்பெறும் உருத்திரர்களும் நண்ணும் அன்புஉளம் மேவி
ஆதிதேவனைச் சாமகானத்தினால் அகமகிழ் தரச்செய்யும்
பூதச்சேனையும் தும்புருநாரதப் புநித யாழிசையோரும் 448

பன்னிரண்டு சூரியர்களும் திங்களும் பரமனுக்கு அன்பாகி
மன்னு மாதவர் எழுவரும் சித்தரும் வசுக்களந்து அரர்சேடி
துன்னுகா.. கந்தருவரும் பிருங்கியாம் துதிபெறு முனிவோனும்
என்னை: ஆள்இறை பணிசெய்கும்போ தரன்என்னும் மெய்ப்புகழோனும்

குடைபிடித்திடும் பூதனும் சரிதையைக் கோதுஅறப் புரிவோரும்
நடைஅகன்றிடாக் கிரியைஆற்றுநர்களும் நவிலும் யோகியரும்தம்
கடமநித்தம்என்று உணரும் ஞானத்தரும் கழறும் மற்றுஎல்லோரும்
புடைபரந்திட அடைந்தனன் மயிலையம் பொற்கிரி தனிநாதன் 450

ஆகுவாகன மீதில்ஆரோகணித்து ஐங்கரன் மூவாங்கத்
தேகவிங்கிதன் தேசுறுவல்லபை சேர்ந்திருக்கும்பாகன்
ஏகதந்தனாம் கரிமுகப் பெருந்தகை என்துணை அவனுக்குஇன்றே
ஒகையாரும் மங்கலம்என அகமகிழ்ந்து உற்றனன்அச் சையிலம் 451

மாயவன்துணைத் தேவியாம்திருவொடும் வளர்சிறைக்கலுழன்மேற்
தூயவின்புபா கவதர்கள் சூழ்ந்து பல்தி நவின்று இருபாலும்
மேயிடக் கதிர்ஆழியே முதல்அடல் வீறும்ஐம்படை மல்கச்
சேயரும்மணச் செய்தியோர் அந்தக்கிரி சேர்ந்தனன் மகிழ்வோடும் 452

மந்தமத்திமம் தாரநற்சுரங்களின் மரபுளியாழ்வல்ல
சந்தனாசல நிகர்முலைப்பாரதி தன்னுடன் வரமேவிச்
சுந்தரத்து வெள்ஓதி மப்பிடர்மிசை தோன்றினான் சதுர்வேதம்
வந்தநான்முகன் மயிலைநற் பெயரினான் மன்னும்அக்கிரி தன்னில் 453

**வேறு**

புலோமிசைப் பெயர் பூண்டிடும்தேவி தன்உடனே
விலோசனங்க ளோர்ஆயிரம் மேனியில் விளங்க
எலாம்அளித்திடும் கற்பக மானினம் இவைகொள்
உலாசமங்கல மகட்குஎன இந்திரன் உற்றான் 454

நிருதி என்பவன் தண்டிகை இவர்ந்துநீ ணிலத்தில்
பொருவரும்புகழ் மயிலைநற் பொருப்பினில் போந்தான்
வருணனும் கராஊர்ந்தனனாக வந்து அமர்ந்தான்
அருணமீதுஅடற் காற்றுஇறை மணங்கள்கொண்டு அடைந்தான் 455

அளகையாளியும் புட்பகமான மீது அரிய
வளம்எலாம் தரும் மாநிதி கொண்டுவந்து அடைந்தான்
உளவிருப்பின் ஈசானனும் மணச்செயல் ஓர்ந்தே
பளகிலா மயிலைக்கிரி அடைந்தனன் பரிவால் 456

வசுக்களைப்பசித் தேவருமாமருத் துவரு
நுசுப்பதில்லை உண்டெனக்கொடி போலவே நுடங்கும்
குசத்தினார்எழில் குலவிய அவரம்பையர் குழுவும்
இசைத்திறத்து நாடகத்துநாம் என்ன எய்தினரால் 457

அகத்தியன் பிருகு அத்திரிகாசிபன் சனகன்
சுகனத்தினால் உயர் சுகன்கௌதமன் சனற்குமாரன்
பகைப்புலன் என்றுஅறு மெய்த்துருவாசன் பராசன்
சகத்துளோர் தொழும் மார்க்கண்டன் பரத்துவானனே 458



வசிட்டன் நற்புலிக் காலன் மாபதஞ்சலி வியாதன்
இசைக்குநற்கலைக் கோட்டன்வான்மீகன் ஏரண்டன்
இசைத்துறும் சதானந்தனின் புலத்தியன் எழில்எண்
திசைக்குளலாம் உயர் பர்ப்பன்ஆங்கிரசன் செப்பும் 459

இவர்களாதிய முனிவர்கள் யாவரும் எழிலாய்
அவரவர்க்குஉறு பன்னியரோடு வந்து அணைந்தார்
புவனவாசிகள் யாவரும் அத்தலம் போந்தார்
கவனம் மிக்குறு தேவர்கண் முற்றவும் கலந்தார் 460

வேறு

ஈசன்மால்அயன் அமரரும்புகல் எண்டிசைக்கு உயர்அதிபரும்
மாசிலாமுனி வோர்களாதிய ஏனையோர்களும் மகிழ்வுடன்
ஆசிலாமயி லைப்பருப்பதம் அண்மிஉற்றது அறைந்தனம்
தேசுலாம்முரு கன்மணப் பரிசைத் தெரிந்திடு வாம்அரோ 461

தேவராதியர் வருசருக்க முற்றிற்று







## வசனம்

முனிவர்களே, அழகிய சூட்டு அமைந்த மயில்வாகனத்தைச் செலுத்துகின்ற குமாரக் கடவுள் பாலசித்தரை நோக்கி வண்டுகள் மொய்க்கின்ற கூந்தல்உள்ள இந்தப் பெண்கள் இருவரையும் யாம் மணந்து கொள்ளும்படி செய்க என்ற அளவில் அச்சித்தர் அம்மகளிரை அழைத்து வந்து எதிருய்த்து உமது திருவுளப்படி வாங்கி அளிக்க முருகன் கொண்டு, தமது தந்தையாகிய பரபாரூடராய் மயிமலைக்கு வரஎண்ணிச் சிவசின்னங்கள் அணிந்த கணநாதர்களும், சாரூப்பிய ருத்ரகணங்களும் பூதசேனைகளும் தூம்புரு நாரத முனிவரும், துவாதச ஆதித்தர்களும் சப்தரிஷிகளும் சித்தர் கணத்தோரும் அஷ்டவசுக்கள், தேவர்கள், கந்தர்வர், பிரீங்கி முனிவர், கும்போதரன், குண்டோதரன், சரியை, கிரியை, யோகம், ஞானம், என்னும் சாதனத் தொண்டர்கள் முதலிய பலரும் புடைசூழ வந்து அடைந்தனர்.

மூஷிக வாகனத்தின்மீது சித்தி, புத்தி, வல்லவை என்னும் தேவிமாருடன் ஐங்கரக் கடவுள் எனது துணைவனுக்கு இன்று மணம்என்று வந்தடைந்தனர். ஸ்ரீநாராயணமூர்த்தி மகாலட்சுமி சகிதம் கருடவாகனத்தின்மீது அநந்த பாகவதர் துதிகூறிவர சங்கு சக்கர முதலிய பஞ்சாயுதங்களை ஏந்தி மயிலாசலம் அடைந்தனர். பிரமதேவர் சரஸ்வதி சகிதம் அன்னவாகனத்தின்மீது அங்கு வந்தனர். இந்திராணி சகிதம் இந்திரனும், அக்கினி, யமன், நிருதி முதலிய திக்குப் பாலர்களும், மருத்துகள், அரம்பையர் முதலியோரும் வந்தனர். அவர்அன்றி அகத்தியர், பிருகு, அத்திரி, காசிபர், சனகர், சுகர், கௌதமர், சனற்குமாரர், துர்வாசர், பராசரர், வியாசர், மார்க்கண்டர், பதஞ்சலி, கலைக்கோட்டார், வான்மீகி, பரத்துவாசர், வியாக்ரபாதர், வசிட்டர், ஏரண்டர், சதாநந்தர், புலத்தியர் முதலிய மகரிஷிகளும் முருகப் பெருமான் திருக்கல்யாண சேவை காண விரும்பி வந்து சேர்ந்தனர்.





## ஒன்பதாவது
## திருமணச் சருக்கம்

பாததாமரையில் நாள்தொறும்பரவும் பாவலர்க்குஅரிய மாவரம்
மாதரத்தினுடனே அளிக்கும் முருகையனைப் பனிருகையனைப்
போதனைச்சிறையின் மேவவைத்துஅருள்செய் போதமெய்ப் படிவநாதனைக்
காதல்கொண்டு பணிவோர்கண் முன்றில்தனில் கற்பகம் பரவிநிற்குமே

**வேறு**

தேவர் உற்றதைச் செப்பிய நற்றவம்
மேவு சூதனை மீண்டும் சவுனகர்
ஆவல் வேள்மணம் ஆற்றும் அருங்கதை
தாவி லாமல் உரைஎனச் சாற்றுவான் 463

**வேறு**

கங்கை எழும்தலை உந்துசெழும்சடிலம் திகழும்கவினும்
மங்கையிடம் கொளும் மங்கலமும் கனல்தங்கு மலர்க்கரமும்
பொங்குசவுந்தர மும்பொலியும்தனை அன்பொடு பூசனைசெய்
துங்கர்அகம் குலவும் பரன்மேயினன் சோதிசெயாதன மேல் 464

மாதவர்ஆகிய நாரதர் தும்புரு மாண்இசை கூறினரால்
சீதரனான்முகனே முதல்ஆகிய தேவர்கள் கூடினரால்
நாதபராபர வேதசுபாகர நாகசிராபரணா
ஆதிநிராமய வாஎனவே அடியார் துதிபாடினரால் 465

எத்திசையும் முத்திக்குஇணையாக இருக்க எழுந்து அருளும்எம்
மத்தனகத்தில் விருப்புடன் உற்றிடும் அத்தனை பேர்களையும்
தத்தம்நல்தகு திக்குஇசைவாகிய சம்ப்ரம நல்கிஉற
உத்தரநல்கி இருத்தி மயன்தனை நோக்கி உரைக்குவனால் 466

நேரறுமன்னவனோடு அறுமாமுகனே விவாகமது
சீர்உறுஇத்தின மாகவிநோத சிகாமணியால் அமரர்
ஊர்எனவேஒளி வீசஇயற்றுதியோ தருகாவணம்என்று
ஆரணிவேணின் ஏவவிதித்தனன் அமரர்கள் கம்மியனே 467

**வேறு**

செம்பவளக்கால்கள் அளப்பிலவாய் அங்குஇலகவும் அத்திகழ்கான் முற்றும்
பம்பும்ஒளிஉறு வயிரப் போதிகையின் பணிவனப்பும் பசியகாந்தி
அம்புவன முற்றும்விடு மரகதப்பாவும் சிலையும் மருங்கபோதம்
உம்பர் உலகினை நகைக்கு மாணிக்கத் திரள்களினால் ஒளிரச் செய்தே

எழுது அயனும் காணாத வாடகத்தால் எழுதகமும் எழினாட்டுக்கல்
பழுதுஅகன்ற வெண்பொன்னால் பாய்ச்சிமிகும் ஒளிஅமைந்த பரட்டுக் கற்கண்
முழுதுஇலகும் இரசிதத்தால் குயிற்றிஒளிர் தளஞ்சோதி மொய்க்கும் பொன்னால்
அழகுமிகப் பொலிந்து இடவத் திருக்கைலை மண்டபம்போல் ஆக்கிப் பின்னும்

நவமணியின் கதிர்க்கோவை இடை இடையின் அமைத்துமதி நகுவெண்முகத்தின்
திவள்ஒளி துன்னியபடங்கு சித்திர விதானமும் மேல்திகழத் தூக்கி
இவர்கதிர்ப் பன்மணிகுயின்ற சித்திரங்கள் விசித்திரமாய் இலங்கத் தீட்டிக்
கவையியல் பல்பூஞ்செடிகண் மலர்க்கொடிகள் பன்மணியால் கவினச்செய்தே

மேல்விளங்கு பொற்படத்தில் கிளிமயில்தாராவனங்கள் வீணைவல்லோர்
தோல்விஇலாமல் வீரர்நடம் புரியும்அரம்பையர்கள் துலங்கத் தீட்டி
மால்விளங்கும் சுந்தரவிநோத ஓவியங்கண்மயல் வழங்கக் கோட்டி
கோல்விரைப் பூந்தளிர் இலைகாய் கனிமரங்கள் பன்மணியால் குலவநாட்டி

காழ்இலங்குமரகதப்பா சிலைபவளக் கனிக்குலைவெண் கனகத்து அண்ட
வாழைகளை வாயில்தொறும் முகப்பின்ஒளிர் தூண்களுடன் வயங்க நாட்டிக்
கோழையரை விரசிதத்தாள் மரகதப்பைந்தோகை துகிர்க் குலைக்காய்பூகம்
மாழை முதலிய காட்டி மகரதோரணநிரைகள் வகுத்துப் பூட்டி 473

கனிக்குலைகள் பூம்பாளை வகைதூக்கிப் பலமலர்சேர் கடித்தார் தூக்கித்
தனிக்கதலிக் கிடையிடையே தமநியப் பூரணகும்பம் தயங்க வைத்துப்
பனித்துளி மென்மதுப்பாளை தலைவிரிய அவற்றின் மணம்பரவச் சேர்த்தி
நனிக்கிரண மணித்தவிசு மாதனமும்பீடிகையும் நலத்தமைத்தே 474

இன்னனம்பல் வளம்புனைந்து தெய்வமணக் காவணத்தை இலங்கயாரும்
பன்னுகடவுளர்சபையை மிகச்சிறப்ப அலங்கரித்துப் பரமனேவாற்
கொல்நுனை வேல்கரக்குமரன் கோமளச் செம்மேனிஎழில் கொழுந்தன் மாந்தி
மன்இமயன் மதர்த்துலவு அளிவிழியார் இருவர் மணமனை செய்வானால்

கால்எல்லாம் நாற்காலக் காலனந்தங் கால்ஊன்றக் கவினும்அந்த
மால்எல்லாம் இந்திரனே மனமகிழ்வான் எனும்பிரவாளத்தின் காலா
மேல்எல்லாம் நவமணியின் கசிதமதன்கீழ் எல்லாம் விளங்கும் பச்சைப்
பால்எல்லாம் மரகத மாணிக்கத்தால் பீடம்இன்னப் படைத்திட்டானே

அத்திருமா மணஅறையை நாடினவர்க்கு தரவனல் அழுங்கல் என்று
மொய்த்தமிடியரும் பழிமா பாவமெலாம் திருநீற்றை முழு மெய்யும்கொள்
அத்தகுதியோர்க்கு உற்ற நவையகன்றால் எனஅவலும் அதன்சீர்சாற்ற
நத்துமயன் இந்திரன் மாமுனிவர் வலியிலர் என்றால்நான் என்சொல்கேன்

மந்தமாருதம் உறும்பூம் பந்தம்அருப் பந்தல்தொறும் வரிதேர்வண்டர்
சந்தஇசை முரன்றுஎழுந்து ஆடிடக் குலவுமணிப் பொழிலின் தருக்கள் எங்கும்



வந்துகளிமட வனங்கள் அஞ்சியறைய கிஞ்சுங்கண் மயில்கள் இன்ன
விந்தைவிந்தையுடன் கதியால் கிளவியினால் நடனத்தால் வேட்கையூட்ட

இருகாவதம் கமழும் ஏழிலைப் பாலைச்சரளம் இதழிமுல்லை
மருவார மல்லிகை மந்தாரம் மருக்கொழுந்து நறுஞ்செவந்தி மன்றல்
உருவாகுங் கமலநறும் பாடலம்என் பாரிசாதங்கரந்தை
திருவாரு மலர்தூக்கி மயன்வளம் கொள்மணவறைகள் சிறப்புச் செய்தான்

இன்னணம் பல்வளம் நிறைந்த திருமண மண்டபம் தன்னை இமயப்பாவை
தன்னைஒருபான் மருவும் பரன்நோக்கி மகிழ்புரிந்தச் சபையின் கண்ணே
மன்னிய நாரணன் முதலோர் யாவரையும் நாடிஎழில் வடிவேலாற்குச்
சொன்ன மறைவிதியாக மங்கலநானம் புரியத் தொடங்குமென்றான்

எவ்வுலகும் தந்தருளும் இறைவன் அருள்தாங்கிய அயன்இமையோர் கூடித்
தெவ்வரியா நாரணற்குத் திருமருகன் அறுமுகனைச் சிந்தை அன்பால்
பவ்வம் அகற்றிடும் சரண கமலம்அதைப் பணிந்து ஏத்திப் பலரும்போற்றும்
அவ்வியம்தீர் கங்கைகாளிந்தி சரசுவதி பொன்னிஅவை முன்னான 481

நவதெய்வ நதிப்புனலும் வரவழைத்தே அத்தேவை நற்பீடத்தில்
புவனம்எலாம் உய்ந்திட வீற்றிருக்கச் செய்துஅத் தீர்த்தம் பூரித்துஆட்டி
உவமையிலாக் கழைஅமுதம் ஐந்தமுதம் பால்தயிர்நெய் ஒளிரும்தாழை
நவைஅறு நல்இளநீர்மா மலர்தோயும் அமுதகஞ்சந்தன நன்குஆட்டி

மந்திர கும்போதகத்தால் அபிடேகம்செய்து சிதமலர் மெல்ஆடை
தந்துறுநீர் துவட்டிச் சிகைஉலத்திச் சிகழிகைப் பின்தழைப்ப வேய்ந்தே
இந்திரன் அன்பொடு கொணர்ந்த கனகமணி அம்பரத்தை இலங்கச் சூட்டிச்
சந்திரவெண்ணீற்றினைநம் பந்தம்அறுப்பவன் நுதலில் தயங்கச் சாத்தி

திருமுடிகள் ஓர்ஆறும் செங்கதிர்கள் கோடிஎனத் திகழும் வண்ணம்
ஒருமையதாப் பிருங்கிமுன் முனிவர்கள்எலாம் பணிந்தே உவகைபூப்ப
வரியது துதிபுரிந்து சிரங்களில் சூட்டி விலைஎவரும் அறிய ஒண்ணாத
பொருஅறும் ஈராறுகுழை அத்தொகையாம் செவிகள்கொளப் பொலிவித்தாரால்

கார்த்திகையார் அறுவர்களும் மற்றைஉள தாரகையம் கணத்தோடு எய்திச்
சீர்த்திகழும் திருமார்பன் தன்னில்எழின் மாலையதாத் திகழ்ந்தால் என்னப்
பார்த்துஉயர்ந்த நித்திலமா வடத்தை அளகைத் தனதன் பரவிற்சாத்த
மார்த்தண்டர் எனஒளிரும் வைரமுதன் மணியுரகர் மகிழ்ந்திட்டாரால்

தனக்குமுனம் பிரணவத்தைச் சாற்றினோன் மணக்கோலம் தன்னைநோக்கா
அனைத்துயிர் கண்ணேறுபடா வணம்பரமன் ஈற்றுக் காப்புஅணிய முத்தம்
இனித்திகழும் வாகுவல அங்களத் கடகங்கண் மிளிரும்ஆழி
பனிக்கமலமலரப் பதத்தில் பரிபுரம்ஒண்கழல் புனைந்தார் பரவும் வானோர்

பாலசித்தன் ஒருகமல மலர்அமலன் கரந்துஉதவிப் பணியாநிற்ப
ஏலுமுனிவோர்கள்எலாம் பூங்கடப்பமாலை கண்மார் பிலங்க வேய்ந்து
மூலசடானன பரம ராகிய கௌமாரசுப முருகதண்டைக்
காலஅயில்வேலவ லசடாக்கர என்றுஅரும் துதிகள் கூறிச்சூழ 487

அரம்பயில்கண் உருப்பசிநல் அழகுமேனகை திலோத்தமை அன்பான
அரம்பையர்கள் இருபுறமும் நாடகம்ஆடிச் செல்ல ஆயிரங்கை
ஒருங்கினிற் பெற்றுள வாணன் குடமுழவம் இடியெனவே ஒலிசெய்தேகம்
திருந்தியசங்கு ஆயிரம்கை ஆயிரம்வாய்ப்பானு கம்பன் சிலைத்தங்குஏக

வாசுதேவன் மகவான் இருவர்களும் உளம்மகிழ்ந்து வரலானோர்கள்
ஆசகன்ற கந்தருவர் உரகர் கருடர்கள் சித்தர் ஆகாயத்தோர்
நேசமிக நாற்றிசையும் சூழ்ந்துமலர் மழைபொழிய நிலையேநிற்கும்
பூசுரர்கள் வேதமழை பொழிய மணமண்டபத்திற் புகுந்தானன்றே

**வேறு**

திருமண அறைதன்னில் திகழும் மணிப்பீடத்
ஒருவரும் நிகரில்லா உமைசுத னமர்போதில்
இருசெவி இடையோடி இகல்செயும் விழிமோத
இருவரும் வருமாறும் இனிது விளம்புதுமே 490

மலைமகள் ஏவலின்வெண் மலர்மகள் திரைமோதும்
அலைமகள் அயிராணி அருமறை முனிமாதர்
பிலமதில் உறைமடவார் இவர்பிரிய மதாகக்
குலவிட மான்மகளைக் குஞ்சர மகளுடனே 491

பொற்பல கையில்உய்த்தே புனிதமது உறுபுனலால்
அற்புதம் உடன்ஆட்டி அணிபனி நீராட்டிப்
பற்பல மலர்வாசம் பற்றிய அமுதாட்டி
விற்பனமொடு தூசான் மேனியின் அறலோட்டி 492

குழலிடை அகில்வாசம் குலவிய புகைஊட்டி
அழகுஉறு சடைபின்னி அணிபல அணிசெய்தே
இழைஒரு கோடிபெறு இணையறு துகில்சாத்திக்
கழைநிகர் தோளின்இடைக் கச்சுஇறுகப் பூட்டி 493

மதியினை வௌவும்ஒரு வரிஅரவு எனமுகமாம்
அதிமிசை நறைகமழும் வார்குழல் வகிர்விலக
மதிகதிர் இருவர்களும் வந்துஉறையும் தகையின்
மதியணி கதிரணியும் வகைவகை உடன்சூட்டி 494



நெற்றியில் நித்திலஒண் சுட்டியை நேர்தூக்கி
நத்தொடு முத்துஒளிர நாசியின் அணிபுனையாப்
புத்தெழில் உறுபூகம் பொரும்ஒரு கந்தரமீது
இத்துணை உளஇலை என்று இசையறும் அரதனமே 495

நிலவிய மணிமாலை நித்தில மாலையுடன்
இலகு பொன் அரிமாலை இசையளி முரலமணம்
குலவிய மலர்மாலை கொத்துஎழில் வித்துருமத்
துலவிய தனிமாலை ஒளிபெற அணிசெய்தார் 496

புகல்தர தாகும் பூடண அவைபுனையா
அகல்புவி விண்ணுக்கும் அபயமது அருள்அத்தன்
நகைபெற வளையாழி நகையொடு புகுவித்துச்
சுகமருள் அடிஇணையில் தொடுபரி புரம்அணியா 497

இன்னன இழைகளினால் என்அன்னை இருவரும்
பொன்னியல் பதுமைஎனப் புகல்வண்ணம் அழகுசெய்தே
அந்நிலை தனின்முனிவோர் அரிவையர் இருபாலும்
சொல்நல மொடுவாழ்த்தும் சுகபர மொடுநடவா 498

நிறைகுடம் ஒளிர்தீப நிழல்தரு சாமரைநன்
முறைஉறு கொடிஆடி முரசுஇணை கயலொடு
மறைதரும் அங்குசமாம் அட்ட சுமங்கலமும்
பொறைஉறு மடநல்லார் போற்றினர் கொடுசெலவே 499

விண்ணவர் இசைகூற மேலவர் துதிசெய்ய
மண்ணவர் அன்பின் மணமலரடி தனில்வீழப்
பண்அமர் மொழிஎழிலார் பாரதி பதுமைஎழில்
அண்ணிய சசிமுதலோர் அங்கையில் ஏந்தினர்போல் 500

சிவிகையில் கொடுபோந்து திருமண வறைபுக்கும்
கவிகைநி முற்றிஎழில் கந்தனது இருபாலும்
புவிமுதன் மூவுலகும் புகழ்தர அமர்வித்துஅத்
தவிசுஅரு குறஇனிதிற் சபையின் இருந்தனரால் 501

வேதியினால் வேத விதிபிற மூவணமே
வேதிகை மிசைகுசையை விரிதர வைத்துஉள்ளத்
தாதரமோடு மநுவோதி நலக்கினியில்
ஏதமில் அவிகள்சொரிந்து இலக வளர்த்தியபின் 502

சித்தரில் உயர்பால சித்தனை நோக்குபுநீ
பெற்றிடு புதல்வியர்போல் பெற்றிடும் உரிமையினால்

அத்தமது ஈகஎனச் சதுமுகன் மொழிநாலும்
அத்தகு தாரையினீர் அரன்உமை கைப்பெய்தான் 503

தழைமதி வேணிஅரன் தாரையின் நீர்கொளலும்
குழைபொரும் அதருண்கட் மலர்க்கரம் அவைபற்றி
மழைநிகர் அருண்முருகன் மலர்க்கரம் அவைபற்றி
விழைமக அழல்வலமா மேவிஇருந்த பின்னே 504

பூசுரர் மறைநீடப் புலவர்கள் புகழ்பாட
வாசகன் முனிவர்எலாம் ஆசிசொலிக் கூடப்
பாசிழையார் அமரர் பாவையர் மலர்போடக்
காசுஅணி முலைஅமரக் கணிகையர் நடமாட 505

வார்அணி மணிமுரசம் வல்லிசை குடமுழவ
நேரில் தடாரியொடும் சல்லரி நீள்பம்பை
சீரிசை வளைவீர சின்னம் குழல்கஞ்ச
ஆர்கலி எனஐம்பால் கருவிகள் ஆர்த்தனவே 506

மங்கல சூத்திரமம் மணிவணன் அணிமருகன்
செங்கையின் ஏந்திமணத் தெரிவையர் இருவர்களும்
பொங்குறும் அழகெய்தப் பொற்பின் மகிழ்ந்துஅணியச்
சங்கரன் உமைஉவகைச் சாகரம் மூழ்கினரால் 507

அரசினை வலம்ஆகி அறுமுகன் ஒளிர்கையினால்
சுரிகுழல் அரிவையர் மென்துணைஅடி அம்மியின்மேல்
சரசமது உடன்வைப்பத் தையலர் அருந்ததிதான்
பரிவுடன் எதிர்நிற்பப் பார்த்தவளுக்கு அருளா 508

இவ்வகை எழிலாக இயன்மண விதிகள்எலாம்
செவ்விய நான்முகனும் சித்த விருப்புடனே
ஒவ்வி நடத்தியபின் உத்தமியார் உடனே
திவ்விய மாளிகையில் சென்றனன் அறுமுகனே . 509

மாயவ னார்வதுவை மண்டப மத்தியினின்
நாயகமாய் முனிவர் நாவலர் ஏனையுளோர்
ஆயவர் தங்கள்உள ஆவல் ஒத்திடுபொன்
தூயபல் பூடணமுந் தூசொடு வீசினனால் 510

கற்பக நிதிகள்எலாம் காமரும் இந்திரன்ஊர்
அற்புறு மேகமென வாதுலர் வேதைஎலாம்
தற்பரன் அருள்பெற்றோர் சஞ்சலம் அற்றதுபோல்
சொற்பொழுது இடைமாறச் சொரிய மகிழ்ந்தனரால் 511



இன்ன விசேடம் எலாம் எய்தியபின் முருகன்
பன்னியர் இருவருடன் பால்பழம் உண்டுஅருள
மன்னிய கலைமகளும் அருமலர் வளர்மகளும்
உன்னதமும் உடன்ஊட்டி ஒப்பறு மகிழ்பெற்றார் 512

தெய்வத நற்பசுவும் திருமணம் அதில்வந்தோர்
எய்தரு மகிழ்மலிய வின்சுவை அமுதுபடைத்து
அய்யமில் பாசடையும் அன்புடனே அருளுத்
துய்ய விருப்பின் உடன்று உய்த்தனர் யாவருமே 513

மான்மழு ஏந்தியநம் வள்ளலின் அருள்பெற்றுத்
தேன்மருவும் துளவத் திருமகள் இறைமுதலாம்
வான்மரு உரும்பரொடு மாதவர் யாவர்களும்
பான்மையில் அவரவர்தம் பதியுழை மேவினரால் 514

அவரவர் உறைபதியின் அன்புடன் ஏகியபின்
எவரையும் முனமேதந்து இனிதருள் செய்தபர
சிவன்அருளொரு பாலசித்தனை எதிர்நோக்கித்
தவலரு முன்சாபம் தணந்துஇனி மகிழ்என்றார் 515

நிறையருளொடும் அமலன் இன்ன நிகழ்த்துதலும்
குறைஅகல் சித்தினன் எண்குண நிலை மிகுபுகழோன்
நறுமலர் அடிஇணையை நன்கு பணிந்திடலும்
அறம்அருள் உமையவளுக்கு அதிபதி இதுமொழிவாள் 516

**வேறு**

இத்தலத்தின் நமதுஇளவல் இலகியவேல் சண்முகனோடு இனிமையாக
ஒத்தமர்ந்து அங்குஎழில்ஐ நூறாண்டு உலகில் ஆகமத்தின் ஒழுக்கம் வாய்ப்பப்
பத்திநெறி தருபூதி அக்கமைந்தக் கரம்வளரப் பலரும் சித்த
சுத்தியினால் சித்தியுடன் முத்திபெறும் அந்தணத்தைத் தொகுத்துக் காட்டி

பின்னர் நம்பால் கலந்துஇருத்தி என்னவரம் இனிதுஅருளப் பிரணவத்தை
மன்னவருள் குருபரனோடு அளவளாய் அற்புதத்தின் வாழ்க என்று
தன்னரிய அருட்குறியை நிறுவிப்பின் கைலைமலை சார்ந்தான் அன்பால்
என்னை எடுத்து அருள்அப்பன் அப்பணிவான் ஒப்பில்லான் இறைவன்தானே

அங்கமலன் அமர்ந்திருக்க வணிமயிலைக் கிரியின்மிசை அன்பர் போற்ற
மங்கலநல் வினைமுடிந்த பின்னர்எழின்மான் பயந்த வல்லியோடும்
செங்கலசக் கொங்கையிபம் பயந்த மலர்க்கொம்பினொடும் சிறந்தகாதல்
பொங்குகடல்ஆர் இன்பம் திளைத்தாடி இனிதமர்ந்தான் போர்வேலோனே

சின்னாள்இன்பம் திளைத்துச் சிவஞானம் உணர்தவத்தால் சிவஞானிப்பேர்
பன்னரிய பாலசித்தற்கு அளித்து மணிச்சிவிகை முதற்பலவும் ஈந்து

தன்னருகின் வரப்புரிந்தே என்னை வழிவழிஆளும் சாமிநாதன்
உன்னரிய மானமிசைத் தேவியர்கள் இருவரொடும் உவப்பில்ஏறி 520

மயிலைமலை நின்று ஒருவிச்சூர் தடிந்தவேல்கை வரதன் சென்று
பயில்இளம்சூன் முகில்பரவும் பொழில்உடுத்த பருப்பதங்கள் பலவும் எந்தம்
செயிர்அகற்றும் உயர்தெய்வத் தலம்பலவும் சென்றுஆடல் சிறப்பச் செய்தே
இயலுமறையோடு சிவாகமநெறி இவ்வுலகின்இடை இலகஎண்ணி

சித்தன்முக நோக்கி நமதுஎந்தை முனம்உனக்குஅருளிச் செய்தவாறே
எத்திசையும் மறைமுறை ஆகமவழி நின்றிடும்வண்ணம் இயற்றுகென்ன
முத்தன் அறுமுகச் செவ்வேள் தனது திருவாய் மலர்ந்து மொழியலோடும்
அத்திறம் செய்குவல்என்னா அடியருடன் தேசமிசை அடர்ந்துபின்னர்

பொய்திகழும் இடைமடவார் போகம் பேரின்பம் எனும் புன்மைத்தாய
நொய்ய உலகாயதம் புத்தம்ச மணமீமாம்சை நுவலும் பேறில்
கைதவப் பாட்டாசாரியம் பாஞ்சராத்திரமாம் கடைமைத்தாய
மைதவறாப் புன்மைதரும் புறச்சமயம் அனைத்தினையும் ஆயநூறி

நிலவும்அகச் சமயம்எனும் சைவமாவிரதமொடு நீடும்விஞ்சை
பலவுறு பாசுபதம் காளாமுகம் ஏவாமம் வைரவநற் பண்பின்
அலமருவும் இவைகளூறும் துகள்அகற்றிப் பாலசித்தன் அண்ணல் ஓர்ந்து
குலவுநலப் பக்குவமே உற்றவர்கள் ஆங்குஅன்பு கொண்டுமேவி 524

தக்கமறை நெறிஅருளும் பாலசித்தன் அருட்கமலச் சரணம்சாரம்
மிக்கவருள்கண் சாத்தி அவர்பாசம் பாற்றிவெய்ய வினைகள்தீய
அக்கணம் தெய்வதப்பூதிப் பிரசாதம் இனிதுஅருளி அன்பின் மேவும்
மக்காணும் பவம்தொலைப்பான் எனஅருளின் உறுதிநிலை வழங்குவானால்

உரிமையொடும் உழுவல்அன்பால் நமதுசரண் அடைந்ததனால் உறுதிஉள்ளத்
தரம்உடையீர் உய்யுநெறி கேண்மின்எனப் பாலசித்தன் சாற்றுகிற்பான்
பிரமம்அதை மொழிசைவ சமயசித்தாந்தம் மறையிற் பேசுமூலம்
அருவுபொருள் ஆதலினால் தெய்வமறை ஈதென்ன வகுக்கலாமால்

ஆதியாகிய பரமன் அருளினால் தோன்றின பல்ஆகமங்கள்
நீதியாம் சைவமிலா குலம்பண்ணும் பாசுபத நிகரில்சோபம்
ஓதலுறும் வாமம் உயர் தக்கணமேதை யமிசிரம் உரைத்தநான்கு
தீதுஇல் உயர்சித்தாந்தம் பெறும் முன்னம் உரைத்தவருள் சீர்கொள் சைவம்

புகல்வாமம் சத்திபரம் வைரவற்காந்தக் கணம்பின் புகலும்ஏழு
நகில்நல்லார்க் காமிசிர மேதைமறை சொலும் தரும நவில்தானும்
பகர்தருபன் மதங்கள்கெட நின்றுபொரலானும் உயர் பதமேநல்கும்
தகைமிகு சிவாகம சித்தாந்த மறைமதமாகத் தழைப்பதாமே 528



காமிகமே முதலாய இருபத்தெட்டு ஆகமத்தும் கலக்கும்ஈச
னாம்அவன் உத்தரபாகம் முழுதுடைத்தால் வீரசைவம் அவற்றின் பாலாய்
நேமமொடு சித்தமயம் சிவமாகக் கொண்டு வித்தை நிரந்தர மாயை
சேமம் அகன்றிடக் கடிதல் திகழ் வீரசைவமெனத் தெரித்திட்டானால்

**வேறு**

என்றுஇனிதாக அகச்சமயத்தை எடுத்து நிறுத்தியபின்
அன்றொரு நால்வர் தமக்கு உபதேசம் அளித்தவனே இவன்என்று
ஒன்ற உரைத்திட வையமும் வேளுடன் உற்று கலந்தபின்னர்
சென்றனன் ஆறுமுகக் குமரன்திகழ் சித்தனது ஆச்சிரமம் 530

**வேறு**

போந்தவுடன் முருகேசன் துணையடியைப் பாலசித்தன் பூசித்து எந்தாய்
சாந்தவருள் கடலே சண்முகத் தேவேனத் துதிகள் சாற்றுங்காலை
வாய்ந்த சிவஞானி உன்தன் பூசைதுதி வியந்தாம்உன் மனத்தின் எண்ண
மாம்திறம்நீ புகறிஎனச் சிவஞான பாலசித்தன் அறைவான் மன்னோ

எம்பெரும நினதுதிரு அருட்கிசைய இம்மடந்தான் என்றதனாலே
செம்மையுற அமைந்ததனால் என்சீடற்கு அபிடேகச் சிறப்புச் செய்து
மும்மைஉலகும் புகழத் தேசிகப்பட்டமும் நல்கி முதுபாலர்ஏத்தக்
கொம்மை முலைஉமை பாலனென் பொருட்டுஇங்கு உன்னதருள் கூர்தல் வேண்டும்

எனஉரைத்தவாறு அன்னோன் சீடனுக்குச் சிறப்பாதி ஈந்துஅமர்த்திப்
புனையும் அக்கமணிநீறு தாரணம் செங்கலிங்கம் இன்ன பூணச்செய்தே
இனியபால் அருந்தியுறத் தன்அமிசத்து ஒர்அமிசம்இருத்தி என்றும்
கனைகடற்பார் தொழச்சீட பரம்பரையின் வாழ்கஎனக் கருணைகூர்ந்தே

பாலவயதொடு பிரமநிலை உணர்ந்த நீஅமர்ந்த பரிசால் மெய்ம்மை
சாலும்இந்த ஆச்சிரமம் பாலமடம் பிரமபுரம் என்னச் சாற்றிக்
கோலமயில் குமரேசன் சிவஞானியொடும் அன்பில் குழுமிஏகி
வேலைஇடைத் திகழ்புவியின் உயிர்தழைப்ப மயிலைமலை மேவினனால்

எய்திமயிலைச் சிலம்பில் சூரன்முனம் வேண்டியவாறு எழில்கோயிற்குள்
தையலர்கள் இருபுறமும் இனிதுஇருப்ப அமர்ந்தனன் வேல்சாமிநாதன்
துய்ய சிவஞான தேசிகத் தேவன்அவ்வரையில் துலங்குஐஞ்ஞூறாண்டு
எய்தளவும் சிவஞானச் சித்தஉருவோடு உலகோர் ஏத்த நின்றான் 536

பின்னர் அருள்குமரேசன் ஆலயத்தின் அணித்தாகிப் பிறங்கும் தென்பால்
மன்னிலிங்க உருமேவி வானவர் மண்ணினர் உரகர்வந்து போற்றி
உன்னியஎலாம் அடைய அளித்திடுவான் சித்தர்பிரான் உறைந்தான் என்னாத்
தன்னைநிகர் சூதமுனி வரன்உரைப்ப முனிவர்மகிழ் சார்ந்தார்அன்றே

**வேறு**

கந்த வேள்இரு கன்னியர் தம்மையும்
வந்து மாமயில் ஓங்கலின் மாமணம்
சிந்தை அன்பினில் செய்தமை செப்பினாம்
கந்த மாமலர்த் தீர்த்தம் கழறுவாம் 538

**திருமணச் சருக்கம் முற்றிற்று**





**வசனம்**

முனிவர்களே, தன்னைப் பூசிக்கின்ற அடியார்களது இருதய கமலத்தில் விளங்கும் பரமேஸ்வரன் ஜோதிமயமான ஆசனத்தின் மேல் அமர்ந்தனர். தும்புரு நாரதர் இசைபாடினர். விட்டுணு, நான்முகன் முதலிய தேவர்கள் ஒன்றுகூடி அரிய தோத்திரங்களைக் கூறினர். அத்தகைய தேவர்கள் அனைவரையும் நோக்கி அவரவர் தகுதிக்கேற்ற முகமன்கூறி ஆதனங்களில் அமர்வித்து தேவதச்சனாகிய மயனை நோக்கி நமது குமாரனாகிய முருகனுக்கு, கலியாணம் இன்றைக் காதலால் அதற்கேற்ற கலியாண சாலையும் நகரமும் இயற்றுக என ஆக்ஞாபிக்க, அவ்வாறே மந்திர வலியால் அமைத்துதவினன். அவ்வாறு அலங்கரிக்கப்பட்ட கலியாண சாலை, மணவறை முதலிய தானங்களின் சிறப்பைக் கண்டவர்களுக்குப் பசி முதலிய உபாதைகள் நீங்கும். அதன் சிறப்பை எடுத்துக்கூறிப் பிரமன் இந்திரன் முதலியோருக்கும் வலியின்றென்றால் யான் எவ்வாறு சொல்லி முடிப்பது? முருகனுக்கு மங்கல நீராட்டுவிக்கும்படி பிரமவிட்டுணுக்களுக்குப் பரமசிவன் ஆக்ஞாபித்தார். கங்கை, யமுனை, சரஸ்வதி, காவேரி முதலிய புண்ணியநதிகளின் தீர்த்தங்கள் ஒருங்கு கொணர்ந்து கருப்பஞ்சாறு, பஞ் சாமிர்தம், பால், தயிர், நெய், இளநீர் முதலியவற்றால் முழுக்காட்டி நீர்துவட்டிச் சிகை உலர்த்தி முடித்து ரத்ன ஆபரண பீதாம்பராதி தரித்து நீறு தீட்டி, ஆறு திருமுடிகளிலும் கிரீடம் தரித்து முடித்தபோது பாலசித்தர் ஓர் செந்தாமரை மலரைக் குமரக்கடவுள் திருக்கரத்தில் அளித்துத் தோத்தரித்து வணங்க, ஊர்வசி, மேனகை முதலிய அரமகளிர் நடனம் புரிய, வாணன் ஆயிரம் கரங்களால் குடமுழாமிழற்ற, பானுகம்பன் ஆயிரம் வாய்களால் சங்கத்தொனி முழக்க, விட்டுணு, இந்திரன் இருவரும் மகிழ்ந்து அருகில் வர, கந்தர்வராதியோர் பூமழை பொழிய, வேதப் பிராமணர்கள் மறைமுழங்க, மணமண்டபத்தில் முருகக் கடவுள் சென்றார்.

இஃது இவ்வாறு இருக்க, பார்வதி தேவியாரின் திருவாக்குப்படி சரஸ்வதி, இலக்குமி, இந்திராணி, ரிஷிபத்தினிகள் முதலியோர் வள்ளிநாயகி, தெய்வயானை அம்மையாகிய இருவரையும் சொர்னபீடத்தில் அமரவைத்து, சுத்தோதகம் பன்னீர் சுகந்தோதகம் ஆட்டி, ஈரந் துவற்றி, கூந்தலுக்கு அகிற்புகை ஊட்டி, அணிபெற முடித்து, ஆபரணங்கள் அணிந்து, பீதாம்பரமும் கச்சும்புனைந்து, சிரபூஷணம் சூட்டி, பாதங்களில் சிலம்பு தரித்து, அட்ட மங்கலங்கள் ஏந்தி, சிவிகை ஏற்றி கலியாண சாலை புகுந்து, கந்தக் கடவுளுக்கு இருபக்கமும் அமர வைத்து அவர்களும் சபையில் அமர்ந்தனர். பிரமதேவர் விதிப்படி அக்னி ஓமம் புரிந்து பாலசித்தரை நோக்கி

உனது புதல்வியரைப் போல் உன்னால் காக்கப்பட்ட கன்னிகைகளை, குகக் கடவுளுக்குத் தத்தம் பண்ணுக என்றபடி சித்தர் பார்வதி பரமேஸ்வரர் கரத்தில் தாரைநீர் வார்த்தார். அதன்பின் திருவருள் நிறைந்த முருகக் கடவுள் தேவிமார் இருவரையும் பாணிக்கிரகணம் செய்து, அக்கினி வலம் வந்து, பூசுரர் வேதம் முழங்க, புலவர்கள் பாட, மகரிஷிகள் ஆசீர்வதிக்க, தேவமாதர் மலர்தூவ, அறமகளிர் நடனமாட, முரசம் முதலிய வாத்தியங்கள் முழங்க, குமரக் கடவுள் இருதேவியர்களது கழுத்திலும் அழகு நிறையும்படி மங்கல சூத்ரம் தரித்தனர். அம்மிமிதித்தல், அருந்ததி பார்த்தல் முதலிய சடங்குகள் முடித்து தேவிமார்களுடன் திவ்யாலங்கார ஆஸ்தான மாளிகையில் ஸ்ரீசண்முகப் பெருமான் சென்று வீற்றிருந்தருளினார்.

ஸ்ரீநாராயணமூர்த்தி மண்டபத்தில் தலைமை அமர்ந்து முனிவர், பாவலர், ஆதுலர் முதலியோர்க்குப் பொன்பூண்ட ஆடை முதலிய வழங்கினர். கலைமகள், திருமகள் இருவரும் முருகனுக்கும் தேவிமார்க்கும் பால் பழம் ஊட்டி மகிழ்ந்தனர். காமதேனு அங்கு வந்தோர் பலர்க்கும் அறுசுவை உண்டியும், சுகந்த தாம்பூலங்களும் வழங்க அனைவரும் துய்த்தனர். ஈசுர கிருபையைப் பெற்று பிரமவி-ஷ்ணுவாதி தேவரும், முனிவராதியோரும் தத்தம் இருக்கை சேர்ந்தனர். பரமசிவன் பாலசித்தரை நோக்கிச் சாபம் தீர அநுக்கிரகித்தனர். அப்போது சித்தர் பரமசிவனை வணங்குதலும் ஈசுவரன் அவரை நோக்கி இந்தத் தலத்தில் நமது குமாரனாகிய முருகனோடு உரிமையுடன் சமமாய் அமர்ந்து ஐந்நூறு ஆண்டுகள் வரை உலகத்தி ஆகம ஒழுக்கங்கள் பொருந்தவும், விபூதி உருத்திராக்க பஞ்சாக்ஷர மகிமை வளரவும், பலரும் சித்த சுத்தியும், சித்தி முத்தியும் பெறத்தக்க மந்தாபோதசம் செய்து பின் நம்மோடு ஐக்கமுற்று விளக்கக் கடாவாய் என்று அருளி அந்தர்த்தமாயினார்.

மான் மகளாகிய வள்ளியம்மையோடும், யானை மகளாகிய தெய்வயானை அம்மையோடும் குகக்கடவுள் இன்ப அனுபவத்தில் அமர்ந்து பின் பாலசித்தர்மீது மகிழ்ச்சி கொண்டு சிவிகை, விருதச்சின்னம் முதலிய சிறப்புகள் அருளி தன்னுடன் உலா வரும்படி செய்து தான் அழகிய விமானத்தில் ஆரோகணித்து தேவிமாருடன் மயிலாசனத்தில் நின்றும் நீங்கி மேகங்கள் படருகின்ற பல பர்வதங்களுக்கும் சென்று தெய்வீகத் திருவிளையாடல் இயற்றிச் சிவாகம நெறியை உலகத்தில் விளக்கக் கருதிச் சித்தரை நோக்கி, எமது தந்தை பூர்வம் உனக்கு அருளும்படி சித்துகள் இயற்றுக எனச் சொன்ன அளவில் உத்தரவு பெற்று, சேதங்களில் சென்று உலாகாதாயம், புத்தம், சமணம், மீமாம்சை முதலிய புறச் சமயங்களை அடக்கி அகச்சமயமாகிய



பகுதிகளைக் குற்றம்நீக்கிக் காத்துப் பாலசித்தர் விளங்குவதைப் பார்த்துப் பக்குவிகள் அவரது திருவடியை அடைந்து வணங்க அவர்களைக் கடாக்ஷித்து விபூதிப் பிரசாதம் அருளி முடித்த திருவருள் நிலையை உபதேசிப்பதானார்.

உரிமையோடும், உழுவலன்புடனும் நமது பாதத்தை அடைந்ததால் பக்குவிகளாகிய நீங்கள் உண்மை மார்க்கத்தைக் கேளுங்கள் எனக்கூறி, பிரம்ம நிச்சயம் உணர்த்தும் சைவ சமய சித்தாந்தமானது வேத மூலத்தையுடைய பொருளதானதால் தெய்வீக தேவமென்னக் கூறலாகும்.

ஆதியாகிய பரமசிவன்அருள் வடிவில் தோன்றிய பல ஆகமங்கள் சைவம் தவிர, பாசுபதம், வாமம், தக்கிணம், மேதை என நான்கும் உயர்ந்த சித்தாந்தத்துக்கு முன் பூர்வபக்ஷமாக உரைத்தது. அழகிய அருளையுடைய சைவமானது சித்தாந்ததமாகக் கூறப்பட்டது. இவற்றுள் சொல்லிய வாமாம் சத்தியின் பகுதியும் மேதை வைதிகமும் ஆம். இவை அவ்வத் தருமத்தைக் கூற வந்தனவாகையால் சிவாகம சித்தாந்தமானது வைதீக சைவ சித்தாந்தமாக விளங்கும். காமிகமாதிவாதுளாந்தமான இருபத்தெட்டு ஆகமங்களும் அருளிய பரமசிவன் உத்தர பாகத்தையுடைய வீரசைவத்தின் பகுதியாய்ச் சித்தமயமே சிவமாகக் கொண்டு அவித்தை மாயைகளினது விளைவை நீக்கி அகற்றலாகியதைச் செய்வதால் அதுவே வீரசைவமென்னத் தெரிவித்தருளினார்.

என்று இவ்வாறு அகச்சமய விளக்க உபதேசம் இயற்றியபின் சனகாதி நால்வருக்கு அநுக்ரகித்த பரமசிவனே இவரென்று கூறும்படி சித்தர் முருகனிடம் சேர்ந்தனராக இருவரும் சித்தராச்சியம் சேர்ந்தனர். அங்கு அடைந்தவுடன் சித்தர் முருகனைப் பூசித்துத் துதிக்க, அவர் மகிழ்ந்து உனது தொண்டுக்கு உகந்தனம். உனது விருப்பத்தைக் கூறுக என்றனர். அது வினவிச் சித்தர் எமது பெருமானே உமது திருவருளால் இந்த இடமானது அடியேனால் சிறக்க அமைந்ததாதலின் எனது சீடனுக்குப் பட்டாபிஷேகம் இயற்றி மூவுலகும் புகழத் தேசிகப் பட்டமும் அளித்து உன் திருவருள் பாலித்தல் வேண்டும் என்று விக்ஞாபித்தபடி அவரது சீடனுக்குச் சகல சிறப்பும் கொடுத்து அமரச் செய்து விபூதி, உருத்திராக்ஷம், லிங்கதாரணம், காஷாயம் முதலியன அளித்து பாலுணவுண்டு வசிக்கும்படி தனது ஓர் அமிசம் அளித்து எக்காலத்தும் சீட பரம்பரையாய் நீடுழிவாழ்க, எனக் கருணை புரிந்து பாலவயதிலே நீ பிரம்மநிச்சயம் உணர்ந்து வசித்ததால், சத்திய விளக்கம் அமைந்த இந்த மடமானது, பாலமடம், பிரம்மபுரம் என்று பெயர்சாற்றிக் குமரக் கடவுள் பாலசித்தரோடு உலகத்து உயிர்கள் அனைத்தும் வாழும்படி மயூராசலம் சேர்ந்தனர். சூரபன்மன் முன்பு வேண்டிக் கொண்டபடி

திருக்கோயிலில் உபயதேவிமார் இருபுறமாகக் குமரக்கடவுள் வேல்அணிந்த கரத்துடன் எழுந்து அருளி இருக்கின்றனர். பரிசுத்த சொரூபராக சிவக்ஞானபாலய சித்தர் முருகன் திருவாக்கின்படி ஐந்நூறு வருடம்வரை சித்த வடிவத்துடன் வழிபாடு செய்து விளங்கி முருகன் கருப்பகிரகத்தின் தென்திசையில் சோதிலிங்க வடிவம்கொண்டு தேவர், மனிதர், உரகர் பலரும் வந்து வணங்கிச் சர்வாபீஷ்டங்களும் அடையக் கொடுத்தருளி விளங்குகின்றனர்.





## பத்தாவது
## தீர்த்தமகிமைச் சருக்கம்

சரதமறைக்கு ஒருமுதலைத் தனைஅடைந்தார்க்கு இருமுதலைச் சாராதுஆன்றங்
கரதலமார் ஒண்மணியைக் கருதுமன்பர் கண்மணியைக் ககனத்தேவர்
விரதர்தொழு மயின்மலையின் மேவுசமன்றடங் கரையில் விளங்குமெய்ம்மை
வரதவிநாயகனை அனவரததும் நாம்பரவிஇன்ப மருவிவாழ்வாம்

இருபரவைத் தோன்றும்ஒரு பிறைபோற்கண்நுதலும் உமையுள்இன்பம்பூப்ப
வருபரம்சேர் தோணிஎனக் கங்கைஇடைப் பிறைதவழ வயங்குவேணி
ஒருபரமாம் பொருள்கொள்ள வருமறையின் பொருளைவிரித்து உதவுஞான
குருபரனாம் எழில்குமாரன் இருசரண மலர்சிரத்தில் கொண்டுவாழ்வாம்

உரைநவிலற்கு அரும்சூதன் பயசரணாரவிந்தத்து உள்அன்புஆர்ந்து
கரகமலங் குவித்தேத்திக் கசிந்துருகித் தாழ்ந்துகலைக் கடலே இன்னும்
வரம்உதவும் பெரும்தீர்த்த மூர்த்தி தலமான் மியமும் வகுத்திடென்னா
நிரைமுனிவர் வினவவதற் குஉளம் மகிழ்ந்தேஅம் முனிவன் நிகழ்த்தல் உற்றான்

### வேறு

அருளார்கலை யாளிமுனம் அளித்தசாபம் அகலுதற்கும்
இருள்சீக்கும்செங் கதிர்வேலன் எதிர்வந்துஅருளைத் தருதற்கும்
அருண்மான்மகளோடு இபமகள்தன் மக்களாக வாய்ப்பதற்கும்
தெருளார்சித்தன் கண்டுஅதனில் திளைக்கும் தீர்த்தம் செப்பஅரிதே

எந்தை அமரும் சந்நிதிக்குஅங்கு இயைந்ததுஎன்கீழ்த் திசைஅதனில்
கந்தம்ஒரு காவதம்கமழும் கமலமலரும் அழகுடைத்தாய்
வந்துவானோர் முதலோர்கண் மகிழ்ந்துமூழ்கி விசுவேசன்
செந்தாள்குமரன் சரண்போற்றிச் சீர்பெற்றிலகத் திகழ்ந்திடுமால் 543

அவுணர் இடுக்கண் என்றுமுறாது அமரர்கோமான் அன்பொடுவந்து
உவமையில்லத் தீர்த்தமதில் உவப்பின்மூழ்கி ஒப்பிகந்து
நவைஇலாத வைந்தருவு நாற்கொம்புஅயிரா வதப்பகடும்
புவனம்புகழ்சீர்த் தியதாகப் பொருந்திவாழ அருளியதால் 544

தீராக்காசம் சூலைவெறி செறியும் கரங்கால் அளவுகுன்றி
ஆராத்துன்பு தரும்குட்டம் அடரும்பாண்டுமெய்ந் நடுக்கம்
வேரார் வெதுப்பு முயலகனாம் வெந்நோய்இரணப் புண்பலவும்
பாரார்மூழ்கிற் பரிகரிக்கும் பாலசித்தன் தீர்த்தமதே 545

புதல்வர்இன்றி வருந்தும்அவர் பொழுதுமூன்று மூழ்கிஒரு
மதியங்குஅகறுமா முகன்கோயில் வலமாய்ப் புறக்கோ முகைமலியும்





உதகம் அருந்தி நீறுஅணியின் உயர்ஆதனத்தின் ஒருகுடைக்கீழ்
அதிரமுரச முழங்க உலகாளும் மகவைப் பெறுவரால் 546

தனதுகொழுநன் பரத்தையிலந் தணவாப் பிரியனாய்த் தனையே
மனதிற் கருதா துறவருந்து மடவார்அத் தீர்த்தத்தினில்பங்
குனிமாதத்துத் திரம்தொடங்கிக் கூறுமதிமூன் றினுமூழ்கில்
கனிவிற்கூடி இரதியைவேள் கலத்தல்போலக் கலந்திடுவான் 547

மணமதின்றி வறுமையினால் வருந்துமாந்தர் ஐந்துமதி
அணிஅங்காடி அறுமுகவன் ஆலயத்தை வலம்புரியின்
பணமார்அல்குல் அரம்பையர்தம் படிவமுற்றும் திரண்டு ஒருங்கு
நணியதெனப் பேரெழிலார்ந்த நங்கையாரை மணம்புணர்வார் 548

கல்விபொருள் மெஞ்ஞானமுறக் கருதுமவர் அத்தடமூழ்கி
அல்லும்பகலும் அத்தலத்தின் அயில்வேள் கடவுள் விழியருளாம்
செல்வந்தரு சந்நிதிநின்று தெரிசித்தோர் ஆண்டுறைவர் எனில்
பல்லோர் புகழ்சேடன் தன்பரவுஞ்சுகனேர் ஆகுவரால் 549

அணிமா முதலாம் சித்திபெற ஆசைஒருவர்க்கு உளதாயின்
கணியாய் உருவ முனம்எடுத்தோன் கருதுமயிலைப் பருப்பதத்திற்
துணியாஐந்து வருடமும் அத்தூய தடநீர் ஆடிஅவற்
பணியாநிற்பின் எய்துமெனப் பகர்ந்தார் ஆன்ற மேலோரே 550

அத்தீர்த்தத்தின் திருநாம மறையும்காலைச் சிவஞான
முத்திதீர்த்தம் சிவதீர்த்தம் மோனதீர்த்தம் மூவாத
பத்திதீர்த்தம் பாலசித்த தீர்த்தம்படிவோர் இட்டமெலாம்
மொத்தம் அங்குஅளித்தலால் இட்டசித்தி தீர்த்தம் எனஉரைப்பார்

எங்கள்பெருமான் சந்நிதிக்குஅங்கு எதிர்க்கீழ்த்திசையில் இந்திரன்தன்
பொங்கும்அன்பால் கண்டதொரு புதியதீர்த்தம் அதன்பெயரோ
துங்கம்உலவு வாசவதீர்த்தம் அதாம்அதனில் தோய்ந்தவர்கள்
கொங்கை அரம்பை மாதர்நலம் கொள்ளை கொண்டுஅங்கு உறைகுவரால்

அந்தமயிலை மலையில்வன்னி ஆக்கிநேயந் தனில்கேணி
வந்துபுரிந்து மூழ்கிமுனம் மலர்க்கைஅமைந்த பேறதனால்
இந்தநாளும் உலகினுளோர் ஏகிவன்னி தீர்த்தம்அதில்
சிந்தித்துஆடின் முடங்கள்எலாம் தீரும்ஐம்பான் பருவமதில் 553

தென்பால்நடுவன் அம்பரமன் திருத்தாள் உதையால் தேகமுடன்
என்புங்கலங்கும் தன்மையினால் இயற்றிஆடி இன்னறவி
அன்பார் தரும தீர்த்தம் அதில்ஆடினோர் வந்து அடர்பகைஞர்
தன்பால் வருந்தார் திடமேனி தாங்கிவாழ்வார் திண்ணமிதே 554



நிருதிதிசையின் நிருதிமுனம் நிருமித்தசுரர் தண்டனையால்
பொருதுவேலைப் பொடிஆகும் பொன்தண்டிகையை அதில்மூழ்கிப்
பரிதிஒளிர்போல் புதுக்கியதோர் பாங்கதாகு நிருதிநதி
அரிதின்அரிது அந்நதிப்பெருமை அளவைப் பகருவார் எவரே 555

குடபால்வருணன் இடங்கர்எனும் கூர்வாள்எயிற்றுவன் மீன்றன்
அடல்நீக்குதற்கோர் ஆண்டுபடிந்து அதன்பின்அல்லல் தீர்ந்தனனம்
மடலார்கமலம் அமருவிரிக்கும் வருணதீர்த்தப் பெருமையைஇக்
கடல்சூழ்புடவி தனில்யாவர் காண்போர் கதிர்வேலவன் அல்லால்

வடமேற்குஆகும் திசைஅதனில் வாயுமுன்னம் கண்டு அரவத்
திடமார் விடத்தை ஒழிப்பதற்குத் தினமும்படியும் தீர்த்தம்ஒன்று
புடவிதனில்வாழ் மாந்தர்அதில் பொருந்தி ஒன்பான் மதிமூழ்கின்
படவாயரவத் தால்வருத்தம் பாராதுஎன்றும் சீர்ஆவார் 557

தனதன்அவுணர் அருநிதியைத் தமதுவலியால் பறித்துஅகல
அனையஇடுக்கத்தால் வருந்தி அணியார்மயிலை மலைஅடைந்தே
இனியவடபால் ஒருதீர்த்தம் இயற்றிமூழ்கி ஏகுநிதி
தனைஉற்றான் இத்தடமூழ்கின் சகத்தோர் இழந்த பொருள்பெறுவார்

ஈசானத்தில் ஈசானத்து எம்மான் சிருட்டித்த உறுதீர்த்தம்
ஆசாபாசத் தால்உழலும் ஆன்மாக்களுக்குஅங்கு அருமையுடன்
பேசற்கரிய மெய்ஞ்ஞானம் பிறப்பித்து என்றும் சிவலோக
நேசமாக்கும் அந்நீர்தன் னீரைஎவர்க்குச் சொலுநீரே 559

வள்ளல் உறையும் திருச்சயிலம் அதனிற்கீழ்பால் வரைச்சரியின்
கள்ளக்கயலை வாட்டுவிழிக் கன்னியார்கள் இருவர்களும்
உள்ளமகிழ்வாய் நிருமிதம்செய்து உவப்பில் ஆடிஅச் செவ்வேள்
விள்ளற்கரிய உவகையினால் வேட்பமகிழ்செய்தடம் அதுவே 560

அத்தீர்த்தத்தின் பெயர்தெய்வ யானைவள்ளி தீர்த்தம் அதாம்
இத்தீர்த்தத்தின் மூழ்கிஅன்பின் எழிலார் மடவார் எனைஆளும்
சத்திஇருவர் தமைவணங்கின் தங்கள்கொழுநர் தமைத்தணந்து
நத்தாதுறினும் சேட்செலினும் நண்ணிமருவி வாழ்ந்திருப்பார் 561

**வேறு**

பாலசித்தர் இனிதுஉற்ற பீடமதில் பத்தொடுஐந்தின் அரசாய்வரும்
பாலசித்தன் எனும் மாதவக்குரிசில் பத்தகோடிகள் பரிப்பவன்
வேல்அணிந்த சிவசுப்பிரமண்யன் எனமேவும் ஞானகுண சேகரன்
மேல்அமைந்த மயிலா சலச்சிகரி மெய்த்திருப்பணிகள் ஆற்றினோன்

சத்தம்ஆதி விடயத்தை முற்றுபுத னக்குள்ளேவயமது ஆக்கினோன்
சத்துவத்து இடையறாது இருப்பன்மறை தன்கருத்தை அளவிட்டவன்
உத்தமர்க்குள் உயர்உத்தமன் உலகமித்தை என்துனி ஒழித்தவன்
பத்தர் தங்கள்உளம் வைத்த காமியம் அனைத்தையும் பரிவின் ஈபவன்

ஆகமம்பல கலைக்கியானம் அறிகின்றவன் துரிய நின்றவன்
வாகுலாவிய உருத்திராக்கமொடு நீறுதாரணம் வயங்குசெம்
பாகமாகிஉயர் காவிமேவுகலை பால்கொள்அன்புறு நிவேதனம்
யோகமான தவமேன்மை ஈகைஎழில் உற்றவற்கு நிகர் யாவரே 564

**வேறு**

அத்தகுசித்தன் மனத்தில்விருப்பொடும் அம்மயிலைக் கிரிமேல்
பத்தியின் மிக்கஇயற்றி விளங்கிடு பண்புறு நற்கூப
முத்தன்அருள் கடல்என்னவும் அத்தன் முடித்தலமேனதியாஞ்
சத்திவிருப்பொடு புத்திரனுக்குஎதிர் தங்கினள் என்னலுமாம் 565

அமராநம்தம் தீவினைஅகல அணிநீர் ஞாலமதில்
அமரானந்தம் கொண்டு விளங்கியது அன்றியும்ஆர் மதுவார்
ஞிமிரா நம்தம் கொண்ட கடம்பணி நிமலன் பதநல்கும்
குமரானந்தக் கூபம்எனும்பெயர் கொள்உயர் தீர்த்தம்அதே 566

**வேறு**

தரிசனத்தால் பரிசத்தான் மூழ்குதலால் அருந்துதலால் சனனம் தீரும்
கரிசுஅறு மாதவம் உண்டாம் கவலைஇலைஅவலம்இலை கல்வியுண்டாம்
அரியபயன் மாதவமுனிவர் தம்பதமும் கருதின்எய்தும் அல்லல்தீரும்
இருவினையும் ஒருங்குஅகலும் எண்ணின்அதன் சீரிணைத்து என்றுஇசைத்தற் பாற்றோ

எவ்வுலகும் தொழும்தலங்களின் மயிலைமலைத் தலமே இறைமையாகும்
எவ்வுலகும் தொழும்தீர்த்தங்களில் சித்ததீர்த்தமதே இறைமைத்தாரும்
எவ்வுலகும் தொழுமூர்த்தி களின்மயிலை மலைமுருகன் இறைவனாவன்
எவ்வுலகும் தொழும்அடியார் தமின்மயிலை மலைதொழுவார் இறைவராமே

அத்தலத்தின் முருகன்அமர் ஆலயத்தில் திருப்பணி ஒன்றுஆற்று வோர்கள்
எத்திசையும் புகழ்மருவ இவ்வுலகம் தனில்வாழ்ந்து இன்புஇகந்தேய் அந்த
முத்தநகை அரம்பை நல்லார் இருபுறம்சாமரை இரட்டமொழி ஒணாத
சித்திரமாம் அரியணைமேல் பொன்னுலகின் அரசுசெய்வர் திகழ்ந்துமாதோ

அளியாரும் தடம்பொழில்சூழ் திருமயிலைமலைக்குமரற்கு அன்பினோடும்
ஒளியாரும் திருவிளக்கு ஒன்றுஇடுவோர்கள் வானுலகத்து ஓங்கிஆங்குக்
களியாரும் அரம்பையர்கள் ஆயிரம்தீபம் கரத்தில்ஏந்த வாழ்வார்
துளியாரும் மலர்மாலை அணிவோர் கற்பக நிழலில் துன்னுவரால் 570



எந்தை அறுமுகன் அமரும் திருமயிலைமலைத் தலத்தில்
இன்பத்தோடும்கந்தமலர்த் தடம்ஒன்று கண்டவர்கள் பிறப்புஇறப்பைக்
காணார்ஆதிஅந்திவண்ணன் அமர்கயிலாயத்து அமர்வர்துன்பம்எலாம் அகன்றேஅன்னோர்
சிந்தையில் வந்தெழு மகிழ்வை யாவர்இனைத்து என்று உரைப்பர் தெரிந்துமாதோ

பால்இளநீர் அளையுதகம் எண்ணெய் அருங்கனிகள் இவைபண்பில்
தேடிவேலனுக்கு அங்குஅபிடேகம் புரிந்தோர் கள்தேவநல்லார் மென்மேற்கூடிச்
சீலமுடன் பனிநீரால் ஆட்டிஅரும்புனல் ஆட்டிச் செவ்வாய்ஊறும்
கோலஅமுது ஊட்டிஅணைத்திடு நலமும் பரகதியும் கூடுவாரால் 572

அணிமயிலை மலையில்வளர் அறுமுகவற்குஓர்ஆடை அன்பில் தந்தோர்
பணியவமரர்கள் யாரும் பொற்பீதாம்பரம் தரிப்பர் பரமன்பாலற்கு
அணிஒன்று தந்தோர்கண் மணிகள் புனைந்து எக்காலும் அழிவில்லாமல்
எணியவளம்யாவும் பெற்றுஇருந்திடுவர் அவர்பெருமை என்சொல்வேனே

கார்த்திகையார் திருமுலைப்பால் உண்டிடும் செவ்வாய் எழிலார் கந்தனுக்கு
நேர்த்தியதாம் அன்னநிவேதனம் செய்வோர் வானுலக நிருபராகிப்
பார்த்திடுதற்கு அரிதெனும் தேவஅமுதத்தைத் தினம்ஆரப் பருகிஎன்றும்
கூர்த்த பசிப்பிணி இல்லாப் பேறுஅடைவர் வீறுபுகழ் கொண்டுமாதோ

அப்பதியில் செய்ம்தருமம் அணுத்துணையாயினும் மேருஅளவாம் அன்றித்
தப்புறஆற்றிய பாவம் எத்துணையேனும் தினையாம் சாமிபாத
முப்பொழுதும் கண்டுதரி சித்தவர்கள் வினையகன்று முதல்வராகி
எப்படியும் இருந்தபடி புரந்திடுவர்அவர் சிறப்பை யார்சொல்வாரால்

**வேறு**

முருகவேளும்நம் சித்தரும் போர்தனில் முயன்றே
ஒருமையாகப் பின் அமர்ந்து உலகுஅளித்திடும் உவப்பால்
உருகி வந்துஅடி பணிபவர் தங்கள் உள்உவக்கும்
திருமலிந்து உயர் சிவனடித் தாமரை சேர்வார் 576

இனிமையாம் மயிலைத் தலத்து ஒருபாகல் இருந்தோர்
அனைகருங்கழன் மன்னராய் மாநிலம் புரப்பார்
துனைவிலோர் மதி இருந்தவர் மாதவம் சூழ்வார்
கனிவினோர் சமையிருந்தவர் வான்பதி காப்பார் 577

திங்கள் தோறும்சேர் கார்த்திகை நாட்களிற் சிறக்குந்
துங்க மஞ்ஞையம் கிரியினில் தூயநீர் ஆடி
எங்கள்நா யகன்இணையடி அருச்சனை புரிவோர்
தங்குபேரருள் செல்வமும் தழைத்துவாழ் குவரால் 578

மீனமாம்ஆதிப் பூரம்உத்திரம் எனும் வியன்நாள்
ஞானநாயகன் அறுமுகப்பரமன் நல்லருள்சேர்
வான்அளாஇர தாதிஉற்சவத்தினில் வணங்கும்
மானபுண்ணியர் பரன்உருமேவி வைகுவரால் 579

வான்எனும் சுவர்க் காதிபன் முதலவான வரும்
ஏனைஏழ்திசை இறைவரும் இயக்கரும் எவரும்
மானஅன்பினோடு அறுமுகம் போற்று உறவடையும்
ஆனஇத்தலம் மெத்தல நிகர்என வகுப்பாம்? 580

உவமைசொலற்கு அரிதெனும் மயிலைமலைத் தலப்பெருமைக்கு உவமைகூறும்
கவனம்உற்றேன்அதனை நினைத்திடும் காலந்தொறு நகைப்புஎன் கண்ணே தோன்றும்
தவமலியும் சிவஞான பாலசித்தனே பரசுந் தன்மைத்தானாற்
புவனமதில் எவர்புகழ்தற்கு அடங்குவது அத்தலமகிமை புகலுங்காலே

**வேறு**

இடபத் திங்களின் ஏற்றிடும் மாரன்ஆள்
அடைவிற் கூடிய அத்தினம் தன்னிலே
தடம் உலாவு மயிலைத் தலத்தினில்வேல்
படையினான் வந்து அமர்ந்தனன் பண்பினே 582

தங்கண் மாமிஎன் றோர்வகை சாற்றிடும்
துங்க நாளின் மிதுன மதிதனின்
மங்கை வள்ளிதெய் வானை இருவரும்
இங்கு மாமயிலைக் கிரி எய்தினார் 583

உற்றிடும் இடபம்மதி உட்பூசம்
கற்றையங் குழல் கன்னியர் தங்களை
முற்றவும்எனை ஆளும் முருகவேள்
கொற்ற மாமணம் கொண்டனன் ஆமரோ 584

எங்கள் சித்தன் இருங்கடல் வந்தநாள்
சிங்க மாமதி சீர்மிர்க சீரிடம்
திங்கண் மாமிதுனம் திருவாதிரை
பொங்கி லிங்கம தாப்பொலிவு எய்தினான் 585

இன்னநாளில் இலங்கிடும் அன்பர்கள்
சொன்ன மாமயில் தூய மலைதொழுது
அன்ன மேமுதல் தானங்கள் ஆற்றிடின்
மன்ன வாழ்வு மலிந்து மகிழ்வரே 586



**வேறு**

துன்றுகதிர் வேல்குமரப் பெம்மான்இன்பம் தூயதவச் சிவஞான பாலசித்தர்
கன்றுதருமயிலைப் புராணந்தன்னை அகநிறைபேர்அன்பினொடும் அணுகிக் கேட்போர்
வென்றிஉயர் புகழ்பெறுவர் கல்விமேன்மை விழுச்செல்வமனை புதல்வர் பேறுமேவிப்
பொன்றல்இலாவானுலகபோகம்மூழ்கிப் புண்ணியராய்ச்சிவபதத்தைப் பொருந்தி வாழ்வார்

**வேறு**

என்று சதுர்மறைக்குரிய சூதபுராணிகன் பரமன்இரு தாள்தன்னை
என்றும் மறவாது இருத்தி மயிலைமலைக் குகன்ஆடல் இனிமை எல்லாம்
என்று உலகில் இருள்அகற்றி ஒளிவிடுக்கும்பரிசு அதுபோல் யாரும்கேட்க
என்துகள் தீர்க்கும் கருணைப் பெருமையினால் அருமையொடும் இயம்பினானே

ஓங்குறு தண்ணளிச் சூதநைமி சாரண்யமுனி வோருக்குஓதத்
தாங்கரிய ஆனந்த மீக்கூரமொழி குழறத் தாரைகண்ணில்
பாங்கொடு வாரப் புளகம் பொடிப்ப முருகேசன் இருபதுமத்தாளைத்
தீங்ககலச் செங்கரங்கள் கூம்பஉளத்து இருத்திமகிழ் சிறந்தார் அன்றோ

**தீர்த்த மகிமைச் சருக்கம் முற்றிற்று**

**திருவிருத்தம்**

**வாழ்த்துப்பா**

வாழிமா மயில்வேதண்டம் வளரறம் வேதம்வாழி
வாழியெம் பாலசித்தன் மலரடி நிரைகோன்வாழி
வாழியா றெழுத்துகண்டி மன்னிய பூதிவாழி
வாழிநல் லடியார்வானம் வளங்கெழு முலகம்வாழி 590

**ஸ்ரீமயூராசலபுராணம் முற்றிற்று.**



## வசனம்

முனிவர்களே, அந்த மயூராசலத்தின் தென்கீழ்த்திசையில் செந்தாமரை மலர்கள் மலர்ந்து மணம்வீசி அழகு செய்யும் தகுதி வாய்ந்து என்றும் குறையா இயல்பினதாய் விளங்கும் பாலசித்த தீர்த்தம் ஒன்று உள்ளது. முன்னொருகால் தேவேந்திரன் அதில் முழுகிப் பஞ்ச தருக்களும் ஐராவத யானையும் அடையப் பெற்ற சிறப்பினது. பூவுலகத்தார் அதில் முழுகிற் சகல வியாதிகளும் நீங்கிச் சுகம் அடையச் செய்வது. குழந்தை-யில்லாதவர்கள் ஒருமாதம் முப்பொழுதும் மூழ்கி முருகனை வணங்கிக் கிரிவலம் வந்து கோமுகதீர்த்தம் உண்டு திருநீறு தரித்தால், உலகத்தை ஒருகுடையில் ஆளத்தக்க புத்திரனைப் பெறுவர்.

நாயகன் உரிமைபெற விரும்பிய பெண்கள் முழுகினால், அவ்வாறு எய்தப் பெறுவர். விவாகம் பெற விரும்பும் புருடர் ஐந்து மாதம் அதில் முழுகி ஆலயம் வலம்வரின், பத்தினியைப் பெறுவர். கல்வி, பொருள், ஞானம் இவைஅடைய விரும்புவோர் முழுகி இரண்டு காலமும் முருகன் சந்நிதானத்தில் வணங்கில் அவ்வாறு பெறுவர். அணிமா முதலிய அஷ்டமா சித்திகளையும் அடைய விரும்புவோர் அந்தத் தடாகத்தில் ஐந்து வருடம் இடைவிடாது முழுகி முருகனை வணங்கில் எய்துமென மேலோர் விரும்பினர். அந்தத் தீர்த்தத்துக்குத் திருநாமங்கள் சொல்லுங்கால், சிவஞான முத்தித் தீர்த்தம், சிவதீர்த்தம், மோனதீர்த்தம், பக்திதீர்த்தம், பாலசித்த தீர்த்தம், இஷ்டசித்தி தீர்த்தம் எனப்பலவாம்.

அன்றியும் சந்நிதானத்தின் நேர்கீழ் திசையில் இந்திரனால் அமைக்கப் பெற்ற தீர்த்தம் ஒன்று உள்ளது. அதன்பெயர் வாசவ தீர்த்தம். அதனின் முழுகுவோர் இந்திரலோகம் அடைவர். ஆக்னேயதிக்கில் அக்கினியால் உண்டாக்கப்பட்ட அக்னி தீர்த்தத்தில் முழுகினோர் முடம் தீரும். தென்திக்கில் உள்ள தரும தீர்த்தங்களில் முழுகினோர் சத்துருபய நீங்கிச் சுகம் அடைவர். நிருதி திக்கிலுள்ள நிருதிநதியின் பெருமை கூற முடியாது. மேல்திசையில் உள்ள வருண தீர்த்தத்தின் பெருமை முருகக் கடவுள் அல்லது வேறு யாவர் காணவல்லார். வாயுதிக்கில் உள்ள வாயுதீர்த்தத்தில் முழுகினோர் விஷபீடையின்றிச் சுகமுறுவர். வடதிக்கிலுள்ள குபேரதீர்த்தத்தில் முழுகினால் இழந்த பொருள் அனைத்தும் பெறுவர். வடதிசையிலுள்ள ஈசான தீர்த்தத்தில் முழுகினால் அஞ்ஞானத்தை நீக்கிச் சிவலோகத்தைக் கொடுக்கும். மலைச்சரிவில் வள்ளிதெய்வானை தீர்த்தம் ஒன்று உண்டு. அதன்புகழ் பல என விரிவுபடச் சூதமுனிவர் கூறிமுடிக்க, வினவிய முனிவர் ஆனந்த பரவசம் அடைந்து விளங்கினார்.

**வேலும் மயிலும் துணை**



## சிவஞானதேசிகப் பிரதாபம்

### பாயிரம்

### விநாயகர் துதி

திருமலியும் கயிலைமலைச் சங்குகன்னன் சிவன்உரையால் சேயாய்ப் பூவில்
வருபெருமைப் பாலசித்தன் தனக்குமுதல் சீடன்என வாய்ந்தமேலோன்
பொருவில்அருட் சிவஞான பாலையன்சீர் தமிழ்க்கவியால் புகலற்குஜங்கைத்
தருஅனைய மதமலைமா முகக்கடவுள் இருசரணம் தலைமேல் வைப்பாம்

### முருகக் கடவுள் துதி

குஞ்சரி வள்ளிஎன்னும் கோதையர் இடைவேல்ஏந்தி
வஞ்சம்இல் அடியார்காண மயின்மிசை வயங்கும் வள்ளால்
தஞ்சம்என்று உனைஆட்கொள்ளும் தவச்சிவ ஞானிதன்சீர்
மிஞ்சணித் தமிழில்நாயேன் விளம்பிடத் தயைசெய்வாயே 1

### கலைமகள் துதி

விருத்தகிரித் தியாகரா சக்கவிஞன்மயூரகிரி மேன்மைதன்னில்
திருத்தமெய்ப் பாலசித்தன் தன்புழ்ச்சீர்நன்கு அமைத்துச் செப்பியுள்ளான்
பொருத்தம்உறும் அவன்அருள்சேர் சிவஞானி பெருமைஅதில் புகலாஆற்றால்
கருத்தில் விளங்கிட உணர்த்திக் கருணைபுரிவாய் தவளக்கலை மின்னாளே

### அவையடக்கம்

ஒருமாங்கனி தான்எடுத்ததுகண்டு உள்ளம்சினந்து தொடும்ஒருவன்
கருமாமதலி வசமாகக் கவிகூறியபா வலன்அனையார்
திருவார் உணர்விற் தெரிந்துஓதும் சிவஞானியின்சீர் சிறுமதியேன்
ஒருவாறுஓதத் துணிந்ததுஎண்ணி உலகிற்பெரியோர் நகைப்பர் அன்றே

துலங்கு எமதுகுரு ஆகும் திருப்புகழோன் கவுமாரத் தொகையூடந்நாள்
நலங்கொள் சிவஞானபா லையன்பெருமை சொலித் துதித்த ஞாயத்தாலே
மலங்குதுயர் அறுத்து அருளும் அவன்பெருமை யானும் இங்கு வழுத்தல் உற்றேன்
சலம்குலவு கடற்புவில் சற்சனர் நன்கேற்பரென்கை சரதந்தானே

### பாயிரம் முற்றிற்று

## நூல்

### எழுசீர் விருத்தங்கள்

நிலம்பொருந்திய மலபலநாட்டினு நிறைபல சிறப்பெல்லா
நலம்பெறப்பொலிந்து உளதுஅருள்கன்னட நாடதாம்வசவேசன்
துலங்கி எண்ணிலாச் சிவன்அருட்சங்கமர் தோய்ந்துபல் விளையாடல்
விலங்கனார்களும் தெரியஆற்றியதொரு விதம்தெரித்திடு மாதோ 5

அல்லமன்றிரு அருள்உருக்கொண்டுதன் அடித்தொழும்புறு தொண்டர்க்கு
அல்லல்போக்கிநன்று ஆற்றியபெருமைமுன் நாம்புகழி னதாகும்
வல்லகந்த தேசிகனெனோர் பெரியனம் மகிமைநாட்டினை நீங்கி
வல்லிபாகர்மல் லிகார்ச்சுனகிரித்தலம் வந்துதங்குபு போற்றி 6

சிவபிரான்அருள் சென்னிஏற்று அன்புடன் தென்திசை தனிற்செல்கா
நவமிகும்பொழின் மலையனூர் எனும்பதி நண்ணி நீரிடை ஆழ்ந்த
உவமைதீர்மர சுதத்திருக்கடகந்தன் உயர் கரத்தினில்தானாச்
சிவனுமாறருள் காட்டவந் நாட்டுஇறை சிந்தைஅன்பது பொங்கி 7

சிவிகையானைமா முதல்பல விருதுகள் சிறப்புடன் தரக்கொண்டே
அவிவுறாப் புகழ்த் தில்லையம்பதியில் வந்துஅன்பினர் தொழவாழ்ந்து
புவியுளோர் பச்சைக் கந்ததேசிகன்எனப் புகலஉற்றனன்அன்னோன்
திவியநன்மர பினில்பிறந்தவள்ஒரு சேயிழை திருப்போல்வாள் 8

## அவதாரம்

அவண்மணப்பரு வத்தில்நாயகன்கடி யாற்றியுமகப் பேற்றில்
உவகைஎய்திடா மையில்உளம் சலித்ததால் உயர் மலைப்பெருமுக்கல்
சிவமுறத்திகழ் பாலசித்தன்புடை சென்றுஅடி பணிந்துஅன்னான்
நவமதாய் உணவனுரைப்படி தின நற்சதுரக்கள்ளி 9

என்னும்ஓர்மரத்து அமைந்தபால் கறந்துவந்து இனிதுஅளித்திடு தொண்டே
தன்னுரித்துறு தவம்எனப் புரிந்திருந்தனள் நெடுநாட் செல்கால்
மன்னுபாலசித் தேசனோர் தினம்திரு மனத்தருள் சுரந்துண்ட
பின்உயர்ந்தபால் சேடமாம்பகுதியப் பெய்வளையுணத் தந்தான்
10

அதனை வாங்கி அன்புடன் பணிந்து உண்டதால் அம்மைவைப் பெயரம்மை
மதனைநீற்றுகட் பரன்அருள் கொடுதன்ஓர் வயிற்றுஇடை கருவாகி
விதனம்இன்றி ஈர்ஐந்து திங்களில் வியப்புறும் அதிரூபச்
சுதனை நல்கினள் சுரர்மலர் தூர்த்தனர் துதித்தனர் புவியோரே 11

## முருகன் அநுக்கிரகம்

அந்தமாதவச் சுதன்இதமாவளர்ந்து அழகுமிக்குற தங்கிச்
சொந்தம் ஆரருள் சித்தர்தம்பணித் தொழில் தோய்ந்திருந்தனன் அந்நாள்
கந்தநாயகன் பாலசித்தன்தன்உட் கருத்தினை நிறைவேற்றச்
செந்தகைத் திருஉளம் கொடுஅச் சிறுவன்மேல் திருக்கண்ணோக்கம் சேர்த்தே

அரியசந்நியா ஆச்சிரமம்கொடுத்து ஆசிரியத் தன்மைக்கு
உரியனாம் அபிடேகமும் புரிந்துதன் ஒருகலைஅமைவித்துப்
பிரியமாகநீ பாலைஉண்டு அருள்நெறி பேணிஎண்ணறு தொண்டர்
பெரியதோர் சிவஞான தேசிகப்பெயர் பேசவாழ்கெனக் கூறி 13



வளம்கொள் பொம்மமா புரத்தினில் அமைந்தநன் மடாலயத்து இடைவைத்துக்
கிளர்ந்தஇத்தலம் பிரமமாபுரம்எனக் கிளர்களன்று உரைத்துஅப்பால்
விளங்குபாலசித்தன் தனோடுஅருள்மயில் வெற்பில் வந்துஒருசூரன்
உளங்களிக்க ஓதியபடிதேவிமார் உடன் அமர்ந்தனன் மாதோ 14

**பாலசித்தர் ஐக்கம்**

அந்தவாறு இருக்கையில் அருட்சித்தன்தான் ஆனிமாதத்தூடே
வந்தஆதிரை நாளில்வேல்குகன் தளிவயங்கு தென்புறம் தோயும்
சுந்தரத்தனி இலிங்கமாம் அதன்இடை தோய்ந்து இரண்டற நின்றான்
செந்தைத்திரு அருள்பெறு மேலவன் சீர்எவர் தெரிவாரே 15

தனதுதேசிக னாம்முதற்பாலசித் தன்சிவவடிவாகிக்
கனமிகுந்திரு மயிலவெற்புஅதன்இடை கவின்றசீர்தெரிந்தஅன்பால்
மனநெகிழ்ந்துஎழில் பொம்மையபுரத்துஇடை வதிந்தபாலையன் எய்தி
யனகமெய்த்துதி பலசொலித் தலைபுவி அதில்படப் பணிந்தனானால்

**தோத்திரம்**

கயிலையில்சிவ கணத்தலையாம் சங்குகன்ன நாயக போற்றி
சயிலமாமகள் உரைப்படி வாவியாய் தங்கு காவல போற்றி
பயிலும் ஈசனைத் தடைசெயாது இருந்தனோன் பகர்சொல் ஏற்றவ போற்றி
மயிலமாமலைத் தலைமிகுதவம்புரி வள்ளல் உன்கழல் போற்றி 17

வள்ளிதேவ குஞ்சரிஎனும் இருவரும் வலிதடைந்திடக் கண்டே
தெள்ளிதிற் புதல்வியர் எனக்கொடுபுரந்திடு திறத்தினை போற்றி
கள்ளியைந்த பூங்கடம்பு உடைக்குமாரன்ஓர் காளையாய்ப் படைதாங்கி
நள்ளிஉள்புக வருதல் கண்டுஅருஞ்சமர் நடத்து மாரத போற்றி 18

அவன்தன் மெய்அருளால் அவன்அடிதொழல் அமையும் என்றுஅருள்வேத
நுவன்றவாறு பின்குகன்எனத் தெரிந்தமா நுண்ணறிவினை போற்றி
சிவந்தவேலவன் தனக்குஅவன் தேவியர் சேரநன் மணம்ஆற்றி
நிவந்த வெற்பின்நின்று உலகுஎலாம் சிவநெறி நிறுத்து மாதவ போற்றி

என்னை உன்னருள் உணவின் பாற்சேடத்தாலிகத் துதித்திடச் செய்து
பின்னைவேலவன் கடைக்கண் மெய்யருள்உறப் பெரிதுஉதவினை போற்றி
தென்னைசூழ் மயிலாசலக் குகன்அருள் திருவிளக்குஒளிஆகி
அன்னைபோல்அடியவர் விருப்பனைத்துநல்கு அருள் குருபர போற்றி

சிவனுமால்குகன் சிவையும் ஐங்கரத்தனும் செங்கதிரவன்ஆதி
யவரும் உன்தனை அலதுஇலைஎனும் நிசம்அறிந்தனன் எனப்பல்வாறு
உவமைதீர்துதி பகர்ந்து பொம்மயநகர் உயர்மயின் மலைஎன்னும்
தவநலப்பதி இரண்டினும் உரியநல் தருமம் யாவையும் செய்தான் 21

**வேறு விடமீடை நீக்கல்**

அந்தவாறு இருந்தசிவ ஞானதேசிகன்தான்
அருள்மலிவால் காஞ்சிநகர் அடைந்துசிவை தழுவச்
சந்தமார் உருக்குழைந்து வடுச்சுமந்த மேனி
தாங்குதிரு ஏகம்பன் தன்எதிர்நின்று இறைஞ்சிக்
கந்தமா மலர்கொடுஅருச்சனை புரிந்து வணங்கிக்
கவின்றிடு நாள்அங்குஒருவன் கட்செவியின் விடத்தால்
வந்ததீங்கு அறநீறு வழங்கிஅருளினன் அவ்
வயின்என்றும் விடபயம்பின் வராதுஅறம் செய்தனனே 22

**சூலைநோய் நீக்கல்**

அருள்விளை ஆடலின்விவரம் வினவிஅந் நாளஅரசாய்
அந்நாட்டு உற்றிடு துலுக்கன் ஐயம்வியப்பு அடைந்து
பொருவருதன் மனையவட்குஎய் தியசூலைப் பிணிதான்
போகஅருளுதி என்னப் புகன்று வணங்கினனால்
இருள்செறியன வன்அசைகண்டு உன்னதகச் செருக்கால்
ஏகம்பநாதர் தளிக்குஇருந்த பொருள்நி பந்த
அருகஅப கரித்தனைமுன் போல்விடுகஎன்று ஓதி
அங்கைவெண்ணீறு ஈந்தந்நோய் அகற்றிஅரு ளினனே 23

அம்முனிவன் தன்னருளான் மனைவியினோய் தீர்ந்த
அதுதெரிந்துஅம் மிலேச்ச மன்னன் அகமகிழ்ச்சி பொங்கிக்
கைம்முகிழ்த்து வணங்கியே கம்பர்திருக் கோயில்
கடமையைமுன்னினும் அதிகம் கவின்அமைத்து இந்தச்
செம்முனிவன் தனக்குநிலம் விடுத்துமடம் அமைத்தான்
சேர்ந்து அடியார் புகழஅன்ன தானமுதல் இயற்றி
நம்உரிமைச் சைவநெறிப் பயிர்தழைய நீர்பெய்
நன்முகில்போல் அருள்மாரி நயந்துபொழிந்து இருந்தான் 24

உண்ணல் உடுத்திடல் உறங்கல் உலவல்பொருள் அசைமுன்
ஓதும்வினைக்கு இலக்காய்வந்து உதித்தவரே உவப்பாய்
நண்ணல்உற்றுஅங்கு இருந்திடுவர் உலகில் அன்பர்க்கு உண்மை
நன்குதுலக்கி இத்தவச்சீர் நல்கஅவ தரித்த
பண்ணவனாம் சிவஞான பாலையமா முனிவன்
பதிக்காஞ்சி விடுத்துவெளிப் படர்ந்து பல்லூர் சென்று
திண்ணமனத் தினர்பலர்வாழ் சேயூர்வந்து அணைகாற்
சிலர்வீர சைவநெறித் திறல்அறியாது அந்தோ 25

**மணலைச் சீனியாக்கல்**

உளத்துஇடை வஞ்சகம் அழுக்காறு உற்றுஇருமட் குடத்தில்
உபசார முறையென வெண்மணலொடுகல் அடைத்தே



தளப்புதுமா மலர்மாலை கலைதரித்துக் கொணர்ந்து
சந்நிதிமுன் செலுத்திமுகமன் புகன்றார் அதனைக்
களக்கமறும் விளக்கம்அதால் உணர்ந்துகுகப் பெருமான்
கழல்கருதி ஒருவனைக் கொண்டு எடுத்துஎவர்க்கும் அளிக்கக்
குளக்கசிவும் கற்கண்டுச் சுவையும்உறக் கண்டு
கும்பிட்டார் வம்பிட்ட குழுவினர் யாவருமே 26

திருவருளின் செயல்அறிந்து தமதுபிழை தீரச்
சிவஞான முனிவன்உளம் சிறந்தமகிழ்வு எய்தப்
பொருவருசெய் வழங்கிஅன்னான் இருக்கமடம் செய்து
போற்றினர் அக்காரணத்தால் செய்யூர்என்று உலகோர்
தருபெயரப் பதிஅமைந்த துஅங்குசில காலம்
தங்கிமகேச் சுரபூசை தவத்திரு ஆடல்கள்செய்து
இருள்அறு தென்திசையின்வழி ஏகிஅணித் தில்லை
இறைவன் அருள்நடம்புரிபொன் எழிற்சபைகண் டனனே 27

**சிதம்பர தெரிசனம்**

புலியொடுபாம்பாம் இரண்டு முனிவர்தொழப் பரமன்
பொற்புமலி சிவகாமி அம்மைஎதிர் காண
ஒலிதரு வேதச்சிலம்பு புலம்பநடம் புரியும்
உயர்பரமா னந்தநிலை உத்தமன்கண்டு இறைஞ்சி
நலிவுஅறப் பல்கால்இருந்து பின்அரிதின் நீங்கி
நலமலிகா விரிவடபால் தலம்பலகண்டு அப்பால்
சொலிபுகழ்த் தென்பால்சிவன்வாழ் கோயில்களும் துதித்துச்
சோணாடு கடந்துதமிழ்ப் பாண்டிநாடு அடைந்தான் 28

**மதுராபுரி சேர்தல்**

**வேறு**

பொன்கழல்உருவன் அங்கயற்கண்ணி பொருந்தஆழ்ஆல்வாய் இதுஎன
மங்கையர்க்கரசி உடன்குலச்சிறையார் மாண்புஅமைந்து எமதுசம்பந்தர்
சங்கைதீர் அருமைப் பதிகத்தில் துதிக்கும் தமிழ்த்திரு மதுரையம்பதியில்
கொங்கைமாதர் கண்மால் ஆதியேடணைதீர் குணம்கொள் பாலையமுனி குறுகி

சுகம்பொலி மலயத்துவசன் வேள்வியினில் துலங்குமுத்த னத்துடன் தோன்றி
இகம்பெறும் அரசர் பலர்தொழ முடிபூண்டு இருந்தநற் தடாதகைஅம்மை
நகம்பெறு சிலையார் தம்எதிர்நாணி நன்மணம் முடித்துஅரசளித்தே
அகந்தவிர்உரிமைக் குறள்உணவுஉண அன்றுஅளித்திட முடிவுறாது அங்கு

வருந்திட இறைவன் அன்னவான்குழிதான் வருத்திப் பின்அழைத்ததாம் வையைப்
பெருந்துறைபடிந்து பூசனைதியானம் பிழைஅற விதிப்படி முடித்துப்





பொருந்து நல்வாத புரித்தவ அந்நிமித்தம் புராரிமண்சுமந்து வேத்திரத்தாக்கு
அருந்தியமகிமை ஆதிய கருதி அருள்கொள் சுந்தரேசன் முன்பு அடைந்தான்

### மகப்பேறு வழங்கல்

அன்புஅது பெருகத் தொண்டர்கண் முறையில் அனந்தமாத் துதித்து மீன்நோக்கி
நன்பதுமத்தாள் பணிந்துசின்னாள் தான்அநயந்திருந் தனன்அந் நகரின்
மின்பயிலுறு பானான்கு அருள்ஆடல் விளக்குமோர் சித்திரப் படாந்தான்
வன்பறும் ஒருதையல் எழிலாளன் வனைந்தனன் மகப்பெறன் மதித்து.

அப்படாம்தனை அம்பிகை சிவஞானிக்கு அளித்திடுகெனப் புகன்றனள்கண்டு
எய்ப்பப் பகன்றுஉவகை மலிவுடன் வணங்கி இனிதுஅளித்தனன் கொண்டுஞானி
கைப்படிதிருநீறு உதவலான்முதுமை கழிந்துநல் யௌவனப் பருவச்
செப்பமும்அரிய புத்திரப் பயனும் செல்வமும் பெற்றனன் அவனே

### பொம்மபுரம் அடைதல்

அன்னவாறு அனந்தத் திருவருள்ஆடல் அன்பர்கள்அறிதரவு ஆற்றிப்
பின்னமின்மகிமைத் தவச்சிவஞானி பெருமைகொள் பழமலைப் பதிபோய்க்
கன்னல்வில்லியைநீற் றியசிவன்உமையாள் கழல்பணிந்து இருந்துபின் கடனீர்
நன்னர்ஒலிடலால் செயந்திமாபுரம் போல்நலம்கொள் பொம்மபுர நயந்தான்

நல்லவர் ஒருவர் உருளர்எனில் அவரான் ஞாலம்எல்லாம் மழைபெயக் கொண்டு
அல்லல்அற்று உய்யும் எனும்மறைப்படிஇவ் அருள்சிவஞான தேசிகனால்
வல்லதம் விருப்பம் பெற்றவர்தீங்கு மாறிமேல் வழிதெரிந்திட்டோர்
சொல்லவோர் அளவில் அடங்கிடாது அன்பர் துதித்திடச் சிலகதை சொலலே

தெய்வம்இன்று அருளின்று உத்தம நூல்கள் செப்பிய அறங்கள் வீண்என்று
பொய்வளர் அகத்தால் புகன்று உழன்றிடும்வெம் புலையருக்கு இவையெலாம் பொருந்தா
கைவருதவத்தால் எதிர்அருட்சித்தி காட்டுபுக டிதலே கடனா
மெய்வரும் உளத்தோர்க்கு உறுதிதந்திடவே விளங்குநூல் இனங்கள் வாய்த்தவைால்

முகிலினம் தனக்கோர் பயன்விழைவின்றி முறைபெறப் புவிஉயிர் முளைத்துத்
திகில்அற வளர்ந்து செழித்திட மழைபெய் திரம்எனப் பெருந்தவர்தாமும்
அகிலம்ஈதுஒன்றும் பெறவிரும்பார்ய் அருளினுக்குஒரு பெரும்சான்றாப்
பகர்முகத்துஅடிமைப் பண்புஅதும் காட்டிப் பரத்தில் ஒன்றாய்க் கலப்பாரே

### உலகினர் பயன்பெறல்

வருத்தைதான்படூக்கில்ஈத்திரள் மணத்தால் வந்துமொய்த்திடுதல் போல்வனத்தின்
மருப்பொலிமலர்தான் விரியில்வண்டு இனங்கள் வலியவந்துஇனியதேன் உணல்போல்
உருக்கமார் உளத்தில் பெருக்கநல் அருள்சீர் உறுசிவஞான தேசிகன்தன்
விருப்புடன்பகைஅற்று உயர்தவத்து அமைந்து விளங்குநாள் விளைந்துஅமை விள்வாம்



கருணையே வடிவா முனிவன்பால்அடைந்து கண்ணிலார் செவியிலார்கைகால்
அருகியமுடவர் வாயிலாமூகர் ஆதியோர்களும் கொடும்சூலை
பெருகுகாமாலை வெப்புடன் குட்டம் பிழைபடு காசம்ஆதியநோய்ப்
பருவரலினரும் பணிந்து நீற்றொடுகண் பார்வைகைப் பரிசு நல்வாயால்

வழங்கும் வார்த்தைகள்பெற்று அக்குறைதவிர்த்து மகிழ்ந்தனர் அதுவும் இல்லாமல்
முழங்குமந்திர வாதர்கண்மொழிக்கு அடங்கா முரட்கொடும்பேய் வசமாகி
உழன்றவர் இந்தப் பெரியனா லதுன்பு ஒழிந்து வந்தனர் அந்தவாய்மை
தழங்கலாம்ஒருமுடன் உட்பொறாமையினில் தயங்கிப்பின்இது செய்வான்மன்னோ

## அரசன்மகள் குழல்நரை மாற்றல்

செஞ்சிஎன்பதியில் அரசியல் செலுத்தும் திரியம்பகப் பெயர்இறைபால்
அஞ்சியேயோய்நின்று உன்னதுஆளுகைக்குள் அமைந்த பொம்மபுரம் அதனின்
மிஞ்சியகபடத் தினன்ஒருதவசி விளம்புபேரோ சிவஞானி
வஞ்சியாஉலகர் தனைவணங்கிடப்பல் வகைபுரிந்தே நடித்துள்ளான்

உண்மையும் பொய்யும் உணர்ந்து நன்றினைவைத்து ஒழிந்ததை விலக்குதல் உலகுஆள்
வண்மைதோய்இறைவர் கடமைஆதலின்அவ் வகைதெரிந்தவனை நீக்குகஎன்று
உண்மைசொண்டவன்போல்இயம்பல்கேட்டுஇறைவன்இனியதன்மகள்இளமைமுதல்
வெண்மையார்குழல்வாய்ந்த அவளையும் உடன்கூய் வியன்செறி பொம்மபுரத்தில்

சரவணோற்பவ சண்முக குருபரன்தன் தனிக்கலையாய்ச் சிவவேடக்
குரவனாத் திகழும் திருச்சிவஞானி குளிர்அருள்திருமுன்பு குறுகிக்
கரஅறுசரதப் பத்திகொண்டு அடியில் கனகமாமுடி படப்பணிந்து
பரவியோர் தனது குறையினைப் பயந்து பகர்ந்து வேண்டினன் முனிப்பார்த்து

இருளும் அஞ்ஞானக் கறைஎலாம் தவிர இலங்கு மெஞ்ஞான மெய்யொளிதந்து
அருள்புரிதனது கையினால்திருநீறு அள்ளிஅம் மகள்தலைமிசை தூய்த்
திருமலிநுதலில் தீட்டினன்சிகிமேல் திகழ்குகன் அருள்பெருந் திறத்தால்
கருமுகில் அனையநிறம் கொடுகூந்தல் கவின்றது கண்டனர் பலரும் 44

மனத்து அழுக்காறு கொண்டவர்க்கு இகலோர் வாதைசெய்திடத் தவறிடினும்
கனத்ததீங்களித்தற்கு அஃதுஒன்றேசாலும் எனும்கவின் மறைக்குஒரு கரியாய்ச்
சினத்தகைப் பதிதன் எவ்விதத்தேனும் திருமலிமுனிவனைப் பதிவிட்டு
அநந்தமெய் துறவோட்டிடுதலுள் கருதிஅரசன் பால்இது சொல்வான் பின்னும்

## கடல்கடந்து கரைசேர்தல்

இந்தஓர் முனிவன் செயல்அருள்வலியன் இயைந்த தந்திரத் தொழிலேயாம்
சொந்தமாம்எனது திறமும் இன்னவன்தன் துகள்உறு நிலையுநீ தெரிவான்
சந்தநீர்க் கடலின் இடைஎமைக்கொடுபோய்த் தள்ளுதி புரைஅறக் கரையில்
வந்துஅமைந்திடுவோர் தகுதி கண்டுஅப்பால் வணங்குதி என்றனன்மாதோ

அரசன்அம்மொழிகேட்டு அருமகள்குழல்பண் பறிந்ததே சாலும் என்றுஅறையாது
உரம்உறுமுனிவன் குறிப்பும் அவ்ஆற்றிற்கு ஒத்ததுஓர்ந்து ஒருபெரும் தோணி
விரவஅம்முனிவன் தன்னை மாந்திரிக வீணாம் அவலன்உடல் ஏற்றிப்
பரவையுள் சேய்த்தாச் சென்றுநீரிடையே பதியவிட்டு இருங்கரை சார்ந்தான்

பிறப்பினோடு இறப்பாம் கடலினைத் தவமாம் பெரும்புணைத்துணைகொடுதாண்டிச்
சிறப்பதாம் கதிஎய்திடப் பலர்க்கு அருளும் திருஅருள்சீர்ச் சிவஞானி
மறப்பகைக் கொடியோன் தான்புரிதிறத்தால் வாரிதிப் புனல்இடை மூழ்கி
இறப்பினோ அரசற்கு அறப்பயன் அளிப்பான் இறைவன் வந்திடுமுன் வந்துஇருந்தான்

**மாந்திரிகனைக் காத்தருளல்**

அத்திறம் தெரிந்த மன்னன்மாமுனிவன் அடிமலர்பலதரம் பணிந்து
சத்தியப் பரமாம் குருபரவுஉனது தன்னிகர் பெருமை ஓர்ந்தமையும்
புத்திஅற்றவன் வாரிதிப் புனல்விடுத்துப் புவியுறாது என்னென வினவ
மத்தியில்ஒரு மீன்தனக்கு இரையாகி மரித்தனன் எனச்சொனான் மன்னோ

அதுதெரிந்து இறைவன் முனிகழல் வணங்கி அறிவிலாஅவன் பிழைபொறுத்துஉன்
பொதுநிலைக் குணத்தால் உயிர்பெற மீட்டுன் புகழ்பகர்ந்துயச் செய்என்று இரந்தான்
விதுஉறழ்கருணைத் தவன்அவாறுஅழைக்க விரைந்து மாந்திரிகன் வந்துஇறைஞ்சிக்
கதுமெனத் தன்மைஉற்று அடியார் கணத்திடைகலந்து அமைந்தனனே

சமணர்வாகீசர் தமைக்கலோடு இணைத்துச் சலதியில் தள்ளினர்அவர்தாம்
விமலஐந்து எழுத்தின் பதிகம்ஓதுபுபார் மீதுவந்தனர் எனும்சரதம்
குமரநாயகன்மெய் அருள்கொள் இன்னவனால் குன்றின்மேல் சுடர்எனக் குலவி
நமதுசற்குருவாம் பெரியன்மீது அன்புநன்கு அமைந்திடச் செயுமன்றே

தீயர்பால்உறவாய் இருக்கினும் இன்னல் செறிந்திடப் புரிஅருள்உண்மைத்
தூயர்தம் இடத்தில் பகைக்கினுநலமே தோயும்என்றிடு நிசம்இந்த
மாயமாந்திரிகன் உடன்சிவஞானி வயின் விளங்கியதுஎனப் பலரும்
சேய்அருள்பெருமை உணர்ந்தனர்ஆகித் திருமலிதொண்டு செய்திருந்தார்

**அரசன் மடாலய நிபந்தம் அமைத்தல்**

**வேறு**

இவ்விதமகிமைத் திருவிளையாடல் இனையோர்ந்த
செவ்வியதிரியம் பகன்எனும் மன்னன் திகழ்நெஞ்சில்
ஒவ்வியமகிழ்வுற்று அச்சிவஞானி உறைதற்காம்
திவ்வியமடநல் தொண்டர்கள்பூசை செயும்மேடை 53

சற்சாத்திர பாடங்கள் உரைத்திடு தனிமேடை
நற்சாரப் பலவிதஅமுதுஅடியவர் நனிஉண்ணும்
பொற்சாலைப் பொலிவுஆதிஅமையப் புரிவித்தே
கற்சாபப் பரசிவன்அருள் வாழ்வது கைக்கொள்வான் 54



விளைநிலமானியம் ஆதியசாதனம் மிகநல்கித்
துளைபடுகைக்கரி பரிமுதல் விருதுகள் தோய்வித்தான்
இளையகுமாரக் கடவுளொர் கலைஆகிய மேலோன்
தளைஅவிழ் மலரால் அருள்அவன்மேவத் தயைசெய்தான் 55

இவையும் அலாமல் சிலநகரங்கட்கு இடைநல்லோர்
சுவைமலிஅன்னம் உணத்திருமடமொடு தொகுபூமி
நவைதவிரச் சிவஞானி மிசைக்கொளு நல்அன்பால்
சிவைஒருபாகத்து அரன்எனநாடிச் செய்தானே 56

அவ்வளவும் சாந்தானிக முறையறமாக் கொண்டு
செவ்வடிவேல்மன் னனைஅடியாரொடு சேர்த்து ஆண்டான்
பௌவம் அதற்குஅரு கவிர்பொம்மபுரப் பதிஊடும்
கௌரவச் செஞ்சிகி மலையின்சின கரமூடும் 57

நித்தியநைமித் திகம்எனும் உயர்அற நிகழ்வித்துச்
சித்தியனந்தம் தினமும் இயற்றிச் சிவஞானி
சத்தியஆனந்தத் திருநிட்டை தனில்தோய்ந்தான்
அத்திய நடுநாட்டினில் உயர்பழமலை நகர்ஆள்வோன் 58

**சிதம்பரபூபதிக்கு அருள்**

சிதம்பரபூபதி என்றிடுபேர் உளசிறு மன்னன்
சுதந்திரமார் தனது ஆட்சியை அந்நியர் தொகைகொள்ள
மிதந்த களிப்பறு நெஞ்சுடன் ஐயம் விழைந்தேற்றுஉண்டு
இதந்தரு மேலவர் தொண்டுசெய்து உயநலம் எனஉன்னி 59

துணிவொடு பொம்மபுரச் சிவஞானி துணைப்பாதம்
பணிகுபு தொண்டுபுரிந்து உறுநாள் அவன்பக்கத்தில்
அணிதருசேனை கொடி கலவரைச் செறஅணிநீறு
தணிவில் புகழ்த்தவ சீலன்அளித்து அத்தகைசெய்து 60

அங்குசிதம்பர வண்பெயர்கொண்ட அருள்தொண்டன்
மங்குதல் இன்றிய செம்பணி கொண்டு வயங்கு அன்பர்
கொங்கு மலிந்திடு கஞ்சநிகர்ந்த குணம்தங்கும்
குங்குமகந்தபதம் தொழஅங்கு குளிர்ந்தானே 61

அண்ணல் வளம்பொலி பொம்மபுரம் தனில்அருள்வீரர்
எண்ணவிளங்கினன் எண்ணறு விந்தையி லங்கிற்றால்
வண்ணநலம்குலவும் விரிசெந்தமிழ் மதிமேயோர்
பண்அமையும் துதிபன்னி விரும்பிய பயன்உற்றார் 62

### சிவப்பிரகாசசுவாமிகள் வரலாறு

#### வேறு

கச்சிநகர் உறைபவன்ஓர் வேளாளன்சிவாகமற் கலைகள்தேர்ந்தோன்
உச்சிதமாம் சமயவிசேடங்கள் நிருவாணம் எனும்உயர் முத்தீக்கை
மெச்சிடப் பெற்று ஆசிரியா அபிடேசுமும் கொண்டுஅருளி லிங்கம் விளங்குபூசை
நச்சிஇயற்றிடு முதியோன் அருணை பணிந்திட விழைந்துஅந் நகர்சேர்நாளில்

தன்னது பூசைக்குரிய பெட்டகம்காணாது மனம் தயங்கித் தன்பால்
அன்னர்உறு பரிசனரை வினவமுன்றங்கு இடைமறந்த நவைசொற்றிட்டார்
அன்னவரில் ஒருவனை அஃதுஎடுத்து வரச்செலுத்தி உண்ணாது அயர்ந்து சோர்ந்தான்
கன்னன்மொழி உமைபாகர் கனவில் அவிர்ந்து இவ்வாறு கழறலானார்

அங்கசுமும்நல் இலிங்கசுமும்வெவ் வேறாவைத்து அருச்சனைசெய்ததனால் இந்தச்
சங்கடம் எய்திட நேர்ந்தது இரண்டுபடாதுஅங்க லிங்க தாரணம்செய்து
இங்குஅரியபூசை புரிந்திடும் வீரசைவநெறி இசையக் கொண்டு
பங்கமறவாழ்க உன்பூசைப் பேழைவைகறை நின்பால் வந்துஎய்தும்

இந்தவருணைத் தலத்தில் இன்னவன்பால் தாரணம் கொண்டிடுக என்றுஓதும்
செந்தகைய மொழிவினவி மகிழ்ந்தவணம் வரப்பெற்றுச் சிவலிங்கத்தை
நந்தலில் வீராகமநூல் வழிகுரவன் தரஉணர்த்தி நன்குபூண்டு
சொந்தம்உறு பலர்க்கும்அது புரிந்து தன்ஊர் அடைந்து பலர்துதித்த வாழ்ந்தான்

அன்னவனுக்கு அரன்அருளால் உதித்த சுரர்களின் முதலா அமைந்த மேலோன்
பின்னம்இலா நுண்ணுணர்வோன் சிவப்பிரகாசப் பெயர்தான் பிறங்கக் கொண்டோன்
உன்னதச் சீர்வெள்ளி அம்பலப்பெயரோன் இலக்கணநூல் ஓதப்பெற்றோன்
தன்னது தேசிகற்கு இகலோன் அஞ்சநிரோட்டப் பனுவல் சாற்றிவென்றோன்

வெங்கைநகர்க் கோவைஉலா கலம்பகமும் விருத்தகிரி விமலன் சீரும்
அங்கையி லிங்காபிடேகத் தொடைஆதியும் புகன்றே அவிரும் அந்நாள்
கங்கையின் மேன்மைப் பொம்ம மாபுரத்தில் தவக்கொலுவில் சாருஞானி
நங்கையர் மாமயல்ஆதி வெறுத்துஉள அந்நாவலன்சீர் நன்குதேர்ந்தான்

### தடுத்து ஆட்கொள்ளல்

தன்னதுஅன்பர் துதித்து உவக்க அவனை உளத்தயை அதனால் தடுத்து ஆட்கொள்ள
அன்னவன்வாய்ப் பனுவல்ஒன்று வேட்டவிதம்ஒருவனைக் கொண்டு அறிவித்திட்டான்
இன்னமொழி வினவிஅன்னோன் மனிதர்மிசை பாடுகிலேன் எனச்சீற்றிட்டான்
பன்னல் உணர்ந்து அஞ்சியவன் போய்ச் சிவஞானிக்கு இதனைப் பகர்ந்தான் கேட்டு

அறுவதனம் பன்னிருதோள் இருசரணம் கதிர்வேல் கொண்டு அணியார்தோகை
பெறுமயில்மீது இருமகளிர் இடைகுலவும் குகனை உள்ளின் பெரிதுநாடி



இறுதியிலா உனதுஅசைவே யாவும்எனில் ஈங்குஇயல்வது என்என்று உள்ளின்
சிறுசினம் எய்தினன்ஓர் சிவப்பிரகாசன்தன் கனவில் செவ்வேல் பெம்மான்

சுகந்தமலர் வகையொடுநார் கரங்கொடுசென்று எனதுகலை தோய்ந்துஞானச்
சுகம்கொள் சிவஞானிஎன்னில் வேறலன்அத் தூயன்மிசை துதிப்பாமாலை
புகம்துஅணிதல் ஆகும்உனக்குஎன் சொல்இசையாத முரண்உறு மேல்இந்தச்
சகம்தெரி பூமாலையாயினும் தொடுத்துச் சாத்துகஎனச் சாற்றலானான்

நனவுஉதித்துச் சிவப்பிரகாசப் புனிதன் மனம்பதறி நான்என் செய்தேன்
சினஅரவத் தண்டைமயில் குமரகுருபரன் அருள்சேர் சிவஞானிக்குஎன்
தனதுகவிகழற இணங்காது உரைத்த பிழைஅகற்றத் தகுமாறு ஈதுஎன்ற
நகநறும் தமிழ்கொடு தாலாட்டு நெஞ்சுவிடுதூதும் அறைந்து சென்றான்

சென்றுநீள் பொம்மபுரத் திருமடாலயத்து ஒளிரும் சிவஞானிப்பேர்க்
குன்றுபோல்வான்முன் அடியற்றமரம் எனப்பணிந்து குவித்த கையும்
கன்று தாய்ப்பசுவை அடைந்து ஆங்கு உடல்நெக்கு உருகக் கனிந்தநெஞ்சும்
ஒன்றுநாவலனை அருள் விழியுறப்பார்த் துஎழுகஎன ஓதிநீறு

தன்கரத்தால் அளித்து இருத்திக் குகன்அருளின் திறநினைத்துத் தமிழ்ப்பாநூல்கள்
நன்குஅறையக்கேட்டு உவகை நனிஅடைந்து நின்உரிமை நயந்து கொண்டேன்
என்கருணைமொழிகூறத் தன்அடியார் களில்சிறப்பு உற்றிட வைத்திட்டான்
தென்கயிலை எனும்பொதியைத் தமிழ்கொடு பிள்ளைக் கவிநூல் செப்பிப் பின்னும்

திருப்பள்ளி எழுச்சியொடு கலம்பகம ஆதியபனுவல் செப்பிப் போற்றி
விருப்பினொடு வெறுப்பும்இலா ஞானநிலை அடைந்து உலகின் மேன்மைதோய்ந்து
பொருப்புஅவிர் காளத்தியின்சீர் பிரபுலிங்கலீலை முதல்புகன்று வாழ்ந்தான்
குருப்பரமன்தயை அடைந்த சிவப்பிரகாசப் புலமைக் குரிசின்மாதோ

## குமார மகிமை

அன்புஉருகிப் பலகாலம் தவம்புரிவார் தமக்கும்எளிது அருளாது எண்ணில்
வன்புறு சோதனைபுரியும் நீதிதெய்வத்தினது உளத்தில் வாய்ந்ததாகும்
புன்புலவாசனை வசப்பட்டு உழலும்என் போல்வாரையும்பல் புனிதவாய்மை
இன்புறச் சொற்றாளும்உயர் கருணைகுருபரன் இதயத்து இயைந்ததாமால்

தெய்வவடி வினைக்கருதி ஒருவன்அருள் பெறுவதினும் தெய்வத்து அன்பாம்
எவ்வழி சொற்றருள் குரவன் தொண்டு புரிந்து ஏத்தி அன்னோன் வியனார்கோல
நைவுஅறச் சிந்தித்து எதுவும் அவன்அலது இன்று எனும்உறுதி நயந்தான்மாயைப்
பொய்வறள் உற்றுஅருள் பெருகிச் சித்திமுத்தி எனும்இரண்டும் பொருந்துமாதோ

குமாரன்என்றும் குருஎன்றும் புகல்வது நிட்களபரத்தின் கூறாய்வேறு
சமானம்இலாது ஒளிர்சகளத்தினுக்கும் உயர்அருள் வலிசேர் தவத்தினோற்கும்
தமாதுஎதிர்நின்று உரியதவநெறி பகர்மேலவற்கும் எனச் சாற்றலாகும்
உமாபதி மால்களிறு குகன் சிவைபரிதி வெவ்வேறு என்றுஉரைக்கு நூலே

அவைமுழுதும் வீன்அன்று ஆரம்ப பக்குவத்தோர்க்கு அகநிலைத்தே
இவைநமது என்றுஉரிமைகொடு வழிபடுதற்குளன முன்னோர் இசைத்ததாகும்
நவைதவிர் பக்குவமுதிர்கால் அனைத்தும் ஒன்றாய்த் தானும்அதா ஞாயம்தோன்றும்
சுவைஅல என்றுஇகழ்ந்து ஒதுக்கில் ஏணிஇன்றி மேடையுறத் துவக்கல் போன்மே

**ஐக்கியப்பேறு**

அங்குஅவன் அவ்வாறுஇருப்பச் சிவஞானதேசிகன் ஓர்ஐஞ்ஞூறாண்டு
மங்கள மெய்அருள் வாழ்வில் திகழ்ந்துபின் சீர்மலிதருவைகாசித் திங்கள்
திங்கள் பதினாறுகலை நிறைபருவம் விசாகஉடுச் சேர்ந்த நாளில்
சங்கரன் மெய்அருளைநினைத்து உரியதன் சீடனுக்கு உபதேசங்கள் சாற்றி

ஆசிரியத்தகை அபிடேகம் புரிந்து பொம்மபுர மணிமயிற்குன்று
ஏசில்புகழ்உறத் தரும பாலனங்கள் புரிந்துவரும் இனிமைத் தொண்டர்
மாசில்கவிவனை புலவோர் ஆதுலர் ஆதியர்தகுதி மதித்துச் செய்யப்
பேசிஉடல் அருள்திருநீறாய் ஒளிரலிங்கமதுள் பிறங்கினானே

**கால அளவைக் குறிப்பு**

முதற்கயிலைக் கணத்தலையாய் அவிர்ந்து உலகில்யோனிசனா முளைத்த சித்தன்
சதத்தள வேதியன் விதிபோய்ச் சகத்திர ஆண்டுஇருந்து கள்ளி தன்பான்மாந்தி
மதப்பிரிவின் பிணக்குஅகற்றி இருந்துஇலிங்கம் ஆயினன்அவ் வல்லோன்தன்கண்ணி
இதத்தயையால் உதித்த சிவஞானியை ஐஞ்நூறு ஆண்டுஇருந்தே ஏய்ந்தான்முத்தி

அதன்பின் இருந்து இதுவரை ஆண்டோர் ஐஞ்நூறு ஆயினஎன்று அறைவர் மூன்றாச்
சுதந்திரம் எய்திய பெரியோனான பாலையன்முன்னோர் சொல்லுமாறே
விதம்படு பல்அறம் விளைத்துப் பின்தனது அன்பனுக்கு அளித்து மேவினானால்
இதம்பெறும் அம்முறையினில் எண்பதினைந்தாய் இயைந்தவன் ஓர்இனியவேந்தல்

## பதினைந்தாவது பட்டம்
## சிவசுப்பிரமணிய பாலைய சுவாமிகள் மகிமை

அன்னவன்தன்பெயர் சிவசுப்பிரமணியபாலையன் என்றுஅறைவார் உண்மை
அன்னஎழில் மயூரகிரிக் குமரன்ஆலயத் தருமவகைகள் செய்து
பொன்அணிமா மேருஎனப் பொலிதரும்அற்புதத் திருக்கோபுரமும் வேலன்
தன்அரிய சிறப்புவிழா மண்டபமும் சுரர்வியப்பச் சமைத்தான் பின்னும்

அக்குமரன்தனது மயூராசலத்துஉற் பவம்சித்தன் அமைந்தவாறு
திக்குஉணரப் பிடிமகளை மறமகளைக் குகன்மணந்த சிறப்புமுன்னாம்
இக்குள மான்மியம் முழுதும் தமிழ்க்கவியில் புராணம்என விளம்புமாறு
தெக்குடையான் அணுகஅரிய பழமலைவாழ் தியாகராசப் பேரோனை

எவிஅரங்கேற்றி அவைத்தலைமை வகித்தவற்காம் இன்சீர்நல்கிப்
பூவில்உளோர் முழுதுஅறிய அதனை அச்சில் பதித்த அரியபுத்தகம்காண்



மேவிடஎங்கும் பரப்பி இருந்தது அன்றிஎம்குருவாய் வேய்வனத்தில்
ஆவிகொடுவந்த தண்டபாணி திருப்புகழ்க்குரிசில் அங்குநேர்கால்

**கலம்பகம் பாடுவித்தல்**

**வேறு**

**தனன தானதன தந்ததன தந்தனா**

பெரிய தோர்மகிழ்வு கொண்டுமுக மன்களே
பிரிய மேவுற விளம்பி அமர் கின்றநாள்
அரிய வானவிட யங்கள் பலவிண்டுநீ
அறுமு கேசன்மிசை வண்தமிழ் வளங்கொடே
விரியும் மேதகு கலம்பகம் இயம்புஎனா
விழையும் ஓர்செயல் அறிந்துதடி செங்கைதோய்
துரிய மாதவன் அரும்பொருள் பொருந்துமா
சுகம்வி ராவிட அறைந்தனன் அதுஅன்றியே 87

**தனன தானதன தத்ததன தத்தனா**

பதிகம் ஓர்இரு விதத்தினில் உரைத்துநீள்
பயன்எலாம் இடுதிருப் புகழ்வழுத்தியே
நிதிகொள் பாலைய முனிக்கொர்பதி கத்தைமா
நியமம் மேவிட வழுத்தினன் அவைக்கணே
புதிய நூல்களை உரைத்து விரிக்கவே
புளகமோடு வினவிக் குகன் அருள்செய்சீர்
மதியினால் அறிதரக் கலைதரித்து அறா
மகிமை நீறுஅதும் அளித்தனன் எடுத்தரோ 88

**தான தத்தனத் தனதன தனதனா**

பாலையப் பெயர்ப் பெரியவன் மயிலம்வாழ்
பாரகுக் குடக் கொடியினன் மகிழஓர்
நூலை மெய்த்திருப் புகழ்முனி சொலவிள்சீர்
நூதனக் கவித் தொடைபுனை தாம்முன்நாள்
வேலை வைத்தகைக் குகன்ஒரு கவிவலான்
மேவு நிட்டையில் பகர்செயல் கருதியே
கோலை ஒத்தகண் கலைமகள் அறிவிலே
கூடி நிற்குநற் புலவர்கள் உணர்வரே 89

**தய்ய தானனத் தன்னன தனதனா**

செய்ய தாமரைக் கண்அரி மருகனூர்
தெவ்வர் வாதுஅறப் பண்ணிடு குமரனூர்
வையம் வானகத் துள்நிகர் அறுநலூர்
வள்ளி வாரணப் பெண்மகிழ் கணவன்ஊர்

பொய்யராம் அவர்க்கு எண்ணவும் அரியஊர்
புள்ளி மாமயில் பண்அவன் மருவும்ஊர்
நைய ஒருயிர்க்கு இன்னல்செய் கிலர்தம்ஊர்
நல்ல பாலையப் புண்ணியன் மயிலமே 90

**தனன தானனத் தானன தனதனா**

அடியராம் அவர்க்கு ஆகிய குரவனே
அமல மோனநிட் டாபர முதல்வனே
இடியை நேர்தொனிப் பாவலர் துணைவனே
எனையனாரும் மெய்ப்பேறு உறஅருள்வனே
கடிகொள்தா மரைப் போதுஉறு திருவுநீள்
கலைமின் ஆளுநத் தாதர மகிபனே
மடிகொள் பாலுடைத் தேனுவை அனையசீர்
மயில மாமலைப் பாலைய முனிவனே 91

**வேறு**

அந்தப் பாலைய முனிவன் சிவகதி அடையும் ததியினில் அடியலார்கள்
சொந்தம் பெறவளர் சுதனாம்அவன்மிசை தோயும் தயைகொடார் சொல்கூறிக்
கந்தன்திகழ் மயிலத்தும் பொம்மபுரத்தும் தருமங்களை நன்கு
சந்தம்பட நடவற்கு அதிகாரம் தந்து அணிலிங்கத் தகைஆனான்
92

**பதினாறாவது பாலைய சுவாமிகள் மகிமை**

அதுபெற்றிட்டவன் அருளியல் உலகியல்ஆகும் இரண்டும் அறிந்திட்டோன்
புதுமைஉறப் பலபணிகள் இகத்தினர் பொருள்கொண்டுஅணி மயிலக்கோயிற்கு
அதுலம் உறச்செய்து அணிநில நீர்நிதி அமைதல் புரிந்து பன்நாள்தங்கிச்
சதுரன்எனப் பலர்புகழ விளங்குபு தண்டணிகைச் சரபன் முன்னாள்

ஓதுகலம்பக நூலினைஎழுதா உயர்பொறியில் புத்தகமாக்கிச்
சாதுசனத் தொகையோர் புலவோர்கொடு சந்தோடிக்க அளித்திட்டான்
கோதுதவிர்ந்த தமிழ்ப் பனுவல்பொருள் கூறிவிளக்கு குணத்தீரன்
பாதுகைஇட்டபதத் தனிலிங்க பதத்தில்அமைந்து பதிந்தானே 94

**பதினேழாவது பாலைய சுவாமிகள் துணை**

பதிந்திடும் அன்னபெரும் தவன்வாழை பரம்பரையா வளர் பண்பேபோல்
வதிந்திடு தொண்டுறு மைந்தினிடம் திருமறைஅபிடேகம் முடிப்பித்திட்டு
அதிர்ந்த குரல்குரு கார்புயவேலன் அருள் கலைசார அமைத்தானான்
முதிர்ந்த சிரத்தை அமைந்துஅறம் யாவும் முடித்து விளங்கினன் முதுபாரில்

பொம்மபுரத்தில் இருந்துஅணி மயிலப் பொற்கிரி அதனிடை புகுகிற்பான்
செம்மயிலக்கிரி உற்றுஉயர் பொம்மத் திருநகர்நாடுபு செல்கிற்பான்



மைம்மலி சோலைகொள் சேய்நகர்கச்சிவளம்பதி ஆதிய வயின்மேவும்
கைம்மலி தொண்டுஉறு பலமடம் அன்பர் கணம்கவனிக்க வகுத்தானே

பொங்குவளம்செறி கொங்குஅமை சிரவண புரநகர்இடை கவுமாரப்பேர்
தங்குமடம்திகழ் பிங்கலம் அன்றுஇடை தவமுயலும் இராமானந்தன்
செங்குண நிதியனை யான்மயிலத்திடை சேரமகிழ்ந்து திறல்செவ்வேள்
கங்குதவிர்ந்தகல் சந்நிதி பூசனை கண்டு கலம்பகம் எனும்நூலை

மறுமுறை அச்சில் அமைத்திடு புத்தகம் வந்திடு தொண்டர் பெறத்தந்து
நறுமலர் மாலைகள் கண்டொடு சந்தன நன்கு வழங்கி நலம்செய்து
குறுநில மன்னவர் அன்னவர் அன்பொடு கும்பிடநீறு கொடுத்தேதீங்கு
அறுதமிழ்நாவலர் பாவினம்ஓதுதல் அன்பொடு வினவிம கிழ்ந்தானே

**பதினெட்டாவது பாலையசுவாமிகள் நிகழ்ச்சி**

**வேறு**

இன்னணம்பல் காரியம்செய்து இருந்து பொன்னுசாமிப்பேர்
பன்னநிகழ் பாலையன் பதினேழாம் பதவியினில்
அன்னர் வசித்து இருந்து கதிநன்கு அடையும் தினநேர்கால்
கொல்நகுகல் வித்திறமார் குமாரசாமிப் பெரியோன் 100

உலகவியல் வேதவியல் உலைவில் பொதுவியலனைத் துஞ்
சலனம்அறத் தெரிந்து இயற்றும் சதுரப்பா உறுமேலோன்
கலகமத வாதர்சொல்லால் கலங்காமல் கவுமார
நலமதனைப் பொதுச்சிறப்பில் நன்குபொரும் துறவுக்கொண்டோன்

சத்துமுதன் மூன்றுமாம் சற்குருவே எல்லாம்என்று
உய்த்து உணர்ந்து கொலைபுலையற்று ஒளிர்புராணச் சரித
நத்துமடிப் படைஎன்ன நவின்று உரிய வீரசைவ
வித்துவசேகரன் ஆகிவிளங்கு தவத்துறை செல்வோன் 102

அன்னவனுக்கு உளதன்மடத்து ஆதீனத் தலைமைதர
முன்அமைந்த பெரியோர்செய் முறையில் உபதேசம்அது
பன்னலுடன் தவவேடம் பரிப்பஅளித்து ஆசிரியன்
என்னவன் அபிடேகமும்நன்கு இயற்றி இலிங்கம் அதுஆனான் 103

இந்தவிதம் இயலல்கலி இசையும் ஐயாயிரத்து இருபான்
வந்த ஒன்பதெனும் பிரபவப் பெயர் ஆண்டு அன்றுமுதல்
வெந்தகுவர் குலம்பொடித்த வேலவன்தன் மயிலத்தும்
பொந்தவிர் மாம்பொழின் மலிவார் பொம்மபுரத் திருமடத்தும் 104

சிறப்பொடுபூ சனைபலவும் சிந்தைஉவப் பொடுநடத்தி
அறத்தலையாம் எனமறைசொல் அன்னதானமும் புரிந்து

குறப்பெண்ணொடு சுரர்பிடியும் கொள்குமர குருபரவேள்
உறத்தகுதென் மயூரகிரிக்கு ஒரு விளக்குஒத்து ஒளிர்ந்து உள்ளான் 105

சித்தர்புகழ் தருகுகவேள் சீர்திகழ் பங்குனிமதியில்
உத்தமர்கண்டு உயக்கொள்ளும் உயர்விழா வினில்செலுத்தும்
வித்தகத்தேர் முதலியபல் வியன்பணிகள் இயற்றிஇயல்
புத்தகத்தை வாணிஅருள் பொருந்தி விளங்குகின்றானே 106

திருமகளால் பொருட்பொலிவும் சீர்கொள்கலை மகளாகும்
அருமகளால் கல்விநலம் அதுவும்எழில் பரைஎனச்சொல்
ஒருமகளாம் அருள்வளமும் உறக்குலவும் சிவஞானி
பெருமரபு குகன்அருளால் பெரிதுஉலகில் பிறங்குகவே 107

முதற்பால சித்தன்அருள் முதிர்ந்துவரு சிவஞானி
இதப்பாரில் விளைத்தகதை இன்னம் அளப்பில எனலாம்
சுதப்பான்மைத் தொண்டர் சொலும் தொகுப்பில்உள வரைதுலக்கிப்
பதப்பாவால் அதன்தொடர்பும் பகர்ந்துஒருவா முடித்தேனால் 108

கலிஐயா யிரத்துமுப்பான் இரண்டு என்னக் காசினியோர்
சொலிவழங்கும் எழில்பிரமோ தூதத்தின் மாசிமதி
மெலிவில் புகழ்க் குமாரசாமிப் பெயர்ப் பாலையன் உரையான்
மலிஅருள்சீர்ச் சிவஞானி மான்மியமியான் வகுத்தேனே 109

மந்திநேர் மனத்தொடர்பால் வருந்திஅருள் குருபரன்தாள்
புந்தியால் தினம்பரவும் புனிதர்திரு அடிக்குஅன்பர்
செந்தினாயகப் பெயரோன் செப்பியஇந் நூல்பிழைகள்
சிந்தியாது ஏற்றுஅருள்க செந்தமிழ்ப்பா வல்லோரே 110

**சிவஞான தேசிகப் பிரதாப முற்றிற்று**
**பாயிரம் உட்பட, கவி- கக0**

**வாழ்த்து வெண்பா**

மயிலைமலை வாழ்கபொம்ம வண்புரமும் வாழ்க
கயிலைமலைப் பாலசித்தன் கண்பால் - அயிலும்
சிவஞானி வாழ்க திருநீறு கண்டி
தவசீலர் வாழ்க தழைந்து

**குருபாதமேகதி**
**வேலுமயிலுந்துணை**



## வசனம்

சகல வளப்பங்களும் பொருந்தியதாய் விளங்கும் கன்னட தேசத்திலிருந்து சிவபிரான் உரைப்படி மல்லிகார்ச்சுன பர்வத முதலிய தலங்களைத் தெரிசித்து அருள்அடைந்து, அரசராதியோரால் அன்புகூர்ந்து அளிக்கப்பட்ட பல சிறப்புகளுடன் சிதம்பரத் தலத்தில் மடாலயம் வகுத்து அடியார்கள் மகிழ விளங்கியவர் ஸ்ரீபச்சைக்கந்த தேசிகர் என்னும் வீரசங்கமர் ஒருவர். அவரது மரபில் அம்மவை என்னும் பெயர்உள்ள ஓர் அம்மையார் பிறந்து பருவம் அடைந்து மணவினை முற்றி இல்வாழ்க்கையில் அமைந்தும், புத்திரப் பேறு இல்லாத குறையால், மனச்சலிப்புற்று, ஆன்ம ஈடேற்றத்துக்குரிய அவதாரமாய் வந்து முருகப்பெருமான் திருவருள் பெரும் செல்வத்தில் அமைந்து சித்திகள் இயற்றி விளங்கும் ஸ்ரீபாலசித்தரைச் சரண்புகுந்து விண்ணப்பிக்க, அவர் கருணை மிகுந்து தமக்கு நித்தமும் சதுரக் கள்ளியின்பால் கறந்து சமர்ப்பிக்கும் பணிவிடை புரியக் கட்டளை இட்டனர். அம்மையார் அவ்வாறு நியமத்துடன் இயற்றி வந்தனர். ஓர்நாள் சித்தர் தாம் உண்ட நிவேதன சேடமாகிய கள்ளிப்பாலைக் கொடுத்து, உண்ணுமாறு கூற அணுவளவும் தடையின்றி உண்டார். அதுமுதல் அம்மையார் தெய்வீகக் கருஅடைந்து அரியஒரு புத்திரனைப் பெற்றது கண்டு தேவர்ஆதியோர் புகழ்ந்து வாழ்த்தினர். அம்மகன் மிகச்சிறப்பாக வளர்ந்து சித்தரது தொண்டில் அமைந்து நின்றனன்.

சித்தர் பெருமானது விருப்பத்துக்கு முன்னமே அருள் செய்தபடி முருகன் அந்தப் புத்திரனுக்குக் குருவடிவக் காக்ஷி அளித்து, உண்மை ஞானமும், தவவேடமும், குருத்துவமும், சிவஞானதேசிகன் என்னும் நாமமும் வழங்கிப் பொம்மபுரத் திருமடத்தில் பரம்பரையாகத் தொண்டர்கள் பரவ விளங்குக என்று அறைந்து பின் சித்தரும் தாமும் மயூராசலம் வந்து முன்சூரபன்மனுக்குக் கூறிய உரைப்படி உபயதேவியர் சகிதம் திருக்கோயில் கொண்டு அமர்ந்து அருளினார்.

அவ்வாறு சித்தருடன் விளங்கிப் பலநாள் அமர சித்தருக்கு ஆயிரம் வருடம் நிறைந்ததால் முருகன் கருப்பகிருகத்தின் தெற்கில் உள்ள சிவலிங்கத்தில் திருஉருவை மறைத்து ஐக்கமாயினர். இவ்விவரங்கள் தெரிந்து பொம்மைய புரத்தில் இருந்த சிவஞான முனிவர் மயூராசலம் வந்து முருகன் எதிரிலும் பாலசித்தர் ஐக்கஸ்தானமான சிவசந்நிதியிலும் வணங்கிப் பலவாறு அன்புடன் துதித்துச் சிலநாள் தங்கிப் பின் மயூரகிரியிலும் பொம்மபுரத்திலுமாக நித்திய நைமித்திக தருமங்களைக் குறைவின்றி நடத்தியிருந்தார்.

அவ்வாறு இருக்கையில் உலகில் பக்திமான்களுக்கு அருள்புரியும் சங்கற்பத்தால் அன்பிர் சூழப் புறப்பட்டு காஞ்சீபுரத்தை அடைந்து ஸ்ரீஏகாம்பரநாதரைத் தெரிசித்துத் தங்கியிருந்தனராக, அங்குள்ள ஒருவன் சர்ப்ப விடத்தால் மயங்கியது கண்டு திருநீறு அளித்தார். உடனே அது தெளிந்து பிழைத்தனன். இது விஷயம் பலர் கூறக் கேள்வியுற்று அந்நாட்டுக்குப் அப்போது அரசனாயிருந்த மிலேச்சன், சுவாமிகளை அடைந்து தனது மனைவிக்கு உள்ள சூலைநோயை நீக்கும்படி வேண்ட, சுவாமிகள் நீ ஏகாம்பரநாதர் ஆலய நிபந்தங்களைக் குறைத்தனை. அவற்றை விடுக என்று ஓதி, தமது திருக்கரத்தால் விபூதி கொடுத்தார். உடனே அந்நோய் முற்றிலும் நீங்கிற்று. அவ்விசேடம் கண்ட அரசன் மகிழ்ச்சி மிகுந்து மேலும் பன்மடங்கு ஆலயத்துக்கு நிபந்தம் அமைத்துச் சுவாமிகளுக்கும் திருமடம், பூமிகள், விருதுகள், அநந்தம் ஏற்படுத்தி வணங்கினான்.

சிலகாலம் அங்கு வசித்து அன்னதானம் முதலிய தருமங்கள் இயற்றிவந்து பின் அவ்விடம் விட்டுப் பல இடங்கள் சென்று, செய்யூர் என்னும் பதிக்குச் சென்றனர். அங்கு உள்ளார் சிலர் இவரது தவப்பெருமை அறியும் தகுதி இன்றி வீரசைவர் என்று வெறுத்து, வஞ் சகம் கலந்த மனத்தால் இரண்டு மண்குடத்தில் வெள்ளைக் கல்லையும், மணலையும் நிறைத்து மூடிக் கொண்டு வந்து வைத்து வணங்கினர். இவ்விதம் அருளால் உணர்ந்த சுவாமிகள் ஒருவரை நோக்கி அவற்றை எடுத்து அனைவருக்கும் விநியோகிக்கும்படி ஆக்ஞாபித்தனர். அப்போது கற்கண்டும் சீனியுமாய் இருக்கக் கண்டு வியந்து மகிழ்ந்து பணிந்து அநேக நிலங்கள் வழங்கி மடாலயமும் அமைத்துச் சமர்ப்பித்தனர். அவற்றை ஏற்றுக் கொண்டு சிலகாலம் தங்கிப் பின் சிதம்பரம் சென்று சிவகாமசுந்தரி சமேத நடராஜப் பெருமானது பஞ்சகிர்த்திய நடனம் தெரிசித்து ஆனந்த பரவசராய்ப் பலநாள் இருந்து பின் காவேரி வடகரைச் சிவதலங்கள் பல, தென்கரைத் தலங்கள் பல, தெரி-சித்துப் பாண்டிநாட்டின் முகம்போன்று சிறந்து ஞானசம்பந்தாதி சமயாச்சாரியார்களால் துதிக்கப் பெற்றதான மதுராபுரி அடைந்து வையை ஆற்றில் நீராடி நியமங்கள் முடித்து, ஸ்ரீமீனாக்ஷியம்மை சோமசுந்தரக் கடவுள் சந்நிதிகளில் தெரிசித்துக் களித்திருந்தனர்.

அந்நாள், அந்நகரத்தில் ஒரு தையல் வேலையாளன், அறுபத்துநான்கு திருவிளையாடல்களையும் அரிய சித்திரப்படாம் ஒன்றில் அமைத்துத் தைத்து மீனாக்ஷி சந்நிதியில் சமர்ப்பித்து, அவள் அருளால் புத்திரப் பயன்பெற விரும்பி வந்தனன். அம்பிகை அவனிடம் தோன்றி அந்தப் படாத்தைச் சிவஞான முனிவருக்குக் கொடுக்கும்படி கூற, அவ்வாறு அவன் சமர்ப்பித்து விண்ணப்பித்தான். அதுகண்ட சுவாமிகள்



கருணையுடன் மீனாக்ஷியம்மையைச் சிந்தித்து விபூதி உதவினர். உடன் அவன், இளமைப்பருவமும் மகப்பேறும் செல்வமும் பெற்று மகிழ்ந்தனன்.

அவ்வாறு பல அற்புதங்கள் இயற்றி இருந்து பின் தமது ஆஸ்ரமத்தானமாகிய பொம்மபுரத் திருமடம் சேர்ந்தனர்.

சுவாமிகளுடைய திருஅருள் மகிமை தெரிந்து வந்து வணங்கி விண்ணப்பித்து மனக்குறை தீர்த்தோரும், நோய் நீங்கினோரும், பூத பைசாச பீடிதம் தவிர்ந்து இருந்தோரும், உத்தம உபதேசம் பெற்றோரும், அளவிலர் ஆயினர். அதுகண்டு அங்குள்ள மாந்திரிகன் ஒருவன் அழுக்காறு கொண்டு சுவாமிகளை நாட்டைவிட்டு அகற்ற எண்ணி, செஞ்சி நகரில் அப்போது அரசாண்டு இருந்த திரியம்பகன் என்பவனிடம் சென்று வணங்கி நின்று உனது ஆளுகைக்கு உட்பட்ட பொம்மபுரத்தில் சிவஞானி என்னும் ஒரு போலித் தவசி உள்ளான். பலரை வஞ்சித்துத் தன்னிடம் அருளிப்பதாக நடித்து வருகின்றனன். அவனைச் சோதித்து அப்புறப்படுத்துக என்றனன்.

அதுகேட்ட மன்னன், ஐயமுற்றுத் தனது மகள் பிறந்தது முதல் வெண்மயிர்த் தலையினளாய் இருப்பவளையும் உடன்அழைத்துப் பொம்மபுரம் சென்று சுவாமிகளை வணங்கி விண்ணப்பித்தனன். சுவாமிகள் திருவுளக் கருணை சுரந்து ஞானமயமான வெண்ணீற்றை எடுத்துப் பெண்ணின் தலையிலும் நெற்றியிலும் தரித்தவுடன் மேகம்போன்று கூந்தல் கறுத்து விளங்கியது. அதுகண்ட அரசன் புகழ்ந்து வணங்கினான். முன்சொன்ன மாந்திரிகன் வருந்தியவனாய், அரசனை நோக்கி இந்த முனிவன் செய்வது தந்திரமே அன்றி அருள் அன்று, என்னையும் அவனையும் கடலில் கொண்டு தள்ளி விட வேண்டும். கரைக்கு விரைவில் வருத்தம் இன்றி வருகின்றவர் அருள் உடையவர் என்று உறுதி பண்ணிக் கொள்ள வேண்டும் என்றான். அந்தப்படி சுவாமிகளும் உடன்படுவது அறிந்து இருவரையும் தோணியில் ஏற்றி அரசன் கடலில் நெடுந்தூரம் சென்று நீரில் இறக்கி, தான் கரைக்குத் திரும்பினன். அவன் வருவதற்குள் சிவஞானதேசிகர் கரையில் யாதொரு சேதமின்றி வந்து அமர்ந்திருப்பதை அரசன் கண்டு பயந்து வணங்கித் தேவரீரது பெருமை அறியாத மூட மாந்திரீகன் வராதது என்னென்று வினவ, அவன் ஒரு மீனால் விழுங்கப்பட்டான் என்று கூறினார். அரசன் பின்னும் வணங்கி, அவனை வருவித்து ஆட்கொள்ளுமாறு வேண்டியதால் அவ்வாறு புரிந்தார். அதன் பின் அரசன் பொம்மபுரத்துக்கு அளவிறந்த மானியங்கள் விட்டும், மடாலயத் திருப்பணிகள் இயற்றியும் பல விருதுகள் அமைத்தும் பக்தி பண்ணினன்.

பின்னொரு சமயத்தில் விருத்தகிரியில் அரசாண்ட சிற்றரசன் சிதம்பர பூபதி என்பான் பகைவரால் கலங்கி மனம்சலித்து ஐயமேற்றருந்தித் தவநெறி பயில எண்ணிச் சுவாமிகளை அணுகிஇருந்தனன். அந்தக் குறிப்பு அறிந்த சுவாமிகள் திருநீற்றால் கடாக்ஷித்து பகைவரைச் செயங்கொண்டு அரசுரிமையில் அமையச் செய்தனர்.

இவ்வாறு இருக்கும் காலத்தில் சிவப்பிரகாச சுவாமிகள் என்பவர் வீரசைவ நெறியில் சிறந்தவராய்க் கல்வித் திறம்மிகுந்து விளங்குபவர் எனச் சுவாமிகள் உணர்ந்து அவரைத் தடுத்து ஆட்கொள்ளும் தமது ஆதீன பக்திக்குரிய தொண்டர்களுக்குப் பயன்படு நிமித்தமாயும், ஒரு பிரபந்தம் பாடுமாறு தெரிவித்தனராக, இதுகேட்ட அவர் மனிதர்மீது பாடேன் எனச் சினந்தமை கண்டு அஞ்சித் திரும்பிய தொண்டர் வந்து, சுவாமிகளிடம் சொல்லினர். சுவாமிகள் அப்போது முருகனைச் சிறிது நினைத்தார். முருகன் சிவப்பிரகாச சுவாமி கனவில் சென்று பூவும், நாரும் காட்டி, 'எனது கலையாகி விளங்கும் ஞானதேசிகனுக்கும் எனக்கும் பேதமன்று. அவனைத் துதிக்கலாம். என்மொழி உனக்கு இசையாது ஆகில் இந்தப் பூமாலையேனும் தொடுத்து அணிக' என்று ஓதியதால் விழித்தெழுந்து மனம் பதைத்து இத்தகைய அருள் திறமையுள்ள பெரியாரது தகுதியை எண்ணாமல் தடைசொன்ன பிழையை நிவிர்த்திப்பதற்கு இதுவே வழிஎன்று நெஞ்சுவிடுதூது, தாலாட்டு என்னும் பனுவல்களை இயற்றிக் கொண்டு பொம்மபுரத் திருமடம் சென்று சிவஞான தேசிகரது திருவடியில் வணங்கிப் பிரார்த்தித்தது கண்டு சுவாமிகள் திருக்கண்ணோக்கம் புரிந்து திருநீறு வழங்கி, பிரபந்தங்களை அவர் அன்புடன் ஓதக்கேட்டு மகிழ்ந்து, தமது அடியவர்களில் சிறந்து விளங்கக் கிருபை செய்து அமைந்தனர்.

பின், காலக்கிரமத்தில் அந்தச் சிவப்பிரகாச சுவாமிகள் சிவஞானதேசிகர் மீது கலம்பகம், பிள்ளைக்கவி முதலிய நூல்கள் இயற்றித் துதித்தனர். பொதுவாகத் தெய்வபக்தி செய்திருந்த காலத்தை விடச் சிறப்பாகக் குருபக்தி செய்தபின் சிவப்பிரகாச சுவாமிகள் அடைந்த நன்மைகள் அளவிலவாகும் என்னலாம்.

இவ்வாறு பலவிதமான அருள் விளையாடல்களை நடத்தி, 'செயற்கரிய செய்வார் பெரியர்' என்ற வேதவாக்கியத்துக்கு இலக்கியமாய் அமைந்த சிவஞானபாலைய தேசிக சுவாமிகள், முருகனது திருவுளக் குறிப்பின்படி ஐந்நூறு வருடம் நிறைவேறியதால் செந்திலம் பதிபோல் கடலோசைமிகுந்து, தென்னை, மா, பலா, வாழை முதலிய சோலைகள் அடர்ந்து விளங்கும் பொம்மையபுரத் திருமடத்தில் அமைக்கப்பட்ட ஒடுக்கம் என்னும் குகையில் நிட்டை கூடி, வைகாசி



மாதம் பௌரணையும் விசாகமும் கூடிய தினத்தில், தமது கற்பகத் திருமேனியைத் திருநீற்றுக் கற்ப வடிவாக்கிச் சிவலிங்க சொருபத்தில் ஐக்கமுற்றனர்.

அவ்வாறு அடையும் தருணத்தில் தமது அடியவர்களில் ஏற்ற ஒருவர்க்கு ஆசாரியா அபிடேகம் இயற்றி ஆதீன பரம்பரைக்குரிய சம்பிரதாயங்களை விளங்கக் கூறி அமைத்தனர். அவரது கடாக்ஷத்தாலும் குகன் அருளாலும், அதுமுதல், அங்கு அமைந்த சுவாமிகள் மயூராசலத்திலும், பொம்மபுரத்திலும், காஞ்சி, செய்யூர் முதலிய பல நகரங்களிலும் தருமங்களைக் குறைவற நடத்தியும், ஞானராஜதானி என்று உலகம் புகழ, அருளியல், உலகியல் இரண்டும் தழுவியும் விளங்குவதாயினர்.

முதற்பால சித்தரிலிருந்து வாழையடி வாழைபோல் வந்துள்ள தொடர்பில் பதினைந்தாவது பட்டத்தில் வந்து அமைந்தவர் சிவசுப்பிரமணி பாலைய தேசிகர் என்னும் திருநாமத்துடன் விளங்கி, மயூராசலத்தில் ஸ்ரீசுப்பிரமணியக் கடவுளது ஆலயத்திருமதில், அலங்கார மண்டபம், கிழக்குத் திசைத் திருக்கோபுரம் முதலான அரிய திருப்பணிகள் அநந்தம் இயற்றியும், திருநெல்வேலியில் அவதரித்த, மஹான் வண்ணச்சரபம் ஸ்ரீலஸ்ரீ தண்டபாணி சுவாமிகளைச் சந்தித்து அளவளாவி, முருகனுக்கு அரிய கலம்பகம் இயற்றுவித்து அரங்கேற்றல் வினாவியும், விருத்தகிரியில் இருந்த தியாகராஜகவி என்னும் புலவரைக் கொண்டு, பாலசித்த பெருமானது திருவருள் விளங்க மயூராசல புராணத்தைத் தமிழில்பாடி அரங்கேற்றுவித்தும் அதனை அச்சிட்டு உலகில் பரவ வைத்தும், விளங்கி இருந்தடைந்தார். அதன்பின் பதினாறாவது பட்டத்துச் சுவாமிகள், அநந்தமான திருப்பணிகள் இயற்றியும், பல தொண்டர்களுக்குக் குருபக்தி விளையப் பிரசங்கிக்கும் பண்பமைந்தும் இருந்து மயிலாசலக் கலம்பகத்தை அச்சுவாகனம் ஏற்றி உலாவச் செய்து மகிழ்ந்தும், பலகால் இருந்தடைந்தனர். பதினேழாவது பட்டத்துச் சுவாமிகள் முன்னோர் முறைப்படி லௌகிக வைதிக தருமங்களைச் சரிவர நடத்தும் ஆற்றல் அமைந்து வஞ்சகம் அற்ற நெஞ்சகம் உற்றவராய் இருந்தும், மயிலாசக் கலம்பகத்தை மறுபதிப்பு அச்சிட்டுப் பரப்பியும், கொங்கு நாட்டில் சிறந்த சிரவண புரத்தில், கௌமார மடாலயம் வகுத்துக் கனகசபை ஆலயத்தில் தவஞான நிட்டையில் இயற்றும் ஸ்ரீலஸ்ரீஇராமானந்த சுவாமிகள், முருகன் அருள் செயலால் மயூராசலம் வரக்கண்டு மகிழ்வுடன் சந்தித்து அருமையுறக் கலந்து உறவு பூண்டும் இருந்து பின் அடைந்தார்.

அதன்பின் பதினெட்டாவது பட்டத்தில் இப்போது அமைந்து, குமாரசாமி ஐயர் என்னும் பூர்வாச்சிரம நாமத்தை உடைய சிவஞான பாலையசுவாமிகள், ஸ்ரீவல்லி தேவசேனா சமேத சுப்பிரமணிய மூர்த்திக்கு, பங்குனிமாதம் உத்திரத்தில் நிகழும் பிரம்மோற்சவத்தில் செலுத்துதலுக்குரிய அழகிய இரதம் முதலான திருப்பணிகள் இயற்றியும், பொம்மயபுரம் மயூராசல முதலிய இடங்களில் உள்ள சகல விவகாரங்களையும் குறைவற நடத்தியும், வடமொழி, தென்மொழிப் புலமையும், சமய பேதவாதமற்ற சமரச நிச்சய விவேகமும், தமது ஆதீன குருத்துவத்துக்கு ஏற்ற வீரசைவ தீக்ஷாதிகாரத் தகுதியும், ஆசார நிஷ்டா நியமமும், பொருந்தியும் விளங்கியுள்ளார். ஸ்ரீசிவசுப்பிரமணிய குமரகுருபரர் முருகக் கடவுள் கிருபையால், ஸ்ரீசிவஞான பாலைய தேசிக பரம்பரை நீடூழி நிலைத்துப் படர்ந்து விளங்குவதாக. சுபம்.

**முற்றிற்று.**

**கொச்சகக் கலிப்பா**

பொம்ம புரமும் புவியும் புரந்து அருளும்
செம்மல் சிவஞானி சீர்உணரச் செய்யும்இடம்
கைம்மலரால் செவ்வேள் கடவுளையே பூசிப்பார்
மம்மர் அறுப்பான் வளர்ந்த மயிலா சலமே

## சிவஞானதேசிகன்

## திருவடி வாழ்க







'பேறுஎலாம் பெறஅடைந்தவர் தமக்குஅருள் பெம்மான்
ஆறுமாமுகப் பரன்உயர் சித்தனோடு அமர்ந்த
மாறுஇலா வளமயில் மலைநகரின் மாண்பு அணைத்தும்
கூறல்ஆவதோ ஒருவரோர் நாவினைக் கொண்டே'

என்று நூலாசிரியர் மயிலத்தின் பெருமையைக் கூற, 'ஒருவரின் ஒருநாவால் எவ்வாறு இயலும்' என வியப்பது இந்நூலுக்குப் பாயிரம் வழங்கியவர்களைப் போலப் பிறரையும் படிக்கத் தூண்டுவதாக அமைகிறது.

தமிழுக்கும் பக்திக்கும் பெருமை சேர்க்கும் இந்நூல் நம் மயிலத்துக்கும் திருமடத்துக்கும் மட்டும் உரியதன்று. ஆன்றோர், சான்றோர் யாவருக்கும் உரியதாக வேண்டும் எனக் கருதியே இத்தனை நாள் புதைந்திருந்த இப்பெட்டகத்தை உலகறிய மீண்டும் பதிப்பிக்க விரும்பினோம். இந்நூல் ஒவ்வொரு அன்பர் உள்ளத்திலும் இல்லத்திலும் நிறைய வேண்டிய நூலாகும்.

- ஸ்ரீசிவஞான பாலய சுவாமிகள்
20ஆம் பட்டம்

ISBN. 978-81-926955-3-2

